



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# 1933 பத்தாண்டு ஆட்சி மலர் 1943



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகள்

# பத்தாண்டு ஆட்சி மலர்

1933—1943

தருமபுர ஆதீனம்

உ

குருபாதம்

## பதிப்புரை

திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீன 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பீடாதிபத்தியம் ஏற்றுப் பத்தாண்டாகிறது. இவ்வாதீன பரம்பரைச்சிறப்பு, வரலாறு, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் ஆட்சிக் குறிப்புகள், சைவ சித்தாந்த ஆராய்ச்சிக் குறிப்புகள் முதலியன தமிழிலும் ஆங்கிலத்திலும் இம்மலரில் ஒருவாறு சுருக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன.

இஃது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் பத்தாண்டு ஆட்சி விழா மலராக வெளிவருகிறது.

---

# உள்ளுறை

# பட அட்டவணை



1. பொல்லாப்பிள்ளையார்.



திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# திருக்கயிலாய பரம்பரைச் சிறப்பு

திருச்சிற்றம்பலம்

தாதார்கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார்பாக மாகவைத்த புனிதர்பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனு யறநான் கருள்செய்த
காதார்குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே.

பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

திருச்சிற்றம்பலம்

உலகந் தொழப்படு மொருமுழுமுதல்வன் என உயர் மறைகளா னெடுத் தோதப்படும் பரமசிவன் பிரமாண்டத் துள்ளே திருக்கயிலை மால்வரையின்கண் ஸ்ரீகண்ட சரீரசரீரியாய் எழுந்தருளியிருந்து பிரமவிட்டுணு முதலிய தேவர்க்கும், சுவேதர் உபமன்னியு முதலிய முனிவர்க்கும், கண்ணன் அருச்சுனன் முதலிய மக்கட்கும், அறுபத்துமூவர் முதலாயினோர்க்கும் அவரவர் நிலைமைக்கேற்ப அருள்செய்யு மியல்பினராவர். அவர் ஆன் மாக்கள் தம்மையுணர்ந்து வழிபட்டு வீடுபெற்றுய்யுமாறு திரு வுளங்கொண்டு பொருளியல்புணர்த்தும் வேதாகமப் பொருட் டுறைகளைக் கன்மசித்தாந்த சந்தானம், ஞானசித்தாந்த சந் தானம் என இருதிறப்பட நிகழும் குருபரம்பரையின்கண் வைத்து, அவ்வேதாகமவழக்கை இவ்வுலகின்கண்ணே நிலவச் செய்வர். அவரே இந்நிலவுலகிற் றொன்றுதொட்டு நடைபெற்று வருங் குருமரபிற்கெல்லாம் முதற்குருநாதராவ ரென்பது,

श्रीकान्तद्रुहिणोपमन्युतपनस्कन्देन्द्रनन्द्याद्यः
प्राचीना गुरवोऽपि यस्य करुणालेशाद्गता गौरवम्।
तं सर्वादिगुरुं मनोज्ञवपुषं मन्दस्मितालंकृतं
चिन्मुद्राकृतमुद्रपाणिनलिनं चित्ते शिवं कुर्महे॥

என்னுஞ் சிகரணிமாலை முதற் சுலோகத்தானும்,

"திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வே ளாதி
தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி [வாய்ந்த
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும்
வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்"

என்னும் அதன் மொழிபெயர்ப்பானும் விளங்கும்.

அற்றேல், ஆன்மாக்கள் வீடுபேறடைதற்பொருட்டுச் சிவனை யறிந்து வழிபடவேண்டுமென்ற தென்னையெனின், வீடுபேறு சிவனையறியும் அறிவில்வழி உண்டாகாதென்பது சுவேதாச்சுவதர உபநிடதத்தில்

"यदा चर्मवदाकाशं वेष्टयिष्यन्ति मानवाः।
तदा शिवमविज्ञाय दुःखस्यान्तो भविष्यति॥" *

---

* இம்மந்திரத்தின் பொருளும், இதற்கு உபபிருங்கணமான வாமன புராணத்து வசனமும் அரதத்தாசாரியர் அருளிச்செய்த சுருதிசூக்திமாலை 142-ஆம் சுலோக வுரையிற் காண்க. இனித் தமிழ்மொழிக்கண்

"பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மீண்டே
விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைது மென்கை
யுருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ"

எனக் கந்தபுராணத்தும்,

"மானுடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்லோ னயின்
ஈனமில் சிவனைக் காணு திடும்பைதீர் வீடு மெய்தும்
மானமார் சுருதி கூறும் வழக்கிவை யாத லாலே
ஆனம ரிறையைக் காணு முபாயமே யறிதல் வேண்டும்"

எனக் காஞ்சிப் புராணத்தும் வருவனவும் அச்சுருதிப்பொருள் போதிப்பனவே யாம்.

என்னும் மந்திரத்தான் வலியுறுத்தப் படுதலான் என்பது. இம் மந்திரத்தின் பொருள் "ஒருவன் ஆகாயத்தைத் தோல் போற் சுருட்டுதல் வல்லனுயின் சிவனை யறிதலின்றித் துன்ப முடிவைப் பெறும் (துன்பத்தினீங்கி வீட்டினைத் தலைப்படும்)" என்பது.

சுவேதாச்சுவதரம் ஏனையுபநிடதங்களினும் வலியுடைத் தாதல் திராவிடமாபாடியத்து முதற்சூத்திரம் இரண்டாம் அதி கரணத்து விளக்கப்பட்டது.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனுரும்

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு" * (திருக்குறள் 354)

என்பதனுல் "மெய்யுணர்வுடையார்க்கே வீடுளதெ"னக்கூறி,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு" (திருக்குறள் 358)

என்பதனுல் "மெய்யுணர்வாவது வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய செவ்விய பொருளைக் காண்பதே" எனவும், "அம்மெய்யுணர் வொன்றே பிறப்பிற்குக் காரணமாய பேதமையைக் கெடுக்கும்" எனவும் உணர்த்துகின்ருராகலின் மேற்காட்டிய சுருதியின்

---

* இவ்வருமைத் திருக்குறளின் பொருள்

ஊறினு ரோசையுள் ளொன்றினு ரொன்றிமால்
கூறினு ரமர்தரும் குமரவே டாதையூர்
ஆறினர் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினர் வழிபடுந் தென்குடித் திட்டையே

என்னுந் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருவாய்மலர்ந்த தேவாரத்தினும் வருதல் காண்க.

முடிபே தமிழ்நூல்களுக்கும் முடிபாதல் காண்க. சிவம் எனினும் செம்பொருள் எனினும் ஒக்கும். சிறப்பு-வீடுபேறு. *

அற்றேல் மெய்ந்நெறிபற்றிய வுண்மைகள் வேதாந்த மெனப்படும் பரசுருதிகளினும், அவற்றின் சித்தாந்தந் தெருட்டுஞ் சிவாகமங்களினுங் கூறப்படுதல்போலச் செந்தமிழ்ப் பொதுமறையாகிய திருக்குறளின்கண் சிறந்தெடுத்துக் கூறப் படாமை என்னையோவெனின், திருக்குறள் என்பது, வேதம் போல, உலகத்தார் உய்தற்பொருட்டு உலகியல் நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதாகலின், அதன்கண் அவை பொதுப்படக் குறிப்பாகவே யுணர்த்தப்படும்; அதுபற்றியே அது பொதுமறை எனப்படுவதாயிற் றென்க. மெய்ந்நெறியினை யுணர்த்தும் நூல்கள் ஆன்மாக்களின் அறிவின் கண்ணதாகிய ஏற்றத் தாழ்வுபற்றிய தகுதி வேறுபாட்டிற்கேற்பத் $ தூலாருந்ததி நியாயம்பற்றிப் பொதுவுஞ் சிறப்பும் என இருவகைப்பட நிகழும் என்பது சிவஞான சித்தியாரின்கண் ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகளால் சன்மார்க்கத்தின் இலக்கணங் கூறு மிடத்து,

> " * * * மேலாம்
> பதி பசு பாசந் தெரித்துப் பரசிவனைக் காட்டும்
> நன்மார்க்க ஞானம்"

என ஞானசாத்திரத்தை விசேடிக்கு முகத்தான் உணர்த்தப் பட்டது. அது,

"பதி பசு பாசந்தெரித்தலாவது அம்மூன்று பொருளையுந் தடத்தலக் கணத்தின் வைத்து வகுத்துணர்த்துதல். பரசிவனைக் காட்டலாவது அம்

---

* 'எல்லாப்பேற்றினுஞ் சிறந்தமையின் வீடு சிறப்பெனப்பட்டது'. அஃதப் பொருட்டாதல் 'சிறப்பீனும் செல்வமு மீனும்' (திருக்குறள் 31) என்றத னுனும், 'காமஞ்சான்ற கடைக்கோட்காலை' எனுந் தொல்காப்பியச் சூத்திரத்துச் 'சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே' என்றதனுனும் இனிது விளங்கும்.

$ தூலாருந்ததி நியாயமாவது, மிகவும் நுண்ணியதாகிய அருந்ததிமீனை அறியா தானுக்கு அதனுடன் சேரூன்றுவதோர் பெருமீனை இஃது அருந்ததியென முன்னர்க்காட்டி, அதனை அவன் உற்றுநோக்கி யுணர்ந்தபின்னர் அருந்ததி மீன் அஃதன்று, அதன் மருங்கே தோன்றுகின்றது பார் எனக்காட்டி உணர்த்துதல் போல்வதோர் முறைமை.

மூன்றனுட் பதிப்பொருள் எனப்பாச பசுக்களுக்கு மேலாத லினிது விளங்கச் சொருபலக்கணத்தின்வைத் துணர்த்துதல். ஈண்டு ஞானமென்றது ஞான சாத்திரத்தின் மேற்று. தெரித்துக்காட்டு ஞானநூலெனவே ஞானகாண்ட மெல்லாம் நூலாருந்ததி நியாயம்பற்றி இங்ஙன மிருபகுதிப்பட நிகழு மென்பதாயிற்று"

எனவரு மதனுரைக்குறிப்பா னுணர்க. திருக்குறளான் அறம் பொரு ளின்பங்களி னியல்புமாத்திரையே யன்றி வீட்டுநெறியும் உணர்த்தப்படுதல்,

"முப்பாலி னுற்பான் மொழிந்தவர்",

"அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை",

"அறனறிந்தே மான்ற பொருளறிந்தே பின்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்"

என்பன முதலாக அந்நூற்பொருளை நன்குணர்ந்த சான்றோர்கள் கூறுமாற்றாற் றெளியப்படும்.

இனி, சிவபிரானை யறியுமாறு யாங்ஙனம் என ஆராய்வாம். உயிர்கள் கறைகெழுமிய அறிவும், முறைதழுவாச் செயலு முடையன. அவற்றினறிவு மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் புறக்கருவிகளானும், மனம், அகங்காரம், புத்தி முதலிய அகக்கருவிகளானும் விளங்கிக் காலத்தானு மிடத் தானும் ஏக்தேசப்பட்டு நிகழ்வதாய், அதுவதுவாய்ப் பலவேறு வகைப்படுதலும், அறியாமையொடு விரவுதலும், வேறுபடுதலு மாகிய இயல்புகளையுடையது. இத்தகைய அறிவி லறியப் படுவன மண், நீர், தீ, வளி, ஆகாயம் முதலிய புறப்பொருள் களும் அவற்றின் பெற்றிகளுமாம். அவையனைத்தும் நிலை பேறின்றித் தோன்றிநின்றழியும் அசத்துப் பொருள்களே யாகும். இறைவனே நித்த முத்த சுத்த சத்து. அவன் இவ் வறிவான் அறியப்படுவான் எனின், அவன் உலகத்துப்பொருள் களுள் ஒருவனாய் அசத்தாயொழிவன். இக்கருத்துப்பற்றியே அறிவுநூல்கள் முதல்வனை இவ்வுலகத்துப் பொருள்களுள்

ஒன்ருகவைத் தோதாமல், அவன் இவற்றுள் இதுவுமன்ருய், அதுவுமன்ருய், மற்றெதுவுமன்ருய், மாற்ற மனங்கட்கு அப்பாற் பட்டவனென்று எதிர்மறை முகத்தான் வைத்துக்கூறுவ வாயின.

"விரிகதிர்ஞாயிறல்லர் மதியல்லர்வேத
விதியல்லர்விண்ணு நிலனும்
திரிதருவாயுவல்லர் செறுதீயுமல்லர்
தெளிநீருமல்லர் தெரியில்"

எனவும்,

"மறையினு லயனுன் மாலான் மனத்தினல் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னுலுங் கூருெணு தாகி நின்ற
இறைவனுர் கமல பாதம்"

எனவும் எழுந்த அருண்மொழிகள் இக்கருத்தே பற்றியன.

அற்றேல், அருணூல்கள் முதல்வனை இங்ஙனம் எதிர்மறை முகத்தான்வைத் தோதுதல் மாத்திரமன்றி, உடன்பாட்டானும்

"அவனே யிருசுடர்தீ யாகாச மாவான்
அவனே புவிபுனல்காற் ருவான்—அவனே
இயமான னுயட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனுகி நின்ருனும் வந்து"

என்ருற்போல உலகத்துப் பொருள்களாக வைத்தோதுமா றென்னையெனின், அஃது எல்லாமாகி யல்லனு யுடனுமா மியல்புடைய முதல்வனுக்கு அவற்ருேடுளதாகிய இயைபு நோக்கிக் கூறும் உபசாரமேயாம் என்க. முதல்வனுக்கு உலகத் தோடுளதாகிய இயைபு

"ஈருய்முத லொன்ருயிரு பெண்ணுண்குணமூன்ருய்
மாருமறை நான்காய்வரு பூதம்மவையைந்தா
யாருர்சுவை யேழோசையொ டெட்டுத்திசைதானுய்
வேருயுட னுனிடம் வீழிம்மிழலையே"

என ஆளுடைய பிள்ளையாரும், அவரைப் பின்பற்றி

"ஈருகி யங்கே முதலொன்று யீங்கிரண்டாய்
மாருத வெண்வகையாய் மற்றிவற்றின்—வேரு
யுடனு யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனு யிருக்கின்ருன் காண்"

எனத் திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனுரும் அருளிச் செய்தமையாற் பெறப்படும்.

அது நீ ஆகிருய் (தத்துவமசி) என்பது முதலாக மூவிடம் பற்றி வரும் மகாவாக்கியங்களைக் கேட்ட மாணவனுக்கு, "அது என்பதொரு பொருள் நீ என்பதொரு பொருளாகலின், ஒரு பொருள் மற்ருெரு பொருளாமா றியாங்ஙனம்?" என நிகழும் ஐயம் நீக்குதற்கு, அது நீயாதற்கேதுவாய் அவ்விரண்டற்கும் (பரமான்மா சீவான்மாக்களுக்கு) உளதாகிய சம்பந்தவிசேட முணர்த்துதற்கு உய்யவந்ததேவ நாயனுர் தம் நூலில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர்தம் அருண்மொழியை எடுத்துக்காட்டி இங்ஙனம் அருளிச்செய்துள்ளார். அது இப்பாட்டிற்கு முன் உள்ள

"அதுஇது வென்றும் அவனேனே யென்றும்
அதுநீயே யாகின்ரு யென்றும்—அதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லா மிரண்டாக
வொன்ருகச் சொல்லுவரோ வுற்று"

என்னுந் திருவெண்பாவின் பொருளை யுற்றுநோக்கின் விளங்கும்.

சாந்தோக்கியோபநிடதத்தில் வரும்

सदेव सौम्येदमग्र आसीत्। एकमेवाद्वितीयम्।

என்பதிலுள்ள 'அத்துவிதம்' என்னுஞ்சொல் இச்சம்பந்த விசேடமுணர்த்துவதே என்பது

"பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்ன
தத்துவித மென்றறைய மாங்கு"

என்னுஞ் சிவஞானபோத வார்த்திக வெண்பாவானும் அதன் பேருரையானுந் தெளியப்படும்.

இங்ஙனம் இறைவன் உலகத்தை அதிட்டித்துநிற்றல்பற்றி வேதாகமங்கள் அவனை உலக வடிவினன் (விச்சுவரூபி) என உபசரித்துக் கூறியதன் தாற்பரியம் அறியாது அதனை யுண்மை யென்றேகொண்டு மயங்குவோரை நோக்கி யிரங்கியே அரதத்தா சாரியர் சுருதிசூக்தி மாலையில்,

विश्वं महेश्वर भवानधितिष्ठतीति
विश्वात्मता मुपचरन्ति यदागमास्ते ।
तत्पण्डिता विदितवेदरहस्यशीलां
जानन्ति मन्दमतयस्तु तदेवसत्यम् ॥

என அருளிச் செய்வாராயினர்.

"மகேசுவர, நீ அருளிச்செய்த நூல்கள் உன்னை உலகத்தை அதிட்டித்து நிற்றல்பற்றி உலக வடிவினனாக உபசரித்துக் கூறுகின்றன; வேதத்தின் நுண்பொருளை வன்மை மென்மைபற்றிச் சொற்பொரு டுணிவிக்குங் கருவி களான் விசாரித்து நிச்சய முணர்ந்த ஞானிகள் அதன்தாற்பரியத்தை அறிகின்றார்கள். பருப்பொருளறிவுடையார்களோ உபசார மென்றறிய மாட்டாது சொன்மாத்திரையேபற்றி உண்மையென்று மயங்குப"

என்பது இதன்பொருளாம். இங்ஙனமாகலின் முதல்வன் அளவையறிவா னறியப்படான் என்பது பெறப்படும்.

அற்றேல் முதல்வனை அறியப்படாதவன் என்பேமெனின், ஒருவாற்றானு மறியப்படாத பொருள் இல்லதேயாமாகலின் அது "சுடர் விட்டுளன் எங்கள் சோதி", "கற்றைச் செஞ்சடை யான் உளன் நாமுளோம்" என்றற்றொடக்கத்து அவனுண்மை கூறும் அநுபவ வாக்குக்களோடு முரணும்; அன்றியும் அங்ஙன மொருபொரு ளுண்டெனக் கொள்ளினும் ஒருஞான்றும் அதனோ டெமக்கோ ரியைபுண்டாமாறும் இல்லை; அஃதின்றாகவே, அதனா னாகக்கடவதோர் செயலுமில்லையாகலின் அங்ஙனங்கோடலாற்

போந்த பயனென்றுமின்று. இன்னும் சிவத்தை யறிய ஊக்குஞ் சுருதிகளும், அதன்பொருட்டு நூல்களுட் கூறப்படும் சாதகங்களும் பயனிலவா யொழியும்.

இனி, அவன் எவ்வாற்ருன் அறியப்படுவனெனின், கூறுதும்: ஆன்மா மண், கல் முதலிய அறிவில் பொருள்களைப்போல வன்றி யறியு மியல்பிற்று. ஆயினும் அதனறிவு முதல்வனறிவு போலத் தானே விளங்கியறியும் இயற்கைய தன்று. அது, விளக்கொளி முதலியவற்றுள் யாதானுமொரு வியஞ்சகம் (விளக்குவது) உள்வழியே விளங்கிப் பொருள்களைக் காணுங் கண்ணொளி போலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சக முள்வழியே விளங்குவதொன்ருகும். பிறப்பிறப்புட்பட்டுழலும் இப்பெத்தநிலை(கட்டுற்று நிற்கும் நிலை)யில் ஆன்மாவுக்கு அதன் அறிவை விளக்கும் வியஞ்சகமாவன, சூக்குமை முதலாகச் சொல்லப்படும் நால்வகை வாக்குக்களின் பகுதியவாய சொற்பிரபஞ்சமும், நில முதல் நாதமீருகக் கூறப்படும் பொருட்பிரபஞ்சமுமாம். இவைபற்றிநிகழும் ஞானமனைத்தும் ஏகதேசமாய் (சுட்டறிவாகிய சிற்றறிவாய்)ப் பாசஞான மெனப் பெயர்பெறும்.

இனிமேல், வியஞ்சக மெனப்பட்ட மனம், ஆங்காரம், புத்தி முதலிய கருவிகள், ஆன்மா ஒரு விடயத்தை யறியலுறும்போது, தாமே அறிவன (கருத்தா) வெனும்படி ஆன்மாவோடொற்றித்து நின்று நிகழ்வன. ஆகம நூற்கேள்வியானும், யோகமுயற்சியானும் இவை கண்ணுக்கு விளக்குப்போல ஆன்மாவிற்குக் கருவியாய் வேறுநிற்பனவென்று விவேகித் தறிந்து, நீங்கி நின்று, இவற்றைக்கொண் டறியுங் கருத்தாவி னுண்மையாதென் ருராய்வார்க்கு ஆன்மசொரூபம் இனிது விளங்கும். இந்நிலையை யெய்து மான்மா, மேற் பாசஞானத்தைப் பயப்பன எனப்பட்ட சொற் பொருட் பிரபஞ்சமனைத்துந் தன்கீழ் வியாப்பியம் (அடங்குவன) என்றறிந்து நீங்கித் தானவற்றிற்கு மேற்படுதலான், அதுபற்றி நிகழ்வதோர் செருக்கால் முத்தனய (கட்டினின்றும் விடுபட்டவனை) யானும் அநாதிமுத்தனைப்போல்

பிரமமாவேன் எனச்சடிதியின் மதிக்க வருவதோர் சிவசமவாத ஞானந் தோன்றும். அது பசுத்துவ வாதனைபற்றித் தோன்றுவ தாகலின் பசுஞானம் எனப்படும். ஏகான்மவாதம்பற்றி நிகழும் நான்பிரமம் என்னும் ஞானமும் பசுஞானமே யாகும்.

சிவபெருமான் இவ்விருவகை ஞானங்களின் விருத்திகளையுங் கடந்து அதிதமாய் நிற்பர். முதல்வனை "வாக்கு மனாதீதன்" என்பது இக்கருத்துப்பற்றியே யாகும். வாக்கு=பாசஞானம்; மனம்=பசுஞானம்.

"மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே"

என்னுந் திருவாசகமுங் காண்க.

பாசஞான பசுஞானங்களின் இயல்பை,

"வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கண்மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்;
நணுகியான் மாவிவைகீழ் நாடலாலே
காதலினு னுன்பிரம மென்னு ஞானங்
கருதுபசு ஞானம் இவ னுடலிற் கட்டுண்டு
ஓதியுணர்ந்து ஒன்றொன்ற வுணர்ந்திடலாற் பசுவாம்
ஒன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே"

என்னுஞ் சிவஞானசித்தி ஞானவேற்றுமை தெரித்துக் கூறிய வாறு பற்றியுணர்க.

இனி, ஆன்மாவாவது 'யான்' என்னும் உணர்விற்கு விடய மாய்ப் புலப்படும் சைதன்னியமே(அறிவுடைப்பொருள்)யாம். சிவசைதன்னியம், நீரின்கண் அதன் நிழல் வேறு நில்லாது விரவிப் புலப்படா திருத்தல்போல அவ்வான்மசைதன்னியத் தோடு விரவிப் புலப்படாது நிற்கும். இங்ஙனஞ் சிவன் ஆன்மா வின் வேறல்லனாய்க் கலந்து, தூலசூக்குமமுறையில் அவ்வான்மா வின் அறிவுக்குள்ளுமாய் அதனறிவுக்கு வியஞ்சகமாய் உயிர்க் குயிராய் நிற்றலான், அந்நிலை, அறிவானும், அறிபொருளும்,

அறிவும் எனப்பகுத்தறிய வாராது. அன்றியும் பிறபொருள் களைக் காணுங்கால், அப்பொருள்களை விளக்கிக் காட்ட விளக் கொளி முதலியவற்றை யவாவும் கண் ஞாயிற்றைக்காண்புழி ஏனை யொளிகளுள் ஒன்றனையும் அவாவாது அஞ்ஞாயிற்றின் ஒளி யானுயே காணும்; அங்ஙனமே உயிரும் சிவத்தை யறியும்போது பிறிதோ ரொளியினை யவாவாமல் சிவத்திற் பிரிப்பின்றி யதன் குணமாயுள்ள திருவருளையே வியஞ்சகமாகக்கொண் டுணரும். ஆகலின், சிவாகமநூற்பொருளைத் தொன்றுதொட்டு வருங் கேள்வியான் அநுபவமுடைய சைவசித்தாந்த ஞானதேசிகன் பால் உபதேசமாகக்கேட்டு, பின்னர் அத்தேசிகன்அருள்வழி நின்று அக்கேட்டபொருளை அளவைகளானும் பொருந்துமாற்ரு னுஞ் சிந்திக்க, முதல்வன் றிருவருள் காட்சிப்படும்; காட்சிப்பட, அத்திருவருளி லறிவடங்கி வேறற நின்று அத்திருவருளின லறிய, அவ்வருளுக்கு முதலாகிய ஞேயம் (சிவம்) பேரின்ப மயமாய் விளங்கித் தோன்றும்.

முதல்வன் றிருவருளாகிய ஞானசொரூபஞ் சுத்தம், மிச்சிரம், அசுத்தம் எனப்படும் மூவகைப் பிரபஞ்சத்திற்கும் விலக்கணமாய் (வேருமியல்பினதாய்)ச் சிந்தனைக்கண் விளங்கித் தோன்று மாற்றை ஸ்ரீமெய்கண்டதேவ நாயனுர்,

> "நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியா னந்தனுய்த்
> தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்—அற்புதம்போல்
> ஆனு வறிவாய் அளவிறந்து தோன்ருனே
> வானே முதல்களையின் வந்து"

என்னும் வார்த்திகத் திருவெண்பாவான் அருளிச்செய்தல் காண்க. இத்திருவெண்பா சொல்வளமும், பொருட்செறிவும், ஓசைநயமும் ஒருங்கே யுடைய்தாய்த், திருவருண்ஞானமணங் கமழ்ந்து, கற்போர்தஞ் சிந்தைக்கினியதாய், செவிக்கினிய தாய், வாய்க்கினியதாய், வந்த விருவினைக்கு மாமருந்தாய், நன் னெறிதெருட்டி, தீந்தமிழ்ச் செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலராய் நின்றெளிர்தலின், இதன் செம்பொருள் விளக்கும் மாபாடியப் பகுதியும் உடன்றரப்படுகிறது:

அது,

"அசத்தெனப்பட்ட மூவகைப் பிரபஞ்சத்துள், அசுத்தப் பிரபஞ்சமெல்லாம் முக்குணமயமாகலிற் சத்துவகுணவிருத்தியாகிய பிரகாசரூபஞ் சாந்தரூபஞ் சுகரூபமாகத்தான், இராசதகுணவிருத்தியாகிய பிரவிருத்திரூபங் கோரரூபந் துக்கரூபமாகத்தான், தமோகுணவிருத்தியாகிய நியமனரூபம் மூடரூபம் மோக ரூபமாகத்தான் அளவிட்டறியப்படும்; முதல்வன் இம்முக்குணங்களுங் கடந்தவனாகலான் இவற்றுளொன்றாக அறியப்படானென்பார் நிர்க்குணனும் என்றும்; மிச்சிரப்பிரபஞ்சம் முக்குணங்களைக்கடந்து நிர்க்குணமாயுள்ள தொன்றாயினும் மல கன்மங்களோடு விரவி நிற்றலின் மலகாரியமாகிய மோக முதலிய எழுவகையுருவமாகத்தான், கன்மகாரியமாகிய சுகரூபந் துக்கரூப மாகத்தான் அளவிட்டறியப்படும்; முதல்வன் மலகன்மங்களையுங் கடந்து நிற்றலான் அவற்றுள்ளும் ஓரியல்புபற்றி அறியப்படான் என்பார் நின்மலனும் என்றும்; சுத்தப் பிரபஞ்சம் மலகன்மங்களையுங் கடந்து நின்மலமாயுள்ள தொன்றாயினுங் காரியப்பட்டு அநித்தமா மியல்புடைமையிற் சாதிசயானந்த ரூபமாய் அளவிட்டறியப்படும்; முதல்வன் காரியப்பாட்டினது உபசாரத்தையுங் கடந்தவனாகலான் அவ்வாறும் அறியப்படான் என்பார் நித்தியானந்தனும் என்றும்; ஆன்மாவும் இம்மூவகைப் பிரபஞ்சத்துட்பட்டுச் சகுணனுஞ் சமலனுஞ் சாதிசயானந்தனும் பொதுவியல்புபற்றி அறியப்படும்; முதல்வன் அவ்வாறும் அறியப்படான் என்பார் தற்பரமாய் நின்ற என்றும்; அங்ஙனம் நின்றநிலை ஒன்றோடு உவமித்தறியப்படாமைபற்றித் தனிமுதல்வன் என்றும்; இத்தன்மையனாகிய முதல்வன் நிலமுதல் நாதமீறாகிய பிரபஞ்சங்களை அசத்தென்று களைந்தவழி, பயின்றறியாமையின், இன்னதென் றறியவாராத சூனியம்போலச் சுட்டறிவி னளவினைக் கடந்து தோன்றிப் பின்னர்ச் சுட்டிறந்தறியும் அறிவின்கண்ணே சோதிக்குட் சோதியாய் வெளிப்பட்டுத் தானே விளங்கித் தோன்றுவன் என்பார் வானேமுதல் களையின் அற்புதம் போல் அளவிறந்து ஆனா அறிவாய் வந்து தோன்றானே என்றுங் கூறினார்."

எனவரும்.

சத்தாகிய சிவம் ஏனைய பொருள்கள்போலன்றிச் சுட்டிறந்து நின்றறிந்தே அநுபவிக்கப்படும் என்பதை,

"உண்டொ ரொண்பொருள் என்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே"

என்னுந் திருவாசகத்தானும் உணர்க.

அறியாமையை விளைக்கும் ஆணவப் பிணிப்பாற் குவிந்த அறிவுடையதாயிருந்த ஆன்மாவின்கண் மறைந்து உயிர்க்குயிராய்ப் புலப்படாது நின்ற முழுமுதற் பேரறிவாகிய முதற் பொருள், அவ்வான்மா மேற்கூறியவாற்ருன் அறியாமைப் பிணிப்பினீங்கித் திருவருளைக் கண்டு அதனோடு வேறற நின்றுணரும் அநுபவ ஞானத்திற் புலப்படத்தோன்றி, அவ்வான்மாவைத் தன்னருள் வியாபகத்தில் அடங்கக்கொண்டு பேரின்பமயமாய் விளங்கித் தோன்றுதலை அனுபவத்தானுணர்ந்த பரமாசாரியர்கள், மலர் அரும்பாயிருந்துழி அதன்கண் அருவாய்ப் புலப்படாது நின்ற நறுமணம் அது மலர்ந்துழி அதனுள்ளும் புறம்புமாய் விரிந்து புலப்பட்டுப் பரம்பி அம்மலரையுந் தன்னகத்தடக்கிக்கொண்டு வேறறநின்று விளங்கி யின்பம் பயத்தலோ டொப்பித்துத் தமது அத்தியற்புத சின்மயமாகிய அருட்பாடல்களுள் இலக்கியச்சுவை தோன்றவைத்து, நம்மனோர்க்கு அறிவு மின்பமு பயத்தலை,

> "உற்ற வாக்கையி னுறுபொருள் நறுமலரெழுதரு நாற்றம்போல்
> பற்றலாவதொர் நிலையிலாப் பரம்பொருள்"

என்னுந் திருவாசகத்தானும்,

> "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
> சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
> ஓவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு
> நாவி யணைந்த நடுதறி யாமே"

என்னுந் திருமந்திரத்தானு முணர்க.

மேற்காட்டியவாறு முதல்வன் றிருவருளா னுணரும் உணர்வே சிவஞானம், உயர்ஞானம், திருவடிஞானம், திருஞானம் என நூல்களுள் எடுத்தோதப்படும்.

இச்சிவஞான மல்லாதனவெல்லாம் அஞ்ஞானமே யாம். அவ்வஞ்ஞானப்பகுதிகளாற் பந்தமுறுத லன்றி வீடுபேறடைதல் கூடாது. தார்க்கிகர், சாங்கியர், மாயாவாதிகள் முதலியோர்

கூறும் ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்களே யாகலான், அவையும் பந்தமுறுத்தி மாணுப்பிறப்பிற் செலுத்துவனவேயன்றி, வீடெய்துவிக்கமாட்டா. அவ்வஞ்ஞானப்பகுதிகளெல்லாம், ஒளிமுன் இருள்போலச் சிவஞானத்தின் முன் சத்திகெட்டொழியும்; ஒழியவே, அவற்ருனுய பந்தம்நீங்க முத்தி நிலை கைகூடும். ஆகலின், வீடுபேற்றிற்குச் சிவஞானம் இன்றியமையாச் சிறப்பிற்ருதலும், பிறவெல்லாம் அதற்குச் சிறந்த காரணமல்லவாதலும் பெறப்படும். இக்கருத்து,

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
 நல்லவா கமஞ்சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தா ரென்கடவர் அஞ்ஞா னத்தால்
 உறுவதுதான் பந்தம்உயர் மெய்ஞ்ஞானந்தா
னுனத்தால் அதுபோவ தலர்கதிர்முன் னிருள்போல்
 அஞ்ஞானம் விடப்பந்த மறு முத்தியாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
 இறைவனடி ஞானமே ஞானமென்பர்

என்னுஞ் சிவஞான சித்தியில் நன்கு விளக்கப்படுகின்றது.

"அவனருளே கண்ணுகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவ னென்றெழுதிக் காட்டொணுதே"

எனவும்,

"நின்—அருட்கண்ணு னேக்காதா ரல்லாதாரே"

எனவும்,

"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே"

எனவும்,

"அவனரு ளாலே யவன்ருள் வணங்கி"

எனவும் எழுந்த திருவாக்குக்க ளனைத்தும் சிவபரம்பொருள் தன்னருளானன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துவனவாம்.

இப்பெற்றித்தாய சிவஞானத்தாற் சிவனைத் தன்னறிவின் கண்ணே தெளியக்கண்டு, அதனாற் பாசக்ஷயம்பண்ணி நிட்டை கூடிச் சிவாநந்தாநுபூதியைத் தலைப்படுவதே முடிந்த பேருகிய ஆன்மலாபம் ஆகும்.

இனி, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்என மூவகைப் படும் ஆன்மாக்களுட் சகலவர்க்கத்தின்பாற்படும் நம்மனோர், மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்படுஞ் சத்திநிபாத முடையோராய் நூல்வழியான் வீடுபெறற்குரிய ராகலானும், அந்நூலான் விளங்கத்தக்க ஞானத்திற்குப் பிரதி பந்தகம் (தடைசெய்து நிற்பது) பற்பல பிறவிகளில் ஈட்டப் பட்ட வினைகளுள் பக்குவ்முறையான் நுகர்விக்கப்பட் டொழிந்த வைபோக, அங்ஙனம் நுகர்விக்கப்படாமல் எஞ்சிநிற்கும் சஞ்சித வினையே யாகலானும், அச்சஞ்சிதவினையும் அதற்குப் பற்றுக் கொடுத்து நிற்கும் மாயேயமலமும் இறைவனது கிரியாசத்தியின் விருத்தியாகிய தீக்கையானேயே ஒழியற்பாலன வாகலானும், தீக்கையான் அத்துவசுத்தி செய்யுமுகத்தான் ஞானபிரதிபந்தகம் நீக்கி, சிவஞானத்தை யுதிப்பித்து, அச்சிவஞானத்தானே பாசக்ஷயம் பண்ணிச் சிவாநந்தத்தைத் தலைப்படுதலாகிய பர முத்தியை அளித்தருளுதற்பொருட்டுக் கைலாசபதியாய் நின்ற பரமசிவனாற் சிறப்பாகப் பிரதிட்டிக்கப்பெற்ற ஞானசித்தாந்த சந்தானமே மெய்கண்டதேசிகன் சந்தானமாகும்.

இச்சந்தானத்தில் உபதேசக்கிரமத்தில் வரும் ஞானநெறி ஆதியில் ஸ்ரீகண்டமுதல்வரால், தம்பால் முன்னமே வேதாகமங்க ளெல்லாங் கேட்டுணர்ந்த திருநந்தி தேவர்க்கு அருளப்பட்டு, அவர் அதனைச் சனற்குமார முனிவர்க்கு அருளிச்செய்ய, அவர் அதனைச் சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்ய, அவர் அதனைப் பரஞ்சோதி முனிகளுக்கருளிச்செய்ய, அவர் அதனைத் தமிழ்நாடு செய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரிற் சாமு சித்தராய் அவதரித்தருளி ஈராட்டைப் பச்சிளங்குழவியாய் எழுந் தருளியிருந்த மெய்கண்ட தேவர்க்கு அருளிச்செய்ய, இங்ஙனம்

திருக்கயிலையில் வீற்றிருக்கும் ஸ்ரீகண்ட முதல்வர் முதலாக இடையறவுபடாமல் குருமரபில் வருதலால், இது திருக்கயிலாய பரம்பரை எனச் சிறப்பித்து வழங்கப்படுகின்றது.

அன்றியும், மெய்கண்டதேவ நாயனுரும், அவர்பால் ஞானேபதேசம்பெற்ற அருணந்தி சிவாசாரியரும், அவர்பால் அருள்பெற்ற மறைஞானசம்பந்த சிவாசாரியரும், அவரால் உபதேசிக்கப்பெற்ற உமாபதி சிவாசாரியரும் இங்ஙனம் சீகண்ட முதல்வரால் பிரதிட்டிக்கப்பெற்ற சைவசித்தாந்த ஞான சந்தானத்தில் வந்து, மகிமாதிசய முடையவர்களாய் ஞான பீடாதிபதிகளா யெழுந்தருளியிருந்து பக்குவான்மாக்களுக்குத் திருவருள்ஞானேபதேசஞ் செய்தும், சுருதி குருவாக்குச் சுவாநுபவம் என்னும் மூன்ருனும் ஒப்பக்கிடைத்த பாரமார்த் திகப் பேருண்மைகளைப் போதிக்கும் அருணூல்களை அருளிச் செய்தும், வேதாகமோக்த சுத்தாத்துவித சைவசித்தாந்தசமயப் பிரதிட்டாசாரியர்களாய் விளங்கியருளினர்க ளாகலின், இவர்கள் நால்வரும் சைவசந்தானுசாரியர்கள் என வழங்கப்படுவா ராயினர். இவர்களுள் மெய்கண்ட முதல்வரால் தமிழுலகினை யுய்விக்கு மாற்ருல் வார்த்திகம் என்னும் பொழிப்புரையுடன் தமிழ் மொழியில் அருளிச்செய்யப்பட்ட சிவஞானபோதமும், அருணந்தி சிவாசாரியரால் அருளிச்செய்யப்பட்ட சிவஞானசித்தி, இருபா விருபஃது என்னும் இருநூல்களும், மெய்கண்ட முதல்வரது நாற்பத்தொன்பது மாணுக்கர்களுள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தாரால் அருளிச்செய்யப்பட்ட உண்மை விளக்கமும், உமாபதிசிவாசாரியரால் அருளிச்செய்யப்பட்ட சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினவெண்பா, போற்றிப் பஃருெடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, * உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் எட்டு நூல்களும், இவ் வாசிரியன்மார்கள் காலத்திற்கு முன்னரே திருவிசலூர் உய்யவந்த தேவ நாயனர், திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனர் என்னும்

---

* ஆராய்ச்சியாளர்கள் உண்மைநெறிவிளக்க ஆசிரியர் சீகாழித் தத்துவநாதர் என்ப.

ஞானாசிரியர்களாலருளிச்செய்யப்பட்ட திருவுந்தி, திருக்களிற்றுப் படி என்னும் இருநூல்களும் ஆகிய பதினன்கு நூல்களும் சைவ சித்தாந்த ஞானம் போதிக்கும் அருணூற்ருெகைகளுட் டலை சிறந்து நிற்பனவாய் மெய்கண்ட நூல்கள் எனவும், சித்தாந்த சாத்திரங்கள் எனவுஞ் சான்ருேரால் வழங்கப்பட்டு, மெய்கண்ட தேசிகன் சந்தானத்தின் வரும் ஞான ஆதீனங்களில் சித்தாந்த சைவப் பொருளுண்மையை யுணர்ந்து வீட்டு நெறியைத் தலைப்படுதற்பொருட்டு ஆராயப்பட்டு வருகின்றன.

திருக்கயிலாய பரம்பரைத் திருநந்தியருண்மரபாகிய இச் சந்தானத்தின் வரும் ஞானகுரவர்களுள் மறைஞானசம்பந்த சிவாசாரியர்வரை வந்த ஆசிரியர்களை, உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த சிவப்பிரகாசத்தில்,

"தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணை
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவிலருள் மறைஞான சம்பந்தர் இவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே"

எனவரும் இத்திரு விருத்தத்தான் உணரலாகும். இதன்கண் "அவர்கணத்து ஓர் செல்வர்" என்றது திருநந்திதேவர்பால் அருள்பெற்ற சனற்குமார முனிவரைக் குறிக்கும். அது, சிவ ஞானசித்தி பரபக்கத்தில்,

"போதமிகுத் தோர்தொகுத்த பேதைமைக்கே
பொருந்திஞே ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறி யெனுமவர்கட் கறிய முன்னுள்
இறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக்
குவலயத்தின் அவ்வழியெங் குருநாதன் கொண்டு
தீதகல எமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே"

எனவருந் திருவிருத்தத்தான் உணரப்படும்.

இதன்கண் 'குவலயத்தின் அவ்வழி எங்குருநாதன் கொண்டு' என்றதனால், இங்குக் குருநாதன் எனப்பட்ட மெய்கண்டதேவ நாயனார் இந்நிலவுலகத் தெழுந்தருளியிருந்து திருவருள் கொடுத்தமைபற்றித் திருக்கயிலாய பரம்பரையிற் புறச்சந்தான முதற்குரவராகின்றார் என்பதும், அவருக்குமுன் திருநந்திதேவர் முதல் பரஞ்சோதி முனிகள் ஈறாகவந்த ஆசிரியன்மார்கள் நால்வரும், திருக்கயிலையின்கண் உள்ளவர்களாதல்பற்றி, திருக் கயிலாய பரம்பரை அகச்சந்தான ஆசாரியர்கள் என வழங்கப் படுவாராயினர் என்பதும் பெறப்படும்.

அற்றேல், அஃதங்ஙனமாக

§ "* * உயர்ஞானம் இரண்டாம் மாறா
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருளொன்று ஒன்றதனைத் தெளிய வோதும்,
சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே"

என்றாராகலின் உயிரின்கண் அங்ஙனம் என்றும் பொருந்தி நிற்கும் பரஞானமாகிய திருவருளை யுணர்தற்கு அதனை விளக்கு வனவாய் அபரஞானம் எனப்பட்ட ஞானநூல்களே அமையு மன்றோ? ஞானதேசிகனால் ஆண்டுச் செய்யற்பாலது யாது? ஞான தேசிகன் வேண்டுமெனின் நூல்களாற் போந்தபயன்யாது? இனி, ஞானதேசிகன் இன்றியமையாது வேண்டப்படுவனெனினும், அவன் திருக்கயிலாயபரம்பரையின் வந்த ஞானசாரியனாதல் வேண்டும் என்றது எற்றுக்கு? வேண்டுமெனின், மேற்கூறிப் போந்தவாற்றான் மெய்கண்ட முதல்வர் காலத்திற்குமுன் நம் நாட்டில் திருக்கயிலாய பரம்பரை ஞான சித்தாந்த சந்தானம் இருந்ததாகத் தெரியவாராமையின் அக்காலங்களில் இத்தகைய ஞானசாரியன் இன்றியும் ஞானம்பெற்றார் உளரென்பது பெறப் படுதலின், அஃதிக்காலத்திற்கும் ஒக்குமன்றே? எனின், கூறுதும்:-

---

§ சிவப்பிரகாசம். 10.

முதல்வன் நீரின்கண் நிழல்போல் ஆன்மாவின்மாட்டுப் பொருந்தி வெளிப்படாது நிற்றலின் அங்ஙனம் புலப்படாது நின்றமுதல்வனை அறிவித்தற்கு நூன்மாத்திரையான் அமையாது; அன்றியும், நூல்களெனப்படுவன யாவும் அவ்வச்சமயந்தோறும் வெவ்வேறாய் முன்னொடுபின் மாறுபடுங் குறைகள் செறிவன வாகலான், அவற்றுள் உண்மைச்சமயமாவது இது; அதன்கண் அநுபவம்பெற்ற ஞானிகளெல்லாம் பிரமாணமென்றறிந்து கைக்கொண்ட நூல் இது என்றுணர்ந்து அவற்றை மேற் கொள்ளுதல் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவுடைய உயிர்க்குக் கூடாது.

இனி, யாதானும் ஒரு காரணம்பற்றி, முன்னொடுபின் மாறுபடுங் குறைபாடின்றி உண்மைஞானந் தெருட்டுஞ் சைவ சித்தாந்த நூல்களைப் பிரமாண நூல்களெனக் கொண்டாலும் அந்நூல்களுந் தம்மை முறைப்படி கேட்பித்து, சிந்திப்பித்து, தெளிவிக்கவல்ல அநுபவமுடைய தேசிகனை யின்றியமையா வாகலான், அம்முதல்வன்றானே குருவடிவாய்த் தோன்றிநின்று உணர்த்தானாயின் அவனையறிவா ரொருவரும் இல்லையென்பதே முடிபு. அது,

† "நானுமென் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

எனத் திருமுறையின்கண்ணும்,

‡ "உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லான் உரை"

எனவும்,

---

† திருவாசகம், திருக்கோத்தும்பி, 15.

‡ திருக்களிற்றுப்படி. 7

§ " இல்லா முலைப்பாலுங் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானே லுற்று "

எனவுஞ் சாத்திரத்தின்கண்ணும் பெறப்படுதலின் தெளியப்படும்.

" திருவாய சித்தியு முத்தியுஞ் சீர்மை
மருளா தருளு மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவா யருளா விடிலோர வொண்ணாதே "

என்னுந் திருமந்திரமுங் காண்க.

இன்னும், மலநோயானது ஏனைய உடலைப்பற்றிய நோய்கள் போலாது உயிரைப்பற்றி நிற்பதொன்றாகலான், அதனை, உயிர்க்குயிராய் மறைந்து உண்ணின் றுணர்த்திவரும் முதற் பொருளே அதன் பரிபாகமுணர்ந்து நீக்கவல்லது; பிறர் அங்ஙனஞ் செய்யவல்லுநர் அல்லர்*; அன்றியும் சகலர்களாகிய நம்மனோரைப் பிணித்துள்ள மலசத்தி, தூலதரமாய்க் குருவடிவின் மறைந்துநின்று தீக்கையானும், உபதேசத்தானும், நூன்முகத்தானும், அநுபவமுகத்தானும் பலவேறு வகைப்பட உணர்த்தியவழியன்றி நீங்கா இயல்பிற்று ஆகலின், அங்ஙனமெல்லா முணர்த்துதற்கு முதற்பொருள் சற்குருவாய் வெளிப்பட்டுத் தோன்றியருளுதல் வேண்டுமென்பதும், அங்ஙனம் வெளிப்பட்டருளினும் ஞான நூலும் இன்றியமையாததே யென்பதும் தெளியப்படும்.

---

§ சிவஞானபோதம், அ-ம், சூ. 2-ம் அதி. உதாரணச் செய்யுள்.

* அகத்துறு நோய்க் குள்ளினரை அன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான்"

என்னுந் திருவருட்பயன் இக்கருத்தேபற்றி யெழுந்தது.

இனி,

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே — பாகத்து §
அருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"

எனவும்,

† "சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ — ஆர்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு"

எனவுந் திருக்களிற்றுப்படியினும்,

"மறையினு லயனுன் மாலான் மனத்தினல் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னுலுங் கூறொணு தாகி நின்ற
இறைவனுர் கமல பாதம்"

எனச் சிவஞானசித்தியினும் எழுந்த திருவாக்குக்கள் நூல்களாற் பயனில்லை யென்னுங் கருத்தான் எழுந்தவையல்ல. மற்று நூலெனப்படுவது பலவாற்ருனுங் கேட்டுச் சிந்தித்தன்றித் தெளியப்படாத குறைபாடுடையதாதலால், அதனைக் கேட்பித்துச்

---

§ பாகத்து = உயிர் தவமுயற்சியான் மலபரிபாகமுடையதாயவழி.

† கடற்றண்ணீரைக் குடித்தார்க்கு நீர்வேட்கை மேன்மேலு மிகுதலன்றித் தெண்ணீரைப் பருகினுர்க்குப்போலத் தணியாது. அதுபோலத் தொன்று தொட்டுவருங்கேள்வியான் அநுபவமுடைய தேசிகனே நூற்பொருளை ஐயமு மருட்கையுஞ் செவ்விதின் நீக்கி மன்றமாசற்ற சில சொற்களால் தெளிவிக்க வல்லனுகலான், அவனருளால் ஞானநூல்களைக் கேட்டுச் சிந்தித்தவழியே ஒருவன் அறிவின்கண் சிவஞானம் விளங்குமேயன்றி, மதிநுட்பத்தால் நூல்களைக் கற்கப்புகின் அக்கல்வியறிவு வெறும் ஆரவார நீர்மையதாகவே யொழியும் என்பது இதன்கருத்து.

§ 'கடற்றண்ணீர் குடித்தவர்க்குத் தெண்ணீர்மையாய்த் தாகந்தணிந்திடுமோ' எனக்கொண்டு கூட்டுக. ஆய் = உவமவுருபு. தெண்ணீர்மையாய் = தெளிந்த நீரின்றன்மையைப் போல. அஃதாவது, தெளிந்த நீரைக் குடித்தார்க்குப் போல. 'ஆர்த்த' என்னும் உவமையடை பொருளினுஞ் சென்றியையும்.

சிந்திப்பித்துத் தெளிவிக்கும் அறிவாற்றலிற் குறைபாடில்லாத குரவன் இன்றியமையாதுவேண்டப்படுவன் என்றுணர்த்தவே அவையெழுந்தன. அது,

"குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு",

"* * இங்கு ஒண்குருவா
லின்றிந்நான் மும்மை மலர்க்கு"

எனவருஞ் சிவஞானபோத வார்த்திகங்களானும், அவற்றின் பேருரையானும்,

"அருளினு லாக மத்தே யறியலா மளவி னுலுந்
தெருளலாம்"

என்னுஞ் சித்தியானும்,

"திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்ருல் விளம்பிய ஏது நோக்கிப்
பெருகிய உவமை கான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
தருமலே வொழியக் கொள்வோன் றன்வயிற் சாற்ற லாமே"

என்னுஞ் சிவப்பிரகாசத்தானும் உணரப்படும்.

இதுகாறுங் கூறியவாற்ருன் சகலர்களாயினுருக்கு நூல் வேண்டும் என்பதும், அந்நூல் பயன்படுதல் அநுபவமுடைய தேசிகன் அருள் உள்வழியே என்பதும், அங்ஙனந் தேசிகனுய் வெளிப்பட்டுத்தோன்றி யருள்செய்பவனும் முதல்வனேயன்றிப் பிறரல்லர் என்பதும் விளங்கும்.

இனி, மேற்கூறியயபடி சாத்திர வசனங்களுள் சற்குரு எனவும், ஒண்குரு எனவும் விசேடிக்கப்பட்ட குரவனுவான் தொன்று தொட்டுவருங் கேள்வியான் அநுபவமுடைய தேசிகனேயாவன் என்றது பரமசிவன்முதல் தன்வரை இடையறவுபடாது

தொடர்ந்துவரும் உபதேசத்தோடு சுவாநுபவமும் உடைய தேசிகன் என்றபடி. எனவே திருக்கயிலாய பரம்பரையில் வந்த அநுபவமுடைய தேசிகன் என்பது பெற்ரும். இது ஞானு மிர்தத்தில் பசுவினது சுத்தாவத்தை யிலக்கணங் கூறுகையில்,

"வல்வினை யெல்லை செல்லாக் காலத்
தொல்லென வொப்ப வுயர்பெருஞ் சிவனது
சத்தி நிபாதந் தழைப்ப மெய்த்தகு
குருபரம் பரன தருளின் செவ்வி
வம்பறு சம்பிர தாயத் தஞ்சுட
ருற்ற காலைச் சொற்ருெடர் பற்றுத்
தேயா தியாவு மாயறி வகன்ற
ஆயாச் சிவன தணிகிளர் சீர்த்தி
நின்மலத் தியையும் பின்மலத் தியையான்"

என்றதனுலும் உணரப்படும். இதன்கண் குருபரம்பரன் என்ற தற்குத் திருக்கயிலாய பரம்பரையாகவந்த திருமேனிச் சட்டை யோடே கூடியிருக்கிற ஞானசாரியனென்னும் மேலாகிய பரம சிவன் எனவும், வம்பறு சம்பிரதாயத்து அஞ்சுடர் என்றதற்கு அநாதியாய்க் கிட்டுதற்கரிய ஞானுவதியான தீக்கையென்னும் அழகியவொளி எனவும் தொல்லாசிரியர் ஒருவரால் உரைக்கப் பட்டமை காண்க.

அற்றேல் மெய்கண்டதேவர்க்கு முன் திருக்கயிலாயபரம் பரை நம் நாட்டில் இருந்ததாகத் தெரியாமையின் அக்காலத் துள்ள பக்குவான்மாக்கள் அருள்பெற்றதென்னையோவெனின், அவர்காலத்துக்கு முன்னும் நம் நாட்டில் அஃது இருந்ததென்பது, திருக்கயிலாயபரம்பரைத் தருமபுரவாதீனத்தில் ஆதிகுருமூர்த்த மாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் காலத்திலும், அச்சுவாமிகளுக்குப்பின் பட்டம் பெற்று ஞானபீடத்தி லெழுந்தருளியிருந்த ஞானசாரியர்கள் நால்வர்கள் காலத்திலும் இருந்த வெள்ளியம்பலவாண முனிவ ரவர்கள் 'முத்திநிச்சயம்' என்னும் நூலுக்குத் தாமியற்றிய பேருரையிற் கூறியுள்ள சந்தான வரலாறுபற்றி அறியப்படும்.

அது வருமாறு :—

## திருமந்திரம்

நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி
னந்திக ளுல்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிர
ரென்றிவ ரென்னே டெண்மரு மாமே.

இவருள், நந்திகள் நால்வராவார் சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் என்பவராம். திருமூலதேவருக்குச் சதாசிவமுனிகளென்றும் பெயருண்டு.

## இவர்கள் சந்தானம் விரிந்தவாறு

ஆதியிற் சனகராற் சம்பு சந்தானமும், மலையமாள் சந்தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சனற்குமாரரால் விஞ்ஞானதேவர் சந்தானமும், மெய்கண்டதேவர் சந்தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சனந்தனராற் சிவமண்ணியதேவர் சந்தானமும், பரமதேவர் சந்தான்மும், சிவானந்தபோதர் சந்தானமும் என மூன்ருய்ப் பின் பலவாயின.

சனாதனராற் பிரமதேவர் சந்தானமும், சிங்காதேவர் சந்தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சிவயோக மாமுனிவரால் வாமதேவர் சந்தானமொன்ருய்ப் பின்பலவாயின்.

பதஞ்சலி முனிவரால் நிறைந்த நாயனர் சந்தான்மொன்ருய்ப் பின் பலவாயின; இச்சந்தானத்தில் வந்த வாசிச முனிவரால் ஞானமிர்தநூல் செய்யப்பட்டது.

வியாக்கிரபாத முனிவராற் சத்தியோஜாததேவர் சந்தான மொன்ருய்ப் பின் பலவாயின.

திருமூலதேவராற் பிரமதேவர், இந்திரதேவர், விஷ்ணுதேவர், உருத்திர தேவர், கந்துருமகாவிருடிகள், காலாக்கினியுருத்திரர், கஞ்சனூர் மலையமான் என எழுவகைச் சந்தானமாய்ப் பின்பலவாயின.

இன்னும் விரிக்கிற்பெருகும். இவர்கள் யாவரு ஞானசித்தாந்த குரவர்கள். இவர்கள் வரலாற்றின் விரிவைச் சந்தான வரலாற்ருலுஞ் சந்தான வகவலாலுங் கண்டுணர்க.

இனி, ஞானநூல்கள் திருக்கயிலாய பரம்பரையை இங்ஙனஞ் சிறந்தெடுத்துக் கிளத்தற்குக் காரணந்தா னென்னையோ வெனின், அப்பரம்பரை சிவபெருமானலேயே பிரதிட்டிக்கப் பட்டமையானும், அப்பரம்பரையின்கண்ணேயே ஆதிக்கண் சிவபெருமான் நூல்வழியான் வீடுபெற விரும்புவோர்க்கென அருளிய ஞானநெறி உபதேசக் கிரமத்தில் இருந்து வருதலானும் அதன்கண்வரும் ஞானகுரவர்கள் தம்மை யுணர்ந்து தமை யுடைய தன்னுணர்வோராய்ச் சிவமேயாய்ச் சிவபிரான் சிறப்பாக அதிட்டித்து நின்று ஆன்மாக்களுக்கு அருள்செய்தற் குரிய அந்தரங்க உரிமையுடையராதலானும் அதனை நூல்கள் சிறந்தெடுத் தோதுகின்றனவென்க.

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானத்தின் பெருமை அச்சந்தானத்து நான்காம் ஆசிரியராகிய ஸ்ரீஉமாபதி சிவாசாரியருக்குத் திருச்சிற்றம்பலமுடையார் சீட்டுக்கவியனுப்பி அவரால் "பெற்றான் சாம்பான்" என்பாரை முத்தியடைவித் தமையானும், திருச்செந்தூர்க் கந்தவேளருளால் கலைஞான முழுதும் உணர்ந்த குமரகுருபரசுவாமிகள் தம்மை யாட் கொண்ட முருகப்பெருமான் ஆணையால் மெய்கண்ட சந்தான மாகிய திருத்தருமையாதீன நான்காம் குருமூர்த்திகளாகிய ஸ்ரீ மாசிலாமணிதேசிகரை யடைந்து பரஞானமெனப்படும் திருவருள்ஞானங் கைவரப்பெற்றமையானும், பிறவாற்றானும் தெற்றெனவிளங்கும்.

இங்ஙனம் பலவாற்றானும் சிறந்துவிளங்கும் திருக்கயிலாய பரம்பரைத் திருநந்தியருண்மரபு மெய்கண்டதேசிகன் அருட் சந்தானத்தின் வரும் ஞான ஆதீனங்கள் நந்தமிழ் நாட்டிற் பிறந்த மக்களனைவருக்கும் உண்மைநெறிகாட்டுங் கண்களாய் ஞானக் கருவூலங்களாய்த் திகழுங் குருபீடங்களாதலின்

அவற்றை மெய்யன்புடன்போற்றி அவற்றின்வழிநின்று நல னுறுதல் நம்மனோர் கடமையாகும்.

"பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேரும் — கதிவழங்கும்
மெய்கண்ட சந்தான மேவிச் சிவானந்தங்
கைகண்டார் காணார் கரு"

"கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் — வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால்வேறின்மை
கைகண்டார் உள்ளத்துக் கண்"



திருக்கயிலாய பரம்பரை,

## நந்திமரபு, மெய்கண்ட சந்தானத் தோற்றமுறை.



# சந்தான குரவர்கள்

(முற்பகுதி)

திருநந்தி தேவர்
சனற்குமாரர்
சத்தியஞான தரிசனிகள்
பரஞ்சோதி மாமுனிகள்
மெய்கண்ட தேவர்
அருணந்தி சிவாசாரியர்
மறைஞானசம்பந்த சிவாசாரியர்
உமாபதி சிவாசாரியர்
அருணமச்சிவாயர் (மச்சுச் செட்டியார்)
காழிக் கங்கை மெய்கண்டார்
காழிப் பழுதைகட்டிச் சிற்றம்பலநாடிகள்
பழுதைகட்டிச் சம்பந்தர்
சிவபுரம் ஞானப்பிரகாசர்
சிவபுரம் தத்துவப்பிரகாசர்
பழுதைகட்டிச் செட்டித்தெரு ஞானப்பிரகாசர்
சிதம்பரநாத மாசிலாமணி கமலை ஞானப்பிரகாசர்
குருஞானசம்பந்த தேசிகர்
(தருமபுர ஆதீன ஸ்தாபகர்.)

## சந்தான குரவர்கள்

(பிற்பகுதி)

### தருமையாதீன குருமூர்த்திகள்

1. குருஞானசம்பந்த தேசிகர்
2. ஆனந்தபரவச தேசிகர்
3. சச்சிதானந்த தேசிகர்
4. மாசிலாமணி தேசிகர்
5. ஞானசம்பந்த தேசிகர்
6. திருஞானசம்பந்த தேசிகர்
7. திருவம்பல தேசிகர்
8. அழகியதிருச்சிற்றம்பல தேசிகர்
9. திருநாவுக்கரசு தேசிகர்
10. சிவஞான தேசிகர்
11. சச்சிதானந்த தேசிகர்
12. முத்துக்குமார தேசிகர்
13. ஞானசம்பந்த தேசிகர்
14. கந்தப்ப தேசிகர்
15. மாசிலாமணி தேசிகர்
16. சச்சிதானந்த தேசிகர்
17. மாணிக்கவாசக தேசிகர்
18. சிவஞான தேசிகர்
19. மாணிக்கவாசக தேசிகர்
20. சிவஞான தேசிகர்
21. சச்சிதானந்த தேசிகர்
22. மாணிக்கவாசக தேசிகர்
23. சுப்பிரமணிய தேசிகர்

உ

சிவமயம்

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

# குருபரம்பரை வரலாறு

"கயிலாய பரம்பரையிற் சிவஞான சித்திநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றருமை வாழ்ஞான சம்பந்தக்
குரவன் மேலாஞ்
சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி
தழைக மாதோ"

## தோற்றுவாய்

கனியினும், கட்டிபட்ட கரும்பினும், பனிமலர்க் குழற் பாவை நல்லாரினும், தனிமுடிகவித்து ஆளும் அரசினும் தன்னடைந்தார்க் கினியனாகிய இறைவர் சகளநிட்களத் திருமேனி கொண்டு சதாசிவமூர்த்தியாய் நின்று காமிகாதி இருபத்தெட்டாகமங்களையுந் தோற்றுவித்து, பிரணவர் முதலிய பதின்மரும் மகாருத்திரர் முதலிய பதினெண்மரும் ஆகிய இருபத்தெண்மருக்கும் ஒருவிடயத்தை வேறுவேறு வகுத்துக்கூறுகின்ற பிரதி சங்கிதைமுறையானே ஒரோவொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்து, பின்பு வெவ்வேறுவகைப்பட்ட பலவற்றைத் திரட்டிக் கூறுகின்ற மகௌகமுறையானே அநந்ததேவருக்கு அருளிச்செய்தார். அவற்றை அநந்ததேவர் ஸ்ரீகண்டருத்திருக்கு அருளிச்செய்ய, அவர் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார்.

அங்ஙனமாகக் கேட்டருளிய நந்திபெருமான் ஸ்ரீ கண்டரை வணங்கிநின்று "சரியை முதலிய நாற்பாதங்களும் சிவாகமங்க டோறும் வேறுவேறாகக் கூறப்படுகின்றமையின் உண்மை யாவது இதுவென் றருளிச்செய்யவேண்டு" மென விண்ணப்பஞ் செய்ய, ஸ்ரீகண்டமுதல்வர் "கற்பந்தோறும் படைப்புவேறுபாடும் கேட்போர் கருத்துவேறுபாடும்பற்றி அவற்றிற்கியைய சரியை முதல் மூன்றுபாதங்களும் பலதிறப்படக் கூறப்பட்டன. ஞான பாதமோ பொருட்டன்மை யுணர்த்துவது. * இரௌரவாகமத் துள்ள பன்னிருசூத்திரங்க ளடங்கிய சிவஞானபோதமென்ப தோர் படலத்தைக் கேட்டார்க்கு எல்லாவாகமப்பொருளும் மாறுகோளின்றி விளங்கும்" எனக்கூறிச் சிவஞானபோதத்தை நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். அவர் சனகர், சனற் குமாரர், சனந்தனர், சனாதனர், சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிரபாதர், திருமூலர் முதலியோர்களுக்கு அருளிச் செய்தார். அவர்களுள் சனற்குமாரரால் உபதேசிக்கப்பட்டு வந்ததே மெய்கண்ட சந்தான தருமபுர ஆதீன குருபரம்பரை யாகுமென்பது பின்னர்க் கூறுமாற்றால் அறிக. சனற்குமாரர் பால் சத்தியஞானதரிசனிகளும், அவர்பால் பரஞ்சோதிமாமுனி களும் உபதேசம் பெற்றனர்.

பரஞ்சோதிமாமுனிகள் திருவெண்ணெய்நல்லூரில் அவ தரித்து மெய்யுணர்வின் முற்றுப்பேருடையராய்த் திகழ்ந்த ஸ்ரீ மெய்கண்டதேவருக்கு அருளிச்செய்ய, அவர்பால் திருத் துறையூர் சகலாகமபண்டிதராகிய அருணந்தி சிவாசாரியரும், அவர்பால் மறைஞானசம்பந்த சிவாசாரியரும், அவர்பால் உமாபதி சிவாசாரியரும் பரம்பரையாக ஞானோபதேசம் பெற்றுவந்தார்கள்.

உமாபதி சிவாசாரியர், (பிரபஞ்சத்தைக் காண்டல் தகாது என்று மச்சின்மீது ஏறியிருந்தபடியால்) மச்சுச் செட்டியார் என்னும் காரணப்பெயருடைய அருணமச்சிவாயருக்கு உப

---

* குருவுக்கு உபதேசித்தமையால் இரௌரவமெனப் பெயர்பெற்றது.

தேசித்தருளினர். உமாபதி சிவாசாரியரும், மச்சுச்செட்டியாரும், மறைஞானசம்பந்தரிடத்தில் உபதேசம் பெற்றவர்கள் என்று வழங்கப்பெறினும் ஆசார்யாபிஷேகம் பெற்றுப் பீடாதிபதியாக ஒருவர்பின் ஒருவராக எழுந்தருளியிருந்து கயிலாய பரம்பரையை விளக்கவந்தமுறையில் உமாபதிசிவம் முன்னரும் மச்சுச் செட்டியார் பின்னருமாகவைத்துக் கணக்கிடப் படுகின்றார்கள்.

மச்சுச்செட்டியார்பால் உபதேசம் பெற்றார் காழிக்கங்கை மெய்கண்டார். இவர் காழிப்பதியில் அவதரித்துக் கங்கை கொண்டசோளேச்சரத்தில் எழுந்தருளியிருந்தமையால் காழிக் கங்கைமெய்கண்டார் என்னுந் திருப்பெயர்பெற்றார். அவர்பால் உபதேசம்பெற்றார் காழிப்பதியில் தோன்றிய பழுதைகட்டிச் சிற்றம்பலநாடிகள் * இவரது பெயரிலிருந்து இவர் யாக்கையை வெறுத்துப் பழுதையைக் காலிற் கட்டியிருந்தார் எனத்தெரிகிறது. இவர் கௌரீமாயூரஞ் சார்ந்து பக்குவிகளாகிய அறுபத்துமூன்று மாணக்கர்களுக்கு ஞானோபதேசம் செய்துகொண்டிருந்தார். இவர் சமாதியடைந்த இடம் சித்தர்காடு ‖ எனவழங்கப்படுகிறது. இவரும் இவர் மாணவர்களும் இயற்றியுள்ள நூல்கள் சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கொத்து என்னும் பெயருடன் தொகுக்கப்பெற்றுள்ளன. அம்மாணவர்களுட் சிறந்தார் கச்சிஞானப்பிரகாசர்†, பழுதைகட்டிச் சம்பந்த தேசிகர், சிவபுரம் ஞானப்பிரகாச தேசிகர், சிவபுரம் தத்துவப் பிரகாச தேசிகர் என்போர். இந்நால்வருள் கச்சி ஞானப்

---

* இப்பெரியாரைத்தவிர சின்ன பழுதைகட்டி பெரிய பழுதைகட்டி என இருவர் இருந்தனர் என்றும், அதில் ஒருவர் மதுரையில் இருந்து திருச்செந்தில் முருகன் அருள்பெற்றுத் "திருச்செந்தூர் அகவல்" என்னும் நூல் இயற்றினர் என்றுங் கூறுவர்.

‖ இவ்வூர் மாயூரம் ஜங்ஷனுக்கு மேல்பால் கற்சாலையிலுள்ளது.

† காஞ்சியில் நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாசரென்று மற்றொருவர் இருந்தார் என்றும், அவர் செங்குந்த பரம்பரையினருக்குக் குருவென்றும் கூறுவர்.

பிரகாசர் காஞ்சிசென்று ஞானபீடாதிபதியாக எழுந்தருளி யிருந்தார். மற்றைய மூவரும் ஒருவர்பின் ஒருவராக முறையே இருந்து வந்தனர். சிவபுரம் தத்துவப் பிரகாச தேசிகரிடத்தில் அருள்பெற்ருர் பலர். அவர்களுள் ஒருசாரார் திருவாரூர் அபிஷேகக் கட்டளை, அன்னதானக் கட்டளைகளைப் பரிபாலித்து வந்தார்கள். மற்ஞெரு சாராருள் சிறப்புடையார் பழுதைகட்டி (ச்செட்டித்தெரு) ஞானப்பிரகாச தேசிகர். இவர் திருவாரூர் இராஜாங்கக் கட்டளையைப்‡ பரிபாலித்து வந்தார். பழுதைகட்டிச் செட்டித்தெரு ஞானப்பிரகாச தேசிகர் பால் அருள்பெற்ருர் சிதம்பரநாத மாசிலாமணி கமலை ஞானப்பிரகாச தேசிகர். இப்பெரியார் குரு உபதேசம்பெற்ற தோடு ஆரூர் சித்தீச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் தட்சிணு மூர்த்தி சந்நிதானத்தில் அசரீரிவாக்கினுல் ஞானப்பிரகாசர் என்ற திருநாமம் அநுக்கிரகிக்கப்பெற்றுச் சிவஞான நிட்டையி லிருந்து சிறப்புடன் விளங்கினர்.

ஞானப்பிரகாசரது மாணுக்கர்கள் பலருள் சிறப்புடையார் ஸ்ரீமத் குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள். அவர்கள் தமது குருவாணைப்படி தருமபுரம் வந்து ஆதீன முதற்குரவராக எழுந்தருளியிருந்து ஆனந்தபரவச தேசிகர், சச்சிதானந்த தேசிகர், மாசிலாமணி தேசிகர் முதலாகிய பலசீடர்களுக்குச் சிவஞானேபதேசம் செய்துகொண்டிருந்தார். இதனுலேயேதான் தருமையாதீனக்குரவர்கள் திருக்கயிலாய பரம்பரை, நந்தி மரபு, மெய்கண்ட சந்தான குரவர்கள் எனப்போற்றப்படுகின்ருர்கள்.

## ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமிகள்

பாண்டிவளநாட்டில் நீர்வளம் நிலவளம் மிக்க ஸ்ரீவில்லிபுத்தூரில் சுமார் நானூறு வருடங்களுக்கு முன்னர், சிறப்புற்ற கார்காத்த சைவ வேளாளர் குலத்திலே, சிவநேசச்

---

‡ இன்றும் அக்கட்டளை தருமபுர ஆதீன பரிபாலனத்துக் குட்பட்டிருக்கிறது.



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீன
ஆதி பரமாசாரிய சுவாமிகள்
ஸ்ரீ குருஞானசம்பந்தர்

செல்வமிகுந்த சுப்பிரமணியபிள்ளை யென்பவர்செய்த சிவபூஜா புண்ணியபல மேலீட்டினல் அவர் மனைவியாராகிய கற்பிற் சிறந்த மீனுக்ஷியம்மையாரிடத்திலே, மங்கள சுப முகூர்த்தங் கள் நிறைந்த சோமவார தினத்திலே, திருவவதாரஞ் செய் தருளினர். தாய்தந்தையர்கள் களிப்புற்று ஞானசம்பந்தன் எனுந் திருநாமமிட்டழைக்க, பதினறுமாண்டுக்குள் தென்மொழி வடமொழிக ளிரண்டினும் மிக வல்லராய், ஆகம சாஸ்திரங்க ளெல்லாம் ஓதியுணர்ந்து சிவஞானச் செல்வராய் விளங்கினர்.

இவ்வாறிருந்துவருங் காலத்தில் ஒருநாள் ஞானசம்பந்த ருடைய தாய்தந்தையர்கள், தங்களுடைய ஆத்மார்த்த மூர்த் தியாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்க விரும்பி, மதுரைக் குப் புறப்படுங்காலையில், தமது அருமைப் புதல்வராகிய ஞான சம்பந்தரையும் உடனழைத்துச்சென்று, ஸ்ரீசோமசுந்தரக் கடவுளையும் மீனுக்ஷியம்மையாரையும் தரிசித்துக்கொண்டு சில நாளங்கேயே தங்கியிருந்து பின்னர் தங்களூருக்குத் திரும்பு கையிற் றம்புதல்வராகிய ஞானசம்பந்தரையு மழைக்க, அவர் தாய்தந்தையர்களைப் பார்த்து, ‘என் தாய்தந்தையர்க ளிவ்வா லயத்தின்கண்ணே யிருக்கையில், அவர்களைவிட்டுப் பிரிந்து பொய்யா யழிந்தொழியும் உங்களுடன் வரேன்’ என்று பல சாஸ்திர வாயிலாகச் சமாதானஞ்சொல்ல, அவர்கள் ஒருவாறு மனம் தேர்ந்து மதுரையிலேயே இருக்குமாறு அவரை விட்டுப் போயினர்.

பின்பு ஞானசம்பந்தர் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடி நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு சோமசுந்தரக்கடவுளையும் மீனுக்ஷியம்மையாரையும் தரிசித்து வணங்கித் துதித்துப் பலநாள் வசித்துவருகையில், ஒருநாள் பொற்றாமரைத் தடாகக்கரையிற் சில சிவனடியார்கள் சிவபூஜைசெய்து ஆனந்தக் கண்ணீர் பெருகத் தோத்திரஞ் செய்தலைக் கண்ணுற்றார். தாமும் அவ் வாறு சிவபூசை செய்தானந்தமுற விரும்பிச் சோமசுந்தரக் கடவுள் முன்னிலையிற்சென்று நின்று பிரார்த்தித்துத் தம்





மிருக்கை சேர்ந்து அன்றிரவில் நித்திரைசெய்ய, சோமசுந்தரக் கடவுள் கனவின்கண் எழுந்தருளி 'ஞானசம்பந்தா! நாம் சிவ லிங்க ரூபமாகப் பொற்றாமரைத்தடாகத்தின் ஈசான மூலையில் கங்கைக்குள் ளிருக்கின்றோம். காலையில் அங்குச்சென்று மூழ்கி எடுத்து உன்விருப்பப்படி பூசிப்பாயாக!' என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். ஞானசம்பந்தர் திடுக்கிட்டெழுந் ததிசயமுற்று ஆனந்தக் கூத்தாடித் தோத்தரித்தவண்ணமே, அதிகாலையில் பொற்றாமரைத் தீர்த்தத்திற்குச்சென்று நீரில் மூழ்கிப் பார்க்குங்கால், பெட்டகக்கோயிலொடுந் தனது கையில் வந்தெழுந்தருளிய சிவலிங்கத்தையெடுத்து ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு சந்நிதானத்திற் சென்று, சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து வணங்கி,

"கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடு மற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட வென்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே"

என்னும் சொக்கநாதக் கலித்துறையைப்பாடி, "அடியேன் விரும்பிய வண்ணம் அருள் செய்தீர்; இனி இச்சிவலிங் கத்தைப் பூசித்துய்தற்கேதுவாகிய சிவஞானோபதேசஞ் செய் தருளும் ஞானாசாரியரையும் அனுக்கிரகித் தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து விடைபெற்றுக்கொண்டு தம்மிருக்கையிற் சேர்ந்து நித்திரை செய்தார். சோமசுந்தரக்கடவுள் முன்போல் கனவில் எழுந்தருளி "ஞானசம்பந்தா! திருவாரூரின்கண் சென்று நமதுபதேசபரம்பரையில்வந்த ஞானப்பிரகாசதேசிகனிடத்தில் ஞானோபதேசம்பெற்று நம்மைப்பூசித்து வருவாயாக!" என்று கட்டளையிட்டருளி, அவ்வாறே திருவாரூரில் ஞானப்பிரகாச தேசிகர் கனவிலும் எழுந்தருளி, 'ஞானப்பிரகாசனே! சோம வாரத்தன்று உன்னிடம் வருகிற நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி சிவஞானோபதேசஞ் செய்து, சிவலிங்கபூசையும் எழுந் தருளப்பண்ணிவைப்பாயாக!' என்று கட்டளையிட்டு மறைந் தருளினர்.

ஞானப்பிரகாச தேசிகர் சோமசுந்தரக்கடவுள் தம்மேற் கருணைகூர்ந்து கனவில் எழுந்தருளி கட்டளையிட்டருளியவாறு சோமவார தினத்தில் காலையிலெழுந்து கமலாலயத்தில் ஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ்டான சிவபூஜாதிகளை முடித்துக் கொண்டு, சிவாலயத்திற்சென்று, தியாகராஜப் பெருமானைத் தரிசித்துத் சித்தீச்சரத்திலுள்ள தமது உபாசனமூர்த்தியாகிய ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி பகவான் சந்நிதானத்தில் கிழக்கு முகமாய் வீற்றிருந்து, ஞானசம்பந்தர் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந் தனர். இவர் இவ்வாறிருக்க,

மதுரைமாநகரத்தில் ஞானசம்பந்தர் தமக்குக் கனவின் கண் சோமசுந்தரக்கடவுள் கட்டளை யிட்டருளியதைக் கேட்டுத் திடுக்கென நித்திரைவிட்டெழுந்து மெய்சிலிர்த்து, ஆனந்தக் கண்ணீர்பொழியத் தோத்தரித்து வணங்கி, அதிகாலையிலெழுந்து சிவாலயத்திற்குச்சென்று, பொற்றாமரைத் தடாகத்தில் மூழ்கி, நித்திய கர்மானுஷ்டானங்களெல்லாம் முடித்துக்கொண்டு, சோமசுந்தரக்கடவுளையும் மீனாக்ஷியம்மையாரையுந் தரிசித்து வணங்கி விடைபெற்று அங்கு நின்றும் புறப்பட்டு, இடையி லுள்ள திருவானைக்கா முதலிய தலங்களையுந் தரிசித்துக் கொண்டு குறிப்பிட்ட சோமவாரத்தன்று திருவாரூரை யடைந் தார். கமலாலய தீர்த்தத்தில் மூழ்கி நித்திய கர்மானுஷ்டானங் களை முடித்துக்கொண்டு, சிவாலயத்திற் சென்று வணங்கிக் குருநாதன் தரிசனம் எப்போது கிடைக்குமோவென்று கவலை யுற்றவராய் வலம் வருகையில் சித்தீச்சரத்தின்கண் தக்ஷிண மூர்த்திசந்நிதானத்தில் கிழக்குமுகமாய்ப் பெருங்கருணையோடும் ஈனமல விருணீக்கியருளும் ஞானபானுவேயென வீற்றிரா நின்ற குருமூர்த்தியாகிய ஞானப்பிரகாச தேசிகரைக் கண்ட வுடன் தனக்குக்கனவில் உணர்த்தியருளப்பட்ட ஞானகுரவ ரிவரேயெனத்தெளிந்து காந்தங்கண்ட இரும்பேபோல் விரைவிற் சென்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர்.

அப்போது ஞானப்பிரகாசதேசிகர் மிகுந்த பேரன்போடு ஞானசம்பந்தரை இருகரங்களாலும் எடுத்து "ஞானசம்பந்தா!

அஞ்சாதே" என்று அபயங்கொடுத்து, சந்நிதானத்தில் வடக்கு முகமாயுட்காரவைத்துத் திருவருணோக்கத்தால் ஞானதீக்கை செய்து, சிரமேற் றிருவடிக் கமலஞ்சூட்டி, சிவஞானோபதேசஞ் செய்து, சொக்கலிங்கபூஜையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுத் தருளினர். அச்சொக்கலிங்கத்தினை ஞானபூஜா விதிப்படிப் பூசித்து, சொக்கநாத வெண்பா என்னும் பாமாலைசூட்டித் தம் குருநாதனுகிய ஞானப்பிரகாச தேசிகரை "ஞானப்பிரகாச மாலை'' என்னும் தோத்திரப் பிரபந்தத்தால் துதித்துத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நின்றனர்.

இவ்வாறு திருவாரூரில் ஞானசம்பந்தர் குருக்ஷேத்திர வாசஞ்செய்துகொண்டு குருபணிவிடையை இயற்றிக்கொண்டு வருநாளில், ஒருநாள் பலசீடர்கள் சூழக் குருமூர்த்தியோடு கோயிலுக்குப்போய் அர்த்தயாம தரிசனஞ் செய்துகொண்டு திரும்புகையிற் கைவிளக்குப் பணிவிடைக்காரன் தூங்கிவிட்டமை தெரிந்து ஞானசம்பந்தர் தாமேசென்று கைவிளக்கையெடுத்துக் கொண்டு, இன்று இப்பணி தமக்குக் கிடைத்ததே என்று பெரு மகிழ்ச்சியுடன் குருநாதனுக்கு முன்சென்றார். மடத்திற்குள் புகுமுன் ஞானப்பிரகாச தேசிகர் ஞானசம்பந்தரை 'நிற்க' வெனப் பணித்துத் தாம் உட்சென்று நித்திரைசெய்தருளினர்.

ஞானசம்பந்தரும் குருமூர்த்தியின் கட்டளைப்படி கை விளக்கைப் பிடித்தவண்ணமே தமக்குபதேசித்தருளிய சிவ ஞானோபதேச நிலையிலேயே விடியும் வரையும் நின்றருளினர். அன்றிரவு பெருமழைபெய்தும் திருவருளினல் அவர்திருமேனியில் படாது ஒருகஜதூரம் வரையும் சுற்றிலும் கோடுகட்டினதுபோல் கீழ்ப்பூமியிலும் சலம்புகாமல் நின்றது. அவ்வாறிருந்ததை விடியற்காலத்தில் சாணந்தெளிக்கவந்த குருபத்தினி கண்டு மனம் அதிசயித்து உள்ளே திரும்பியோடி ஞானப்பிரகாச தேசிகருக்குத் தெரிவிக்க, அவர் உடனே திடுக்கிட்டெழுந்து ஓடிவந்து பார்த்துத் திருவருளின் மகிமையைச் சிந்தித்து, ஆனந்தக்கண்ணீர்சோர, சமீபத்திற்சென்று தமது இருகரங்



ஆதீன மடாலயம் முன்பார்வை.

களாலும் ஞானசம்பந்த தேசிகரை யிறுகப் புல்லிக்கொண்டு "அப்பனே! நீர் நாமும் வணங்குங் குருராயராகிவிட்டீர்" எனத் திருவாய்மலர்ந்து, "இனி நீர் உமது விருப்பின்படி வேண்டிய விடத்திற் சென்றிருந்துகொண்டு, உம்மை வந்தடைந்த பக்குவர்களுக்குச் சிவஞானேபதேசஞ்செய்து, சமயபரிபாலனம் நடாத்தி வருவீராக" எனக் கட்டளையிட்டருளினர். அதனைக்கேட்ட குருஞானசம்பந்தர் மனம்பதைத்து "அடியே னெவ்வாறு தேவரீரைவிட்டுப் பிரிந்திருப்பேன்" என்று பலவாறு விண்ணப்பித்து நின்று "அடியேனுக்குச் சுதந்திர முண்டோ?" எனும் கருத்தினை உட்கொண்ட,

கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
வெனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்ர காச சிதம்பரவின்
றுனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே

என்னுங் கட்டளைக்கலித்துறையால் தம்முடைய கருத்தைத் தெரிவித்துக் கொண்டனர். அதைக்கேட்டருளிய ஞானப்பிரகாச தேசிகர் உளங்கனிந்து 'ஞானசம்பந்தரே! நமதூருக்கு வடக்கே இரண்டு யோசனை தூரத்துக் கப்பாலுள்ள மாயூரத்துக்குக் கிழக்குத் திக்கில் ஒரு குரோசத்துக்குள், எமதருமனல் பூசிக்கப் பெற்றதும், அகஸ்திய முனிவர் முதலிய மகான்களால் பூசித்து வழிபடப்பெற்றதுமான வில்வாரண்யமாகிய தருமபுரத்தைச் சென்றடைந்து பக்குவிகளுக்கு ஞானேபதேசஞ்செய்து சைவ சித்தாந்த சமய பரிபாலன பீடாதிபதியாய் வாழ்வீர்' என்று ஆணைதந்தருளினர்.

அவ்வண்ணமே, குருஞானசம்பந்தரும் திருவாரூரை அரிதி னீங்கி, ஸ்ரீவாஞ்சியம் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு, தருமபுரத்தை யடைந்து, அங்குள்ள ஸ்ரீ தருமபுரீசுவரரையும் அபயாம்பிகையையும் தரிசித்து வணங்கினர். அக்கோயிலின் மேற்புறத்துள்ள கூவிளந்தோப்பில் ஓராசிரமம் அமைத்து

அதில் வசித்துவந்தனர். அங்கு சொக்கநாதப் பெருமானை எழுந்தருளுவித்துப் பூசித்தும், தம்மையடைந்த பக்குவர்களுக்கு ஞானதிக்கை புரிந்து ஞானோபதேசஞ் செய்தும், பற்பல அற்புதங்களால் திருவருளைவிளக்கிக் கொண்டும் எழுந்தருளியிருந்தனர். சிவபோகசாரம், முத்திநிச்சயம், திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல், சோடசகலாப் பிராசாத ஷட்கம் முதலிய அனுபவ நூல்களாகிய ஞானசாத்திரங்களையும் அநேக தோத்திர நூல்களையுஞ் செய்தருளினர்.

அகஸ்தியருடைய மாணுக்கர்களாகிய முனீந்திரர்கள் ஆங்குள்ள ஸ்ரீ தருமபுரீசுவரருக்கு நித்திய நைமித்திய முதலியவைகளை நடாத்திக்கொண்டிருந்தனர். ஞானசம்பந்த தேசிகரது அருட்குணங்களைக்கண்டு பேரானந்த முற்றவர்களாய்த் தங்களுடைய ஆசிரமங்களையும் சிவாலயத்தையும் அவரிடம் ஒப்புவித்தனர். அவைகளைப் பரிபாலித்துவர இரசவாத முதலிய பல சித்திகளையும் உபதேசித்து, "எங்களைப்போலவே இவைகளை நீரும், உமக்குப் பின்வரும் சந்ததியாரும் பரம்பரையாய்ப் பரிபாலித்து வருவீர்களாக" என்று ஆசீர்வதித்துத் தங்களுடைய இருப்பிடஞ் சார்ந்தனர்.

அவ்வாறே, ஞானசம்பந்த தேசிகர் சிவாலயத்தையும், சிவனடியார்களாகிய திருக்கூட்டங்களையும் தமது பெருங்கருணையினாற் பாதுகாத்துச் சிவாலயத்திருப்பணி, மகோற்சவம் முதலியவைகளை நடாத்திக்கொண்டு வந்தார்கள். ஓர்சமயம் சிதம்பர தரிசனத்திற்கு எழுந்தருளி ஆயிரக்கால் மண்டபத்தில் இரவு பகலாய் ஆனந்த நிட்டையுற் றிருந்தனர்; ஒரு நாள் நடராசப் பெருமானருளால் சிவகாமியம்மையார் நடுயாமத்தில் தமது பள்ளியறையில் வைத்துள்ள வெள்ளிக்கிண்ணத்துள்ள பாயசத்தையும், பொற்கிண்ணத்துள்ள திருவமுதத்தையும், கங்கை நீரையும் எடுத்துவந்து கொடுத்தருளினர். இக்குருமூர்த்திகள் ஞானநோக்கால் புலியும் பசுவும் தம்முள் பகைமைநீங்கி, ஒரே



ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி கோயில் உள்தோற்றம்



பரசலூர் ஸ்ரீ வீரட்டேசுவர சுவாமி கோயில் உள்தோற்றம்

குளத்தில் நீர் பருகி, ஒரே பொழிலில் மகிழ்ந்து விளையாடும்படிச் செய்தருளினர்*. இவ்வாறு ஞானவரசு நடாத்திய குருமூர்த்திகள் ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயத்துக்கு மேற்கே திருக்கோயில்கட்டிச் சிவலிங்கப்பிரதிட்டை செய்தனர். தமக்குச் சமீபத்தில் பரிபூரணதசை வருதலைத் திருவருளுணர்த்த வுணர்ந்து அச் சிவலிங்கப் பெருமான் திருவடி நிழலிற் சமாதிகூடத் திருவுளங் கொண்டு, தமதடியார்களில் ஆனந்தபரவசருக்கு ஞானோபதேசஞ்செய்து, தமது பீடாதிபத்தியத்தையும் சொக்கலிங்க பூசையையும் கொடுத்தருளி, "நீர் நமது பீடத்திலிருந்துகொண்டு ஞானோபதேசஞ் செய்து, சொக்கநாதரைப் பூசித்து, சிவாலயத்தையும் சைவ சமயத்தையும் பரிபாலித்து வருவீராக" எனக் கட்டளையிட்டருளிச் சிவசமாதியெய்தினர்.

## 2. ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆனந்தபரவச தேசிகர்

ஆனந்தபரவசர் அதிதீவிர பக்குவரானபடியால் குருவருள் ஒன்றையே நாடிநின்றார். அதுகிடைத்ததும் சிவஞான மேலீட்டினால் ஆனந்தக்கண்ணீர்பொழியத் தம் குருவின் சமாதி முன்னிலையில் வீழ்ந்து வணங்கினர். அதன் மேற்புறத்திற் சென்று, தம் குருமூர்த்தியின் திருக்கோயிற் சிகரத்தைத் தரிசித்த வண்ணம் கிழக்குமுகமாயிருந்து, சமாதிகூடி, சிவானந்தாத்வைத முத்திநிலையெய்தினார்.

---

* குருமூர்த்திகளது திருவுருவப்படத்தில் இவ்வுண்மை புலப்பட வரையப் பெற்றிருப்பதைக் காணலாம்.

" புலியுமோ ராவு டீட்பொடு வாவி புகுந்துநீ ருண்டட னடந்து
நலிவிலா வகைபி லோர்பொழிற் சேக்கை நயந்துவாழ்ந் திருந்தன கண்ட
வலியவ ரன்று முதலுப சார வகையினி னிற்கவே செய்தாய்
* * * *"

என்ற பாடலும் இதனை வலியுறுத்தும்.

## 3. ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர்

ஆனந்தபரவச தேசிகர் முத்திநிலையெய்தியதை உணர்ந்த திருக்கூட்டத்து அடியார்கள் யாவரும் 'பிறவித்தாபம் போக்கும் குருமூர்த்தியின் திருவடி நீழலை யிழந்தோமே' என்று கவலையுற்றார்கள். சமாதிகூடியிருந்த குருஞானசம்பந்த சுவாமிகளது சந்நிதானத்தை யடைந்தார்கள். 'சுவாமிகள் மீளவும் எழுந்தருளி வந்து, பரம்பரைச் சம்பிரதாயத்தையும், அடியேங்களையும் காத்தருளவேண்டும்' என்று பிரார்த்தித்தனர். ஞானதேசிகர் திருவருளால் உணர்ந்து, மீளவுஞ் சமாதியினின்று எழுந்தருளித் தம் அடியார்களில் ஒருவராகிய சச்சிதானந்தருக்குத் திருவடி சூட்டி ஞானபிஷேகஞ் செய்து, சொக்கநாத பூசையையும் கொடுத்தருளினர். அவ்வாறு செய்தும் அவருக்கு ஞானசமாதி கூடிவராமையால் குருஞானசம்பந்தர் திருவருணோக்கஞ் செய்து,

தானந்த மாதிநடு வில்லா தோங்கும்
சச்சிதா னந்தமயந் தானே யாய
ஆனந்த பரவசனைக் கண்டுங் கண்டு
மந்தந்தோ பரகதியை யறிந்தீ ரில்லை
மானந்தான் வடிவாகி நிற்ற லாலோ
மலமாயை கன்மமிவை மடியா தாலோ
ஞானந்தா னுமதுளத்தி லுதியா தாலோ
நாமறியோ முமதுமய னவிற்று வீரே

என்ற திருவருட்பாடலைத் திருவாய்மலர்ந்தருளலும், அந்நிலையினை யெய்தினர்; அஃதுணர்ந்து மகிழ்ந்தருளிய ஸ்ரீமத் குருஞானசம்பந்த தேசிகர் 'இனி, நீர் நமது பீடாதிபதியாய் வீற்றிருந்து கொண்டு, சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்து, பக்குவிகளுக்குச் சிவஞானோபதேசஞ்செய்து வருவீராக' என்று கட்டளையிட்டருளி, வைகாசித்திங்கள் அமரபக்க சப்தமி தினத்திலே சிவசமாதி கூடினார்கள்.

சச்சிதானந்த தேசிகரும் குருவாணைப்படிச் சிலநாள் சமய பரிபாலனஞ் செய்திருந்து, தமது அடியார்களுள் ஒருவராகிய

மாசிலாமணிதேசிகருக்கு ஞானோபதேசம் செய்தருளி, முத்திநிலை எய்தினார்கள்.

## 4. ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகர்

சச்சிதானந்த தேசிகர்பால் அருளுபதேசம்பெற்ற மாசிலா மணி தேசிகர் ஞானபீடத்திலெழுந்தருளி அருட் செங்கோல் செலுத்தி வருங்கால் ஒருநாள் அடியார்கள் செய்த பாதபூசை மலர்கள் திருமுறையேடுகளின்மீது இருப்பக்காட்டி யருளினார்கள். தமது தவவலிமையினால் 'தம் தாயாருக்கு அத்வாசோதித்து முத்தியினை அளித்தருளினார்கள். அரவம் தீண்டியிறந்த ஒருவனை உயிர்ப்பித்தருளினார்கள்.

இவ்வாறு பற்பல அற்புதங்கள் நிகழ்த்தித் தம் அடியார்களுக் குக் குருபக்தி சிவபக்திகளைப்பெருக்கி வந்தார்கள். செந்தில் ஆண்டவன் அருள்பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுக்கு ஞான தீக்கை செய்து, காசிசென்று சுத்தாத்வைத சித்தாந்தசைவ சமயஸ்தாபனம் செய்துவருமாறு பணித்து ஆட்கொண்டருளி னார்கள். முத்தி நிச்சயப்பேருரை, ஞானவரணவிளக்கம் முதலிய வைகளை அருளிச்செய்த வெள்ளியம்பலவாணமுனிவருக்குச் சமய, விசேட தீக்கைகள் செய்து சைவ சந்நியாசமும் கொடுத்தருளி னார்கள். பின்னர் ஞானசம்பந்த தேசிகருக்கு ஞானோபதேசம் செய்தருளி ஞானபீடத்திருத்திச் சுத்தாத்வைத சைவசித்தாந்த முத்தியை அடைந்தனர்.

## 5. ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்

ஞானசம்பந்த தேசிகர் ஞானபீடத்தில் எழுந்தருளியிருந்து அருளாட்சி நடாத்தும் நாளையில் மேற்கூறிய வெள்ளியம்பல வாணத்தம்பிரான் சுவாமிகளுக்கு ஞானதீக்கை செய்தருளினார் கள். பின்னொருநாள் தக்ஷிணயாத்திரை செய்யவிரும்பி, பல தலங் களையும் தரிசித்துக்கொண்டு திருக்குற்றால மலையி லெழுந்தருளி

யிருக்கும் காலத்தில் அங்கு ஆற்றில் பிரவாகம் ஏற்பட்டு அதனால் மக்களுக்குத் துன்பம் உண்டாயிற்று. மக்கள் யாவரும் ஒருங்குகூடி குருநாதரிடம் தமக்குற்ற இடுக்கணை விண்ணப்பித்தார்கள். அவர்கள் திருவருளால் ஜலப்பிரவாகங் குறைந்தது. மக்கள் துன்பம் நீங்கி இன்பக்கடலுள் மூழ்கினார்கள். இவ்வாறு திருவருட்டன்மையைப் பல்லாற்றானும் விளக்கிக் கொண்டிருந்து திருஞானசம்பந்த தேசிகருக்கு ஞானபிஷேகம்செய்து தமது பீடாதிபத்தியத்தைக் கொடுத்தருளி முத்திநிலை எய்தினார்கள்.

## 6. ஸ்ரீ-ல-ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிகர்

இக்குருமூர்த்திகள் காலத்தில் பதினாறொடுக்கம் † என்பது மிகச்சிறப்பாக விளங்கியது. அதில் பல அடியார்களும் இரவு பகலின்றி நிட்டைகூடி யிருந்ததாகவும், அவர்களுக்குப் பூசைக்கு வேண்டுவனவும், உணவும் அவ்வப்போது அதற்கென ஏற்பட்ட ஒரு சிறு வாயில்வழியாக அளிக்கப்பட்டன வென்றும் தெரிகிறது.

முப்பொருள்தெரிந்த முனிவராகிய சம்பந்த சரணாலயரும் இந்த ஞானதேசிகர்பால் உபதேசம்பெற்று ஒப்புயர்வற்ற புலவர் திலகமாய் விளங்கினர்.

இவர்கள், அடியார்களுடைய வேண்டுகோட்படி தக்ஷிண யாத்திரை செய்யப்புறப்பட்டார்கள். வழியிற் பலதலங்களையும் வணங்கித் திருநெல்வேலிச் சிந்துபூந்துறை மடத்திற் றங்கினார்கள். அவ்வூரில் அறச்சாலைமடம் என்ற ஒன்று இருந்தது. அதற்கதிபராக ஒருபுலவர் இருந்தார். அவர் நிரம்பக் கற்றவர். சிதம்பரம் குகைமடத்தைச் சார்ந்தவர். அப்போது அந்தக் குகைமடத்து அதிபராக இருந்தவர் ஞானப்பிரகாசர் என்பர்.

---

† பதினாறு கலைகளையும் அடக்கி இருந்து யோகம் செய்யுமிடம். இன்றும் அது ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருத்தளியின் திருச்சுற்றில் அமைந்துளது.

அவர் ஆன்மானந்தவாதி. அவரிடம் புலவர் உபதேசங்கேட்டார். அதனுல் மனவமைதி பெறவில்லை. தருமையாதீன முதற் குரவராகிய ஞானசம்பந்த தேசிகசுவாமிகள் அருளிச்செய்த முத்திநிச்சயத்திற்கு ஒரு மறுப்புரையும் எழுதினுர். என்ன எழுதியும் மனவமைதியின்மையால் அலைந்தனர். புண்ணியப் பயனுகச் சிந்துபூந்துறையில் இந்த குருமூர்த்திகளைச் சந்தித் தார்கள். காட்சியே மனவமைதியளித்தது; மகிழ்ந்தார்; திருவடி களில் நமஸ்கரித்து ஞானுபதேசங் கேட்டார். குருநாதர் அப்புலவருக்குத் தமிழாகரர் எனத் தீக்ஷாநாமம் சூட்டி ஆட் கொண்டருளினுர்கள்.

சின்னுள் தங்கியிருந்து திருக்குற்ருலமலை வழிபாட்டிற்கு எழுந்தருளுகின்றவர்கள் வழியில் வேள்விமலையை யடைந்தார் கள். அங்கு முருகன் வழிபாட்டிற்குச் சென்ருர்கள். வணங்கும் போது வள்ளியம்மையின் திருவுரு இலக்காக வில்லை. ஆதலால் 'இங்கு வள்ளித்தாய் இல்லையோ' என்று கூறினுர்கள். "தாய் இதோ இருக்கிறேன்" என்று திருமேனி வளைந்து காட்சி வழங்கினுர். இந்நிகழ்ச்சியை விளக்கும் சான்றுகள். "எழில் வேள்வி மலையிலோ ரம்மை யெங்கேயென் றியம்பியே திருமு னிற்குஞ், சம்பந்தனுக் கருள்செயென்று வள்ளிக் கருள்செய் சைவ நாயகன்" என்ற க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்ப் பாடற்பகுதி ஒன்று. "வள்ளியம்மை யில்லையோ வென்ன வவள் சிரத்தைநீட்டி, வையம் அறிந்திட விருக்கின்றேன் என்ற மொழிகேட்டு மகிழ்ந்து நின்ற, தூய்யவனுந் தருமை வரு திரு ஞானசம்பந்தன்" என்ற தனிப்பாடற்பகுதி மற்ருென்று. இங்ஙனம் வணங்கிப்பரவசமுற்ற குருமூர்த்திகள் திருக்குற்ருல மலையை யடைந்தார்கள்.

பின்னர், திருவம்பல தேசிகரிடத்தில் தமது ஞானபீடத்தை ஒப்புவித்து 'நமது பரம்பரையை வளர்த்துவருவாய்' எனக் கட்டளையிட்டருளி முத்திநிலை எய்தினர்.

## 7. ஸ்ரீ-ல-ஸ்ரீ திருவம்பல தேசிகர்

திருஞானசம்பந்ததேசிகர்பால் அருளுபதேசம்பெற்ற திருவம்பல தேசிகர் அருட்செங்கோல் நடாத்துநாளில் மூவலூர் சுப்பராயச் செட்டியாரென்பார் காலஞ்சென்ற தனது தாயாருக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்துமுடித்து இக் குருமூர்த்திகள்பால் வந்து வணங்கித் "தாயினை வீடு பெறுவித்தல் புதல்வரது கடனுதலின் அதற்குத் தேவரீர் அருள்பாலித்தல் வேண்டும்" என்று விண்ணப்பித்தார். குருமூர்த்திகள் ஞான நோக்கினுல் அவ்வான்மா செட்டியாரது மனைவியின் கருப்பத்தி லுற்றிருப்பதையறிந்து, "உமக்கு மகவு வேண்டுமோ? தாய் வீடு பெறுதல் வேண்டுமோ?" என்று வினவ, செட்டியார் "அடியேன் முதலில் வேண்டுவது தாய் வீடு பெறுதலே" என்று தெரிவித்தனர். குருமூர்த்திகளும் "அவ்வாறே செய்வோ" மெனத் திருவுளம்பற்றித், திருமஞ்சன முடித்துக்கொண்டு ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்து அவ்வான்மாவைக் கொணர்ந்து தீக்ஷை செய்து வீடுபேறடைவித்தருளினர்.

பின்னெருநாள், தஞ்சை யரசன் கடலாட விரும்பிச் சேனைகள் சூழ, காவிரிப்பூம்பட்டினம் நோக்கிச் சென்முன். செல்பவன் தருமபுரம் அணுகினுன். ஞானபுரீஸ்வரர் ஆலயத்தில் அர்த்தயாம பூஜைநடந்தது. மணியோசை காதிற்பட்டது. ஊர்தி விட்டிழிந்து மனத்தினுல் வணங்கிப் பின்னர் ஊர்தியிலேறிச் செல்லலாயினன். அப்போது உடனிருந்தசிலர் "சூத்திர சமாதியைத் தாங்கள் வணங்கியதால் பாவத்திற்குள்ளானீர்கள். ஆதலால் பிராயச்சித்தம் செய்துகோடல் வேண்டும். அதுவுமன்றி, மற்றையோரும் இக்குற்றத்திற்கு ஆளாகாதவாறு இவ்வாலயத்தை யிடித்து விடுதலே நலம்" எனக்கூறினர். அரசனுக்கும் ஞானதேசிகர் திருவருள்பெறுங்காலம் சமீபித்தபடியால் ஏவலாளரைக்கூவி ஆலயத்தை இடிக்கும்படி உத்தரவிட்டு அப்பாற் சென்றனன். ஏவலாளர்களும் ஆலயத்தை இடிக்கத் தொடங்கினுர்கள். அதுகண்ட அடியார்குழாங்கள் விரைந்து ஓடிக் குருமூர்த்திகளிடம் தெரிவிக்க, குருமூர்த்திகள்,

"ஈசன் பலகினை னென்றக்கா லாலயத்தின்
மோசம் வந்ததென்று மொழியலா—மீசனே
யாக்குவது மாக்கி யழிப்பதுவுந் தானுனல்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து"

என்று அடியார்களுக்கு ஆறுதல் கூறியருளினர். எம்பெருமானும் தமது கூத்தொலியினைக் கேட்பித்துத் திருவருள் பாலித்தனர்.

அவ்வொலியினைக்கேட்ட குருமூர்த்திகள் இறைவன் திருவருளை வியந்து சந்நிதானத்தில் நின்று,

"தேசஞ் சிவாலயங்கள் சேர வலையவொரு
மோசம்வந்த தையோ முதல்வனே—தேசத்து
மன்னைவெறுப் பேனோ வருவினையை யூட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ வுரை"

என விண்ணப்பித்துப் பஞ்சாக்கரத்தைச் செபிக்க, இருப்புக் கோல்படு மிடந்தோறும் உதிரம் பெருக அரசன் ஏவலாளர்கள் மூர்ச்சையுற்று வீழ்ந்தனர். நகரெல்லையைக் கடந்துசென்ற அரசனுக்கோ கண்ணொளி மழுங்கிற்று. உடனே அரசன் ஆலயத்தை இடிக்கும்படிக் கேட்டுக்கொண்டவர்களை நோக்க அவர்களும் ஊமையராய்த் திகைத்து நின்றார்கள். அப்பொழுது அரசன் தனது குற்றத்தையுணர்ந்து மீண்டும் தருமபுரமடைந்து தன் ஏவலாளர்களின் நிலைமையைத் தெரிந்துகொண்டு மடாலயத்தினுட் சென்று குருமூர்த்திகளின் திருவடிகளில் விழுந்து, 'பிழை பொறுத்தருள வேண்டும்' எனப் பிரார்த்தித்தான்.

குருமூர்த்திகளும் இறைவன் அருள்புரிவான் எனத்திருவுளம் பற்றி அரசனுடன் ஆலயத்திற்கு எழுந்தருளினர்கள். ஆலயத்தை யடைந்த அரசன் "இறைவனைத் தரிசித்தற்குக் கண்ணொளி இல்லையே; எவ்வாறு காண்பேன்" என்று வருந்த குருஞான சம்பந்தர் அருளால் ஒருகண் விளக்கமுற்றது. ஏவலாளர்கள் கீழேவீழ்ந்து கிடப்பதையும், கோல்பட்ட இடங்களில் உதிரம் பெருகுவதையும் கண்டு குருமூர்த்திகளைப் பிரார்த்திக்க குரு

மூர்த்திகள் திருநீற்றினைத் தெறித்தார்கள். உடனே உதிரம் பெருகுதலும் நின்றது. ஏவலாளர்களும் எழுந்து ஞானமூர்த்தி களை வணங்கி நின்றார்கள்.

பின்னர், அரசன் காவிரிப்பூம்பட்டினஞ் சென்று கடலாடித் தருமபுரத்தின் தென்கீழ்த் திசையில் கூடாரம் அமைத்துத் தன் பரிவாரங்களுடன் தங்கி § சுவாமி தரிசனம் செய்து வருங்கால் ஒருநாள் குருமூர்த்திகளிடம் "'சூத்திரர்களுக்குச் சந்நியாசம் பெற அதிகாரமில்லை' என்று சிலர் கூறி அடியேனை மயக்கி விட்டார்கள்; அதன் உண்மையைத் தெரிவித்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டனன். குருமூர்த்திகள் பலபிர மாணங்களால் அவன் ஐயத்தை நீக்கி, வருணாச்சிரம சந்திரிகை* என்றதோர் நூலும் இயற்றியருளினார்கள். சந்நியாசத்தில் அதிகாரமில்லை என்று கூறியவர்களும் வெட்கித் தலைகுனிந்தனர். அரசன் ஒரு மண்டலம் சுவாமி தரிசனம் செய்து முடித்தவுடன் குருவருளால் மற்றொரு கண்ணும் விளக்கமுற்றது. ஊமையாயி னாரும் ஊமை நீங்கப் பெற்றார்கள். அதனால் அளவிலா உவகை கொண்ட அரசன் தான் முதலில் தரிசித்தது அர்த்தயாம பூசையாதலால் அது சிறப்புற நடைபெறுதற்கு வேண்டிய சில நிலங்களை அளித்து விடைபெற்றுச் சென்றனன்.

அவ்வரசனின் மந்திரியாகிய கோவிந்ததீக்ஷித ரென்பார் இவ்வற்புதங்களைக் கேள்வியுற்றுத் தருமபுரம் வந்து குரு மூர்த்திகளைக்கண்டு வணங்கி, திருச்சத்திமுத்தத் திருக்கோயில் திருப்பணி செய்யுங்காலத்து அங்கு ஓர் மடம் அமைத்துக் குருமூர்த்திகளை எழுந்தருளியிருக்கச்செய்தும், திருவையாற்றில் பூசமண்டபமாதி திருப்பணிசெய்யுங்காலத்து திருவையாற்றில் எழுந்தருளுவித்தும், தொண்டுபல செய்து சிலநாள் உடனிருந்து பின்னர் விடைபெற்றுச் சென்றார். அப்போது திருக்

---

§ தங்கிய இடம் மன்னம்பந்தல் என வழங்கப்படுகிறது.

* இந்நூல் இவ்வாதீனத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

கூட்டத்தடியார்களுள் ஒருவரைக்கொண்டு திருவையாற்றுப் புராணம் இயற்றுவிக்கப்பட்டது.

இக்குருமூர்த்திகள் சிலநாள் சிவஞானபாநுவாய் விளங்கி யிருந்து தம் அடியார்களுள் ஒருவருக்கு ஞானபிஷேகம் செய்து அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் எனத் திருநாமஞ் சூட்டிப் பீடத்தில் இருக்கச்செய்து முத்திநிலை எய்தினர்.

## 8. ஸ்ரீ-ல-ஸ்ரீ அழகியதிருச்சிற்றம்பல தேசிகர்

தக்ஷிணயாத்திரை செய்ய விரும்பிப் பலதலங்களையும் தரிசித்துக்கொண்டு கற்குளமாநகரில் எழுந்தருளியிருக்குங் காலத்தில், அத்தலத்திலுள்ள சிவசிதம்பரம்பிள்ளை என்பார் ஞானதேசிகரைத் தரிசித்து வணங்கி மாகேசுவர பூசை, பட்டணப்பிரவேசம் முதலியன சிறப்புற நடத்திவைத்தனர்.

இந்நிகழ்ச்சிகளைக்கண்டு அழுக்காறுகொண்ட சிலர் மலடி யான ஓர் பேரிளம் பெண்ணை (வயது முதிர்ந்தவள்) ஞான தேசிகரிடம் அனுப்பிப் பிள்ளைப்பேறு வேண்டுமென்று விண்ணப்பிக்கச் செய்தனர். அவ்விண்ணப்பத்தைத் திருச் செவிசாத்திய குருமூர்த்திகள் அப்பெண்வந்த வரலாற்றை ஞானத்தால் உணர்ந்து "நீ விரும்பியவாறே ஆகுக" என ஆசீர் வதித்துப் பரிகலசேடத்தை அளித்தருளினார்கள். அம்மாதும் அதனை ஏற்று உண்டு மகிழ்ச்சியுடன் வீடுசென்றனள். தேசிகரும் சிவசிதம்பரம் பிள்ளை வேண்டுகோட்கிணங்கிச் சிலநாள் அங்கிருந்து, பின்னர் தக்ஷிண யாத்திரையைப் பூர்த்தி செய்துகொண்டு தருமபுரத்திற்கு எழுந்தருளினார்கள்.

பரிகலசேடமுண்ட அம்மாது சிலநாட்களில் கருவுற்று ஓர் ஆண்மகவைப்பெற்று, அதற்கு அழகிய சிற்றம்பலப் பரிகலம் என நாமகரணமிட்டு, மகனுடன் கணவனையும் அழைத்துக்

கொண்டு தருமபுரத்திற்கு வந்து ஞானதேசிகரைப் பணிந்து திருவருள்பெற்றுச் சென்றனள்.

இவ்வாறு பல அற்புதங்களை நிகழ்த்திக்கொண்டு ஞான பானுவாய் எழுந்தருளியிருந்த தேசிகசுவாமிகள் சோணாட்டுத் தலங்களை வழிபட்டுக் கோட்டூருக்கு அருகில் வரும்போது பரி பூரணநிலை நேரப்போவதை உணர்ந்து, தமது பீடாதிபத்தியத் தையும் சொக்கநாத பூசையையும் திருநாவுக்கரசு தேசிகருக்கு அளித்து அத்தலத்தில் முத்திநிலை யெய்தினார்கள்.

## 9. ஸ்ரீ-ல-ஸ்ரீ திருநாவுக்கரசு தேசிகர்

இந்த குருமகாசந்நிதானம் அருட்செங்கோல் நடாத்துகை யில் ஓர் நாள் புள்ளிருக்கு வேளூருக்குச் சென்று ஸ்ரீசெல்வ முத்துக்குமார சுவாமியைத் தரிசித்தார்கள். அச்சமயம் திரு முன்னர்த் தொங்கவிடப்பட்டிருந்த திரை திருவருளால் சுருண்டு மடங்கியது. குருமூர்த்திகள் பெருமான் தம்மீது காட்டிய கருணையை நினைந்து வியந்து மகிழ்ந்து திருவருளனுபவத்தில் திளைத்தார்கள்.

வைணவன் ஒருவன் குருமூர்த்திகளின் முன்னின்று திரு மாலே பரம்பொருள் என்று உரையாடி, ஞானதேசிகர் திருக் கண் நோக்கத்தால் ஊமையாயினன். உடனே வைணவன் தான் செய்த தவறுணர்ந்து சுவாமிகளது திருவடிகளில் வீழ்ந்து வணங்க, சுவாமிகள் மனமிரங்கி, அவ்வைணவனுக்குத் திரு வெண்ணீறு அளித்து ஊமைநீக்கி, தமது அடியார்களைக் கொண்டு சைவசமயச்சிறப்பையுஞ் சம்பிரதாயங்களையுங் கற் பிக்கச்செய்து தொண்டு கொண்டருளினார்கள்.

பின்னர் அங்குநின்றும்நீங்கித் தருமபுர மடாலயத்தி லெழுந்தருளி யிருக்குங்காலத்தில் பூனைகள் கிளிகளுடனும், குயில்கள் செம்போத்துக்களுடனும், பாம்புகள் எலிகளுடனும்

அஞ்ஞானத்தினல் போர்புரிந்துகொண்டு துன்பம்விளைத்தலைக் கண்ணுற்றுத் திருக்கடைக்கண் சாத்தி, அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தை யருள, உடனே அவைகள் யாவும் பகைமை நீங்கித் திருவடிகளில் வந்து அடைக்கலம் புகுந்தன. ஞான தேசிகர் திருவடி தீக்ஷையும் புரிந்து அவைகளைச் சிவகதியிற் சேர்த்தருளினர்கள்.*

இக் குருமூர்த்திகளிடத்தில் தென்களந்தைப் படிக்காசுப் புலவர் சைவ சந்நியாசம் பெற்றுப் பதினெருடுக்கத்தம்பிரான் களில் ஒருவராக எழுந்தருளியிருந்து குருவாணைப்படி புள்ளிருக்கு வேளூர் கோயிற்கட்டளை விசாரணையாக இருந்துவந்தார்.

இக் குருமகாசந்நிதானம் அருளிச் செய்த ஞானசாத்திரம் சித்தாந்த நிச்சயம் † என்பது.

இவ்வாறு ஞானபாநுவாய் அருட்செங்கோல் நடாத்திய குருமூர்த்திகள் சிவஞானதேசிகருக்குத் தமது திருவடிசூட்டி ஞானபீடத்தையும் சொக்கநாதபூசையும் கொடுத்தருளி முத்தி நிலை எய்தினர்கள்.

---

* "கானமருங் கிள்ளையொடு குயில்செம் போத்துக்
கட்டரவம் பூனைபெலி கதியிற் சேர
ஞானவருட் பார்வைபுரி நாதா போதா
நாடறியேற் குனதருளை நயப்ப தென்னள்
வானமரும் கடம்பவனச் சவுந்த ரேசன்
மலரடியை யலரடியால் வணங்க வெண்ணித்
தானமரும் பூசைபுரி திருநாவுக் கரச
சம்பந்த ஞானகுரு தருமை வாழ்வே"

என்று இக்குருமூர்த்திகளது வணக்கச் செய்யுளிலும் இக்கருத்தமைந்திருத்தல் காண்க.

† இந்த நூல் அச்சிடப்பெற்றுளது.

## 10. ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிகர்.

அருளாட்சி பெற்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் நிகழ்த்திய அற்புதங்கள் மிகப்பல. வழங்கிய ஞானோபதேசங்களால் ஈடேறிய மக்கட் கூட்டத்தினரும் மிகப்பலர்.

ஒருநாளிரவு நிலாக்காலத்து சித்தர் ஒருவர் ஆகாயமார்க்கமாகச் சென்றுகொண்டிருந்தார். அவர் இம்மடாலயத்தின் மீது போனகாலத்து அவர் போக்குத் தடைப்பட்டது. திகைத்தனர். இங்கு ஏதேனும் ஒரு விசேடம் இருக்கவேண்டும் என்று கீழ்நோக்கினர். அப்போது நிலாமுற்றத்தில் ஒருவர் நிழல் விழுவதையறிந்த குருமூர்த்திகள் நிழலை நோக்கிச் சுட்டு விரலால் வாவென்றழைத்தார்கள். நிழலைத்தரும் பொருளான சித்தரும் ஏதோ மந்திரத்தாற்கட்டுண்ட மாநாகம்போலத் தன் வசமற்றுக் குருமூர்த்திகள் திருமுன்* வந்தனர். பரவசமாயினர். சித்துக்களும் ஒரு செருக்குத் தருவதென்பதை யுணர்ந்தனர். 'ஆசிரியப்பெரும! சிவஞானப்பேறளித்துத் திருவடிக்கன்பனுக்குக' என்று திருவடிகளில் வீழ்ந்து வேண்டினர். கருணை கூர்ந்த குருமூர்த்திகள் அணுக்கத்தில் அழைத்து, திருவருணோக்கம் செய்து, தீக்ஷையும் புரிந்து, தமது அடியார் குழாத்துள் ஒருவராக இருக்கவும், சிவஞானச்செல்வம் நாடோறும் பெருக்கவும் திருவருள்பாலித்தனர். அவர் இவ்வாறு வதியுநாளில் காயகற்பங்களையுண்டு பழகிய அவருக்கு மடாலயத்திலுள்ள அறுசுவையுண்டியால் உடனிலை வேறுபட்டது. அஃதுணர்ந்த ஞானதேசிகர் அடியார் குறிப்பறிந்து திருநீறளித்தனர். சித்தர் அதனை யணிய உடனிலை சீர்திருந்தியது. உடல் வலிபெற்றதன் பயன் குரு பணிவிடை செய்தலே என்பதைக் குறிக்கொண்டு தவறாது இயற்றிவந்து சிலநாட்களில் சிவத்துடன்கலந்தனர்.

சேதிமாநகரத்து வேளாளர் ஒருவர் மாமியார் மருமகள் இருவரோடும் குருதரிசனத்திற்குத் தருமைநகர் வந்தார்.

* மடாலயத்தில் சித்தர் வந்திறங்கிய இடம் இன்னும் சித்தர்கட்டு என வழங்கப்படுகிறது.

குருமகாசந்நிதானத்தைத் தரிசித்து மருமகளைச் சுட்டிக் காட்டி 'இந்நங்கைக்குச் சிவதீக்ஷை செய்தருளுக' என்று வேண்டிக்கொண்டனர். குருமூர்த்திகள் 'மறுநாள் சொக்கநாத பூஜாகாலத்தில் வருக' என ஆணை தந்தனர். அவ்வாறே அவர்கள் தூய்மையோடு வர பூஜைமடத்துக்குள் அழைத்துச்சென்று விதிப்படி சிவதீக்ஷை செய்வித்தார்கள். குருதீக்ஷையால் ஞான விருத்தாப்பியம் அடைந்த அந்நங்கை, ஆண்டிலும் விருத் தாப்பியம் அடைந்து சொக்கநாதப் பெருமானை யிடைவிடாது வணங்கிவரவேண்டும் என்ற உள்ளக்குறிப்பு உண்டாகப் பெருமானை நோக்கி,

"மதுரா புரிச்சொக்க ஞானப்பிர காசன் மடாலயத்தில்
சதுரான காரியஞ் செய்ததென் னேயிந்தத் தாரணியில்
முதிரா விளம்பிஞ்சை நற்கனி யாக்கு முறைமையென்ன
எதிரா மலமறுத் தென்னையு மாட்கொண் டிருந்தனனே"

என்ற பாடலாற் றுதித்தனர். ஊருக்குச்செல்ல மனமில்லாமல் சொக்கநாதரது திருவருளில் பிணிப்புண்டு குருஞானசம்பந்த ரது சந்நிதானத்திலேயே தவமியற்றி முத்திபெற்றனர்.

புதல்வர் கடமையை நன்குணர்ந்த ஒருவன் தந்தையிறக்க அவரை வீட்டுலகம் அடைவிக்க வேண்டும் என்ற அவாக் கொண்டான். அதற்குபாயம் யாது என ஆராய்ந்து முடிவில் சிவஞானதேசிகர் திருவடி சேர்தலே என்று தேறினன். தன் மனைவியையும் உடனழைத்துக்கொண்டு குருதரிசனத்திற்காகத் தருமபுரம் அடைந்தான். அதனை ஞானத்தால் உணர்ந்த குரு மூர்த்திகள் 'நீங்கள் ஞானபுரீசுவரரை வழிபட்டு வாருங்கள்' என ஆணை தந்தனர். அவர்கள் அவ்வாறே சென்று வணங்கி வர, குரு மூர்த்திகள் 'உங்கள் எண்ணம் தந்தையை வீட்டுலகம் எய்து விக்க வேண்டியதுதானே. அது குருவருளால் ஈடேறிற்று' என்று அருள்பாலித்தார்கள். வந்தவர்கள் விம்மிதமுற்றுத் திரு வடிகளில் பன்முறை வணங்கித் திருவருட்பிரசாதம் பெற்றுச் சென்றனர்.

ஒருபோது ஞானதேசிகர் தலயாத்திரை செய்யத் திருவுளங்கொண்டார்கள். சொக்கநாதப் பெருமான் எழுந்தருளிய பூசைப் பெட்டகத்தை அடியார்களது திருமுடியில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு புள்ளிருக்கு வேளூரை யடைந்தார்கள். திருக்கோயிலுக்குச் சென்று செல்வ முத்துக்குமாரக் கடவுளை வணங்கி முருகப்பெருமான் திருவருணிறைவு திருவருட்பாக்களாக வெளிவரத் தோத்தரித்தனர். சிலநாள் கழித்துச் சிதம்பரமடைந்து நடராஜப் பெருமானையும் வணங்கித் திருவருட்பாக்களைப் பாடியருளினார்கள். பின் ஆரூர்க்கு எழுந்தருளிப் பூங்கோயில் வழிபாடாற்றிச் சுற்றியுள்ள பஞ்ச பூததலங்களையும், குவித்தகரம் விரித்தல்செலாக் கோயில்கள் பலவற்றையும் வணங்கிச் சித்தீச்சரம் அடைந்தார்கள். கமலை ஞானப்பிரகாசருடைய உபாசனா மூர்த்தியாகிய சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்திகளுடைய திருவருணோக்கத்தில் ஈடுபட்டுத் திருவருட்பா பாடிச் சிலநாட்கள் திருவாரூரிலே யிருந்து தக்ஷிணயாத்திரைசெய்ய விரும்பி மதுரையை யடைந்தார்கள். சொக்கநாதப் பெருமானையும் மீனாக்ஷியம்மையாரையும் வணங்கித் திருமடத்தில் எழுந்தருளியிருக்குங்கால் ஒருநாள் பெரும்பிணியாளன் ஒருவன் வருதலைக்கண்டு அவன் மீது கருணைகொண்டு அருகழைத்து 'நீ காளையார் தீர்த்தத்தில் மூழ்கிவா' என்று ஆணை தந்தார்கள். அவனும் அவ்வாறே நிறைமொழி மாந்தராகிய குருவருளாணையில் உறுதியுடையனாய்ச் சென்று மூழ்கினான். எழுந்தான். தன் மேனி புரையற்று விளங்குதலைக்கண்டு வியந்து குரு திருமுன் சென்று வீழ்ந்து வணங்கிச் சென்றான்.

பின்னர், சிலநாள் குருமூர்த்திகள் சொக்கநாதப்பெருமான் திருவருட்கடலில் திளைத்திருந்து விட்டுத் திருச்செந்தூர் செல்லுதற்குப் புறப்பட்டார்கள். வழியிற் பலதலங்களையும் வணங்கித் திருச்செந்தூரை யணுகினார்கள். அடியார்கள் கூட்டத்தோடும், அரகரமுழக்கத்தோடும், குடைகொடி யாலவட்டம் கைவிளக்குத் தீவர்த்தி முதலிய விருதுகளோடும் குருமூர்த்திகள் எருந்தருளுதலைக்கண்ட ஊரவர்கள் குருதரிசனப் புண்ணியத்தினால் பெருமகிழ்வெய்தினர். "போற்றிமார்கள் பகல் தீவர்த்தியுடன்

சிவிகையில் செல்லுதல் கூடா" தெனத் தடைசெய்தார்கள். அப்போது செந்தில்நாதன் அர்ச்சகர் வடிவங்கொண்டு வந்தனர். போற்றிமார்களைக்கண்டு "ஏன் தடைசெய்கின்றீர்கள்; காரணத்தை விரித்துச் சொல்லுங்கள்" என்றார். போற்றிகள் 'இப்படி இங்கு வரும் வழக்கமில்லை' என்று வழக்கத்தையே காரணமாகக் கூறினர். அர்ச்சகர் ஞானசாரியர்களுடைய பெருமையையும், அவர்கள் எங்கும் விருதாவளிகளோடு வரலா மென்பதற்கேற்ற சாத்திரப் பிரமாணங்களையும் எடுத்துக் கூறியருளினர். போற்றிகளுக்கு அதற்கு மறுமொழி கொடுக்க முடியாமற்போகவே திகைத்தவர்களாய் வீண்வம்பிழைத்தனர். இவர்களுடைய விதண்டா வாதத்தைக்கண்டு சினந்த அர்ச்சகர் சிறிது சீற்றங்கொள்ள அதனாற் போற்றிகள் ஊமையாயினர். வந்த அர்ச்சகரும் மறைந்தருளினர். போற்றிமார்கள் ஞான தேசிகருடைய திருவருள் வலிமையையும், தாங்களிழைத்த பெருந்தவறுகளையும் உணர்ந்து தாங்களே தீவர்த்தியெடுத்துச் சென்றனர். தேசிகமூர்த்திகள் செந்தில் நாதனை வழிபட்டு மீண்டார்கள். அப்போது போற்றிமார்கள் தேசிகரது திருவடிகளில் வீழ்ந்து பணிந்து 'பிழைபொறுத்தருள்க; ஊமையை நீக்கியருள்க' எனவேண்டினார்கள். ஞானதேசிகர் கருணைபொழி திருநீற்றைக் கரத்தில் அளித்தனர். வாங்கித் தரித்த அவர்களுக்கு ஊமைத்தன்மை நீங்கிற்று. தேசிகமூர்த்திகளும் பல தலங்களையும் வழிபட்டு யாத்திரை செய்துகொண்டிருந்தார்கள்.

அப்போது மலைநாட்டில் துங்கன் என்னும் அரசன் ஆட்சிபுரிந்து வந்தான். அவனுக்கு ஒரே மகள். அவளைப் பிரம ராக்ஷஸம் தீண்டியிருந்தது. அவனும் எத்தனையோ மணி மந்திர ஔஷதங்களும் கொடுத்து நீக்க முயற்சித்தான். முயற்சி கைகூடிற்றிலது. தக்ஷிண யாத்திரை செய்கின்ற தேசிகமூர்த்திகள் திருவருள் பெற்றவர்களாக இருப்பதைப் பலர்வாயிலாக அறிந்த அரசன் ஆனந்தமுற்றுத் தன்மகளையும் அழைத்து வந்து ஞானதேசிகரது திருவடிகளில் நமஸ்கரிக்கச் செய்து குறையிரந்தான். குருமூர்த்திகள் பேரருள்கூர்ந்து மந்திரமும்

மருந்துமாகிய திருநீற்றை யளித்தார்கள். அரசன் அதனைத் தன்மகளுக்குப்பூச பிரமராக்ஷஸம் நீங்கியது. அரசன் மகிழ்ச்சி அளவுபடுத்த முடியவில்லை. ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கு அபிஷேக ஆராதனை செய்வித்தான். மாகேசுரபூசை நடத்து வித்தான். ஞானதேசிகருக்குப் பட்டணப்பிரவேச முதலியன செய்வித்தான். ஆண்டுகள்தோறும் இவ்வைபவம் நடைபெற வெண்ணினன். தனித்தனியாக *நிலங்களைச் சர்வமான்யமாகக் கொடுத்தான். விடைபெற்றுத் தன் நாட்டிற்குச் சென்றான்.

இவ்வாறு பல அற்புதங்களையும் நிகழ்த்தித் தலயாத்திரை முடித்துத் ஞானதேசிகர் தருமபுரம் வந்து மடாலயத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் ஒருநாள் திருவுலா வந்தார்கள். அப்போது பிரமராக்கதமொன்று அவர்கள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நின்றது. குருநாதர், 'இது துங்கன்மகளைப் பற்றியிருந்த பிரமராக்கத' மென வறிந்து, என்ன செய்யவேண்டு மென்று வினவினார்கள். பிரமராக்கதம் 'நல்லோரை நலியும் இவ்வுருநீங்கி நற்கதியடையத் தேவரீர் திருவுளம் பற்றவேண்டு' மென்று வேண்டிக்கொண்டது. அதற்கிரங்கி, குருநாதர் தாஞ் செய்துவரும் அனுட்டானங்களில் ஒருகால அனுட்டானத்தை அதற்குத் தத்தஞ் செய்தார்கள். உடனே அது தன்னுரு நீங்கித் தேவவுரு பெற்று விண்ணுல கடைந்தது. அதுமுதற்கொண்டு இன்றளவும் இக் குருமூர்த்திகளுக்குப் பின் எழுந்தருளியிருப் பவர்கள் யாவரும் ஒரு காலசந்தியாவந்தனத்தை அதிகமாகச் செய்துவரும் வழக்கம் இன்றும் நடைபெறுவதறிந்து இன்புறக் கூடிய சான்றாம்.

சின்னாட்கள் சென்றன. (கி.பி. 1740 ஆண்டு) ஞானதேசிகர் திருவுள்ளங் காசியாத்திரை செய்ய எண்ணியது. முன்போல அடியார்கள் புடைசூழக் காசிக் கெழுந்தருளினார்கள். துண்டி ராஜகணபதி, விசுவநாதர், அன்னபூரணி, கேதாரநாதர், கால வைரவர் முதலியோர்களை வணங்கினார்கள். அப்போ தெழுந்த

* இக்கிராமம் சிவஞானபுரம் என வழங்குகிறது.

இடையீடில்லா அன்பின் பெருக்கம் இப்போதுள்ள ஆன்மாக் களையும் நல்வழிப்படுத்த வெண்ணியது. அதனுல் தனித்தனி திருவருட்பாக்களை யாக்கியது. பின்னர்ச் சிலநாள் காசியிற் றங்கியிருந்து தருமபுரத்திற் கெழுந்தருளி அருட் செங்கோல் நடாத்தினர்கள். அதன்பிறகு சச்சிதானந்த தேசிகருக்கு ஞானபிஷேகஞ் செய்து ஐப்பசித் திங்கள் கிருஷ்ணபக்கத்துப் பத்தாம்நாள் பரிபூரணநிலை யெய்தினர்கள்.

இக்குருமூர்த்திகளிடம் அனுக்கிரகம் பெற்றவர்கள் சச்சி தானந்த தேசிகர், தமிழாகர முனிவர், சிதம்பரநாத முனிவர், திருக்கடவூர் பஞ்சாக்கர முனிவர், புன்கூர் சிவப்பிரகாச முனிவர், சங்கரகுமார முனிவர், சிவானந்த முனிவர், முத்துக் குமாரத் தம்பிரான், அக்ஷயலிங்க சுவாமிகள், தில்லைநாயகத் தம்பிரான், காவை அம்பலவாண முனிவர், சைவ எல்லப்ப நாவலர் முதலியோர்கள்.

இவர்களில் தில்லைநாயகத் தம்பிரான் சுவாமிகள், குரு மூர்த்திகள் அனுமதிப்படியே திருப்பனந்தாளில் காசிமடத் தைத் தாபித்தனர். தாபித்தகாலம் (கி. பி. 1720) எனத் தெரிகிறது.

மடம், ஆலயம், தீர்த்தம் முதலியவைகள் பழுதுபார்க்கப் பட்டன. அவைகளுள் மடாலயத்தில் சொக்கநாதப் பெருமான் பூசைமடமும், சித்தர்கட்டும்; புள்ளிருக்குவேளூரில் அம்மையார் சந்நிதி, தட்டம் சுற்றி மண்டபமும், தீர்த்தக்கரையின் நாற்புற களுங் கருங்கற்பணி செய்விக்கப் பெற்றன. அதனைத் தெரிவிக் குங் கல்வெட்டுக்களும் உள்ளன.

## 11. ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர்

சிவஞான தேசிகருக்குப்பின் ஆட்சிக்குவந்த இவர்கள் பக்குவர்களுக்கு ஞானோபதேச மூர்த்தியாய் எழுந்தருளியிருக்குங்

காலத்து ஒருநாள் இரவு நடுயாமத்தில் கிழிந்த ஆடையும், குழிந்த கண்ணும் உடையானுகத் தோன்றும் ஒருவன் மடால யத்தின் முன்வாசலில் வந்து நின்று வயிற்றுப் பசியால் வாடி யவன்போல, "பசி, பசி, சோறுவேண்டும், சோறுவேண்டும்" எனக் கூவினன். அக்கூக்குரல் அறிதுயிலில் எழுந்தருளியிருந்த ஞானதேசிகர் திருச்செவியில் சென்று நுழைந்தது. கருணைக் கடலைக் கரைபுரளச்செய்தது. உடனே விரைந்தெழுந்து திரு வருட்டுணையால் வந்தவன் அரசனென்றும், மாறுவேடத்துடன் வந்துளானென்றும் அறிந்து, தாமே மடைப்பள்ளியினுட் புகுந்து ஓர் வெண்கலப் பாத்திரத்தில் அன்னத்தை யெடுத்து வைத்து உபகரணங்களையு மதனுட்பெய்து வெளியிற் கொண்டு வந்து வைத்து 'இதனை எடுத்துப் புசிப்பாயாக' என்று அருளிச் செய்தனர். வந்தவன் பாத்திரத்தை யாரிடம் ஒப்புவிப்பது என்றனன். ஞானதேசிகரும் சிறிது புன்னகைபூத்து "ஏன் அரண்மனையிற் சேர்க்கிறதுதானே" என்றூர்கள். அரசன் அஃதறிந்தும் காட்டிக்கொள்ளாது விரைந்து அரண்மனைக்குச் சென்று உறங்கினன். மறுநாட் காலையில் ஆஸ்தான மண்ட பத்திற்கு வந்து சபையைக் கூட்டுவித்து இரவு நடந்த விஷயங் களை மந்திரிமார்களிடங் கூறினன். ஞானதேசிகருடைய ஜீவ காருண்யத் திறத்தையும், எளிவந்து எந்நேரத்திலும் உபகரிக் கும் வள்ளன்மையையும், எல்லாம் அறிந்துகொள்ளுந் திருவ ருள் வலிமையையும் வியந்து பாராட்டினன்.

பின்னொருநாள், ஞானதேசிகர் குழகர்கோடியில் நீராடத் திருவுளங் கொண்டார்கள். அடியார்கள் புடைசூழத் திருமறைக் காடு சென்றூர்கள். இவர்கள் வருகையையறிந்த யாழ்ப்பாணம் கந்தப்பச் செட்டியார் என்பவர் எதிர்கொண்டு உபசரித்தனர். திருமறைக்காட்டிறைவனை வழிபட்டு அங்கு எழுந்தருளியிருக்குங் காலத்தில் காட்சிப்பிரமாணம் ஒன்றையே நம்பியிருக்கும் நாஸ்திகவாதிகள் சிலர் 'கடவுளில்லை' என்று ஞானதேசிக ரிடம் வாதித்தனர். ஞானமூர்த்திகள் அவர்கள் நிலைக்கு எளி வந்து இரங்கி அவர்கள் கொண்ட பிரமாணத்தாலேயே கடவு ளொருவருளர் என நிலை நிறுத்தினர்கள். அதனல் அவர்கள்

பொறுமையுற்று வஞ்சநெஞ்சுடையவர்களாய் ஞானதேசிகர் திருவடிகளில் வீழ்ந்து திருந்தியவர்கள்போல வணங்கி, 'யாங்கள் நடத்தும் மாகேசுரபூஜையை ஏற்றுக்கொள்ளத் திருவுளம் பாலிக்கவேண்டும்' என இரந்தனர். விருப்பு வெறுப்பற்ற தேசிக மூர்த்திகள் அதனை ஏற்றருளினார்கள். அன்று இரவு வஞ்சகர்கள் நஞ்சங்கலந்த பாலை ஞானதேசிகருக்குக் கொடுத்தார்கள். ஞானதேசிகர் வழக்கப்படி விபூதியை அதிலிட்டுப் பாலைப் பருகினார்கள். "நஞ்சு மமுதா மெங்கள் நாதனடியார்க்கு" என்னும் திருவாக்குக்கு இலக்கியமாக மறுநாள் விடியலில் எருந்தருளியிருந்தார்கள். வஞ்சக் கனவை நனவாக எண்ணிக்கொண்டிருந்த நாஸ்திகர்கள் விடியலில் வந்து ஞானதேசிகர் பெருமகிழ்ச்சியோடு உளத்து வேறுபாடுமின்றிக் கருணைபொழியும் முகத்தோடு இருத்தலை யறிந்து, தம் பிழைக்குத் தாமே வருந்தி வந்து வணங்கி மன்னிப்புக் கேட்டனர். ஞானதேசிகர் அறிந்தும் அறியாதார்போல "நீங்கள் என்ன பிழைசெய்தீர்கள்" என்று சிரித்துக்கொண்டே, "என்னைச் சிவமாக்க ஆலாலசுந்தரர் சிவத்தின் ஆணை பெற்றுச் செய்த பிழையை என் உத்தரவு பெறாமலே நீங்கள் செய்தீர்கள். என்ன தவறு?" என்று கூறி அதனைப் பொருட்படுத்தாது இருந்ததுமன்றி அவர்களைத் தூய்மைப் படுத்த, சிவதீக்ஷைசெய்து சிலநாள் தங்கியிருந்தனர். பிறகு தருமபுரம் வந்து அருளாட்சி செலுத்திப் பலநாட் சென்றபின் தமது அடியார் கூட்டத்து ளொருவராகிய முத்துக் குமார சுவாமிகளுக்கு ஞானோபதேசஞ் செய்து பீடத்தமர்த்திச் சிவயோகசமாதியில் இருந்துவிட்டார்கள்.

## 12. ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துக்குமார தேசிகர்

இவர்கள் ஞானவரசு செலுத்து நாளையில் திருநெல்வேலி மேடை தளவாய் முதலியார் அவர்களும், பல சைவ அன்பர்களும் மகாசந்நிதானம் தக்ஷிணயாத்திரைக் கெழுந்தருளவேண்டுமென்றும், திருநெல்வேலிக்கு வரவேண்டுமென்றும் வேண்டிக் கொண்டனர். அன்பர்கள் வேண்டுகோட்கிணங்கி எழுந்தருளி

அடியார்கள் புடைசூழச் செல்லுங்காலத்து வழியில் காளையார் கோயிலில் தங்கினர்கள். ஆங்குள்ள அருணகிரி முதலியார் என்பவரும், அவர் மனைவியார் சிவகாமியம்மையாரும் நெடுங் காலமாகப் புத்திரப்பேறின்றி வருந்தினர்கள். ஞானதேசிக ருடைய திருவருட் பிரகாசத்தில் ஈடுபட்டு, அவர்கள் பூங்கமலப் பொன்னடிகளில் வணங்கித் தம் கருத்தை விண்ணப்பித்தனர். பரிகலச் சேடம் அளித்தருள விரும்பினர். அவர்கள் கேட்ட நேரம் மாலைக்காலம். ஆதலால் ஞானமூர்த்திகள் மடைப்பள்ளி யிற் சிதறிக்கிடந்த அன்னத்தைப் பொறுக்கிவரச்செய்து அருள்சுரந்தளித்தனர். முதலியார் விரும்பி ஏற்று அம்மையார் கையிலளிக்க அவர் உண்டு தம்மனைக்குச் சென்றனர். ஞானு சாரிய பரிகலசேடம் உண்ட நற்றவத்தால் உரியகாலத்து ஓர் ஆண்மகவை ஈன்றனர். யாத்திரை முடித்துத் தருமபுரத்துக் கெழுந்தருளியிருந்த ஞானதேசிகர் திருமுன் தம்பதிகள் அக் குழந்தையைக் கொண்டுவந்து கிடத்தி "முத்துக்குமார பரிகலம்" என நாமகரணமிட்டு, ஆச்சாரிய மூர்த்திகளிடத்து அனுமதி பெற்று மாகேசுர பூஜையும், சொக்கநாதருக்கு மகாபிஷேகமும், நிறைவேற்றுவித்து அனுக்கிரகம்பெற்றுத் தம் ஊருக்குச் சென் றனர். பின்னர், இக் குருமூர்த்திகள் ஞானசம்பந்ததேசிக மூர்த்திகளைத் தமது பீடத்தமர்த்தி பரிபூரணமெய்தினர்கள்.

## 13. ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்

இவர்கள் சிவஞானுபதேசம் பெற்று அருட்செங்கோல் நடாத்தி வருங்காலத்து இராமநாடகம், சீகாழிப் புராணம் முதலிய நூல்களையியற்றிய அருணாசலக் கவிராயரும், சிதம்பர நாதத் தம்பிரான் முதலிய அடியார்களும் இங்குக் கல்விகற்று உபதேசமும் பெற்றனர். கிழக்கிந்திய கம்பெனியார் இவர்கள் காலத்தில்தான் இந்து தேசத்தின் ஆலய பரிபாலன மேற் பார்வையைத் தாமே மேற்கொண்டனர் (கி. பி. 1812). இக் குரு மூர்த்திகள் தமது அடியார் கூட்டங்களுள் ஒருவரைத் தேர்ந் தெடுத்து அபிஷேகஞ்செய்து கந்தப்ப தேசிகர் என நாமஞ் சூட்டிப் பீடாதிபதியாக இருக்கச்செய்து தாம் பரிபூரணமெய்தி னர்கள்.

## 14. ஸ்ரீ-ல-ஸ்ரீ கந்தப்ப தேசிகர்

கந்தப்ப தேசிகர் ஆட்சி புரியுங்காலத்து ஒருபோது தக்ஷிணயாத்திரை சென்றவர்கள் திருநெல்வேலியில் எழுந்தருளியிருந்தார்கள். அப்போது மழையில்லாமையால் குடிமக்கள் வருந்தினார்கள். சர்க்கார் அதிகாரிகளோ வரிக்குக் குடிகளை வருத்தினார்கள். குடிமக்கள் கலெக்டரிடஞ் சென்று "மழையின்மையால் விளைச்சலில்லை. வரி செலுத்துவது எவ்வாறு" என முறையிட்டனர். துரையவர்கள் "என்னிடஞ் சொல்லி என்ன? உங்கள் பாதிரியா (ஆசாரிய) ரிடத்தில் தெரிவித்தால் அவர் மழை பெய்யச் செய்யமாட்டாரா?" என்று பரிகாசமாக உரைத்தார். குடிமக்களுக்கு மழையில்லா வருத்தம் ஒருபுறமிருந்தாலும், துரை கூறிய ஆசாரிய நிந்தை பொறுக்க முடியவில்லை. ஆதலால் நடந்தவற்றை யெல்லாம் ஞானமூர்த்தியிடந் தெரிவித்துக் கொண்டனர். செவிமடுத்த ஞானமூர்த்திகள் புன்முறுவல் பூத்தனர். சொக்கநாதப் பெருமானைப் பூசித்துத் தியானசமாதியில் எழுந்தருளியிருந்தனர். ஒரு திருப்பாடலைப் பாடினர். அப்பாடல்,

> சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
> தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி—லைவரைவென்
> றானந்த வெள்ளத் தழுந்துவதே முத்தியெனில்
> வானங்காள் பெய்க மழை.

என்பது.

இப்பாடல் திருவாயினின்றும் வெளிவந்ததும் மேகங்கள் ஒன்றுகூடின. கறுத்தன; மழைபெய்தன. அம் மழையினால் ஏரி, குளம், கிணறு, ஆறு முதலிய எல்லாவற்றினும் நீர் நிறைந்தது. உயிர்கள்யாவும் மகிழ்ச்சிவயப்பட்டன. பரிகசித்த துரை ஞானசாரியப் பெருமானது அருட் பெருமையை யறிந்தார். தான் பரிகசித்தமைக்கு வருந்திச் சொக்கநாத சுவாமிக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்தும்படி 100 வராகன் பொன்னைக் காணிக்கையாகவைத்து வணங்கினர்.

பின்னொருநாள் ஞான தேசிகர் தாமே காசிசென்று கங்கையில் நீராடிவருதற்கு இயலாதது பற்றி வருந்தினர்கள். ஆசாரிய இருதயம் அறிந்த திருக்கூட்டத்து அடியார்களுள் ஒருவராகிய விருத்தாசலத்தம்பிரான் என்பார் ஞானதேசிகரது விருப்பத்தை முற்றுவிக்க விரும்பினர். தருமபுரம் நீங்கித் திருவனந்தபுரஞ் சென்றனர். ஆயலத்தினுட் புகுந்தார். இறைவன் சந்நிதானத்தில் வழிபட்டு நின்று சாரங்கி என்னும் இசைக் கருவியினல் தோத்திரங்கள் பாடிக்கொண்டிருந்தார். பாடல்கள்தோறும் அவ்வூர் அரசன் இறைவனுக்கு வழிவழியடிமைபூண்ட பெருமையைப் புலப்படுத்திப் பாடிக்கொண்டிருந்தார். அப்போது அம்மையார் முனிவர்பெருமானுக்குத் தெரியாமல் அவர் தோள் மீதேநின்று பாடலுக்கேற்ப ஆடிக்கொண்டிருந்தார்.

வழிபாட்டிற்காக வந்த அரசன் ஆடல்புரியும் அம்மையாரைக் கண்டான். பரவசப்பட்டான். அம்மையாரின் திருவடிகளைப் பற்ற எண்ணி ஓடிவந்தான். வந்தவன் சுவாமிகளது கழுத்தை இறுகத் தழுவினன். சுவாமிகள் திடுக்கிட்டுத் திரும்பினர். அரசனென்றறிந்தார். இங்ஙனம் தழுவக் காரணம் யாதெனக்கேட்டு நிகழ்ச்சியை யறிந்தார். அம்மையார் உருவத் தோற்றத்தைத் தாம் காணவியலாமைக்கு வருந்தினர். அரசன் சுவாமிகளைப்பார்த்துத் "திருவருள் மிக்க தேவரீர் அடியேனைப் பாராட்டிப் பாடுதற்குக் காரணம் யாது? என்பதை யருளிச் செய்யவேண்டும்'' என்று பிரார்த்தித்தான். சுவாமிகள் "எங்கள் ஞானசாரியர் கங்கையாட விரும்பினர்கள். அதனை நிறைவேற்ற உமது உதவியை விரும்பினேன்'' என மறுமொழி பகர்ந்தனர். அரசனும் "அடியேனுக்கு இப்பேறு கிடைத்தவாறென்னே! தேவரீர் திருவுள்ளப்படி நடப்பேன்'' என்று சொல்லிச் சுவாமிகள் விரும்பியவாறு யானை, ஒட்டகம் முதலியவைகளையும் பிறவற்றையும் கொடுத்துதவ சுவாமிகள் திருவனந்தபுரமிருந்து நேரே காசிக்குச் சென்று கங்கையாடி, கங்கை நீரைமொண்டு யானை முதலியவற்றி லேற்றிக்கொண்டு தருமபுரந் திரும்பினர். மடத்தில் பெரிய தொட்டி ஒன்றமைத்துக் கங்கா

தீர்த்தத்தை நிரப்பினர். ஞான தேசிகர் காசியில் கங்காப் பிரவாகத்தில் நீராடுவதை ஒப்பத் திருமஞ்சனஞ் செய்தார்கள்.

இவ்வாறு அடியார்கள் குறிப்பறிந்து பணிவிடை செய்து வர அருளாட்சி நடாத்தி, பக்குவமுதிர்ச்சிபெற்ற, மேற்சொன்ன விருத்தாசலத் தம்பிரானுக்கு ஞானபிஷேகம் செய்து மாசிலா மணி தேசிகர் எனத் தீக்ஷாநாமஞ்சூட்டிப் பீடாதிபத்தியத் தையும், சொக்கநாதப் பெருமான் பூஜையையும் கொடுத்தருளிச் சிவசமாதி கூடினர்.

கிழக்கிந்திய கம்பெனியார் பார்வையில் இருந்த தேவஸ் தானங்கள் இவர்கள் காலத்தில் (கி. பி. 1841) மீண்டன.

## 15. ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகர்

இவர்கள் ஆட்சிக்காலத்தில் ஓராண்டு மழைவளங் குன்றியது. ஆறுகளில் நீர் இல்லை. பயிர்கள் வாடின. நந்தவனங்களிலுள்ள மரஞ் செடி கொடிகள் வாட்டமுற்றன. ஆலயங்களில் நடக்கும் விழாச் சிறப்புக்களும் ஒழுங்குபெற நடைபெற்றில.

"விசும்பிற் றுளிவீழி னல்லால் மற்றுங்கே
பசும்புற் றலைகாண் பரிது"

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு"

என்பன பொய்யாமொழியன்றோ! மக்கள் யாவரும் ஒருங்கு கூடினர். ஞானதேசிகரது சந்நிதானத்தை யடைந்து விண்ணப் பித்தார்கள். ஞானமூர்த்திகள் சொக்கநாதசுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்து வணங்கி நின்று மனமுருகி அன்ன மலி வயல் புடைசூழ் ஐயாற்றுப் பெருமானைக் குறிக்கும் "புலனைந்தும் பொறிகலங்கி" என்னும் மேகராகக் குறிஞ்சிப் பண்ணாகிய திருப்பாடலைச் சாரங்கி என்னும் இசைக் கருவியில்

அமைத்துப் பாடினார்கள். இறைவனருளால் பெருமழை பெய்தது. நீர் நிலைகள் யாவும் நிறைந்தன. மக்கள் யாவரும் மகிழ்ந்தனர்.

ஞான தேசிகர் இவ்வாறு அற்புதச் செயல்கள் நிகழ்த்திக் கொண்டு ஞான பீடாதிபதியாய் எழுந்தருளியிருக்குங் காலத்தில் தருமபுரத்திற் கண்மையிலுள்ள மணக்குடி ஆலயமும், தருமபுரத்திலுள்ள தருமபுரீசுவரர் ஆலயமும் திருப்பணி செய்வித்து மகாகும்பாபிஷேகமுஞ் சிறப்புற நடத்தியருளினார்கள். பின்னர் சச்சிதானந்த தேசிகருக்கு அபிஷேகஞ் செய்து ஞான பீடாதிபதியாக எழுந்தருளுவித்துச் சிவசமாதி யெய்தினார்கள்.

## 16. ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர்

இவர்கள் ஆட்சியேற்றுச் சைவசித்தாந்த ஞானபானுவாய் அகவிருளைப் போக்கி ஆன்மாக்கள் சித்தாந்தத்தேனைப் பருக எழுந்தருளியிருந்தார்கள். அப்போது இவர்களிடம் அருளுபதேசங்கேட்டுத் தெளிந்த ஆறுமுகத் தம்பிரான் என்பவர்கள் வெள்ளப்பள்ளம் சாஸ்திரிகள் என்னும் சுமார்த்தர் மாயவரம் துலாக்கட்டத்தில் பிரும்ம சூத்திரத்திற்கு விஷ்ணுபரமாக உரை வகுப்பதைக் கேட்டார்கள். சாஸ்திரிகள்வினை பக்குவமாங்காலம் தம்பிரான் உள்ளத்தினின்று ஊக்கியது. ஆசாரியராணை பெற்றுச் சென்றார்கள். வாதுசெய்ய அழைத்தார்கள். சாஸ்திரியார், 'நடுவாக இருந்து வழக்குத்துணியும் ஒருவரை வைத்துத் தொடங்குவோம்' என்றார். 'ஆயின் நீரே இருக்கத் தக்கார் ஒருவரை இயம்பும்' எனச் சுவாமிகள் யருளினார்கள். சாஸ்திரிகள் நெடுநேரம் சிந்தித்து 'உங்கள் குருமகாசந்நிதானம் அநுபூதிமானாக இருப்பதால் அவர்களே இருக்கட்டும்' என்றார். சுவாமிகள் சாஸ்திரிகளையும் அழைத்துக்கொண்டு தருமைக்கு வந்தனர். குருமகாசந்நிதானத்தின் திருமுன் வாதுதொடங்கினார்கள். பிரும்மசூத்திரத்தின் பொருள் சிவபரத்துவங் கூறுவதே என்பதைச் சுவாமிகள் பல பிரமாணங்காட்டி நிறுவினார்கள். சாஸ்திரிகள் சுவாமிகளை வணங்கத் தலைப்பட்டனர். சுவாமிகள் 'இங்கு எல்லாவணக்கமும் எங்கள் குருநாதனுக்கே'

என்றார்கள். உடனே சாஸ்திரிகள் குருமூர்த்தியை வணங்கிப் 'பிழைபொறுத் தருள்க' என வேண்டினர். ஞானதேசிகர் சாஸ்திரிகளின் பக்குவத்தையறிந்து தீக்கை முதலியன செய்து மகாசைவராக்கிச் சைவசந்நியாசமும் அளித்தார்கள். சாஸ்திரிகள் குருகாணிக்கையாக 'வெள்ளப்பள்ளம்' என்னும் கிராமத்தை ஏற்பித்தனர். அவர்தம் மனைவியாரும் வந்து தீக்கை பெற்றுத் துறவுநிலை மேற்கொண்டு சிலநாளிருந்து இருவரும் சிவனடி நீழல் சேர்ந்தனர்.

மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் இவர்களைப்பார்க்க ஒருமுறை வந்தார்கள். ஞானதேசிகர் பிள்ளையவர்களுடைய கவித்திறத்தில் கருணை நிறைந்து அடிக்கடி வந்து போக வேண்டும் என்று ஆணைதந்தனர். அவ்வாறே அடுத்த முறை வரும்போது ஞானதேசிகருடைய அருட் குணங்களிலும், ஆட்சித்திறத்திலும் அகங்குழைந்த பிள்ளையவர்கள் சச்சிதானந்த தேசிகர்மாலை என்ற பிரபந்தத்தைப் பாடிவந்து பலசன்மானங் களும் பெற்றுச் சென்றார்கள்.

இக்குருமூர்த்திகள் ஆதீன மடாலயத்திற் பல இடங்களைக் கருங்கற்பணியாகச் செய்தார்கள். ஆதீன ஆலயங்களைச் செம்மை யுறப் பரிபாலித்து வந்தார்கள்.

தேசிகசுவாமிகள் இவ்வாறு கலைச்செல்வராக இருந்தருளுங் காலத்து, திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை மௌனமடம் விசாரணையிலிருந்த வைத்தியலிங்கத் தம்பிரான் அவர்களின் நடத்தை மவுனமடம் ஆட்சி ஆதீன ஆளுகையிலிருந்து விலகக்கூடியதாக விருந்தபடியால் வழக்குத்தொடுத்து மீட்கப் பட்டது.

இவர்கள் அருணந்தித் தம்பிரான் சுவாமிகளுக்குச் சின்னப் பட்டங்கட்டித் தக்ஷிணம் அனுப்பி யிருந்தார்கள். அவர்கள் விரிவான எண்ணம் உடையவர்கள். நிலபுலங்கள் நிறைய

வாங்கிச் சேர்க்கவேண்டும் என்ற பெருவிருப்பு உடையவர்கள். ஆதலால் மடாலயத்தின் பொருணிலைக்கு அதிகமாகவும் நிலங்களை விலைபேசி வாங்கத் தலைப்பட்டனர். இதுபோன்ற பல நிகழ்ச்சிகளில் குருவாணையையும் மேற்கொள்ளாதிருந்தனர். குருமகாசந்நிதானமவர்களே தக்ஷிணயாத்திரைக்குச் சென்ற போது அவ்விடத்திய சின்னப்பட்டத்தில் இருந்த இச்சுவாமிகளுடைய நடைகளை நேரிற்காணநேர்ந்தது. அதனால் அவர்களை விலக்கி 7—11—1873ல் மாணிக்கவாசக தேசிகருக்குச் சின்னப் பட்டங் கட்டி வைத்தார்கள். பின் 30—11—1873ல் பேராவின்பப் பெருநிலை யெய்தினர்.

## 17. ஸ்ரீ-ல-ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர்

இவர்கள் அருளாட்சி நடாத்துங்கால் தலயாத்திரை செய்யத் திருவுளங் கொண்டு தருமையம்பதியை யகன்று விருத்தாசலம், திருச்சிராப்பள்ளி முதலிய தலங்களைத் தரிசித்து வந்தார்கள்.

இவர்கள் காலத்துச் சச்சிதானந்த தேசிகரால் விலக்கப் பெற்ற அருணந்தி சுவாமிகள் தம்மை விலக்க யாருக்கும் உரிமையில்லை என்றும், சச்சிதானந்த தேசிகருக்குப் பின் தமக்கே பட்டம் உரியதென்றும் 1875ல் வழக்குத் தொடுத்தனர். அருணந்தி சுவாமிகள் வழக்குச் சென்னை உயர் நீதி மன்றத்தில் தோற்றுப் போயிற்று. சுவாமிகள் இங்கிலாந்து அரசர் சபைக்கு வழக்குத் தொடர எண்ணியிருக்கும் சமயம் பட்டத்திருக்கும் மாணிக்கவாசக தேசிகசுவாமிகள் அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. அப்போது அருணந்தி சுவாமிகளும் பதவியிலிருந்தவர்களாயிற்றே என்பதையும், அவர்களுக்கு மேற்குறித்த வழக்கால் பெருங்கடனேற்பட்டிருப்பதையும் திருவுளத்தடைத்து, பிரெஞ்சு இலாக்காவிலுள்ள சேத்தூர்கிராம நிர்வாகத்தை அவர்களிடம் கொடுத்து அங்கேயே இருக்கச்செய்து கருணைபாலித்தார்கள்.

இவர்கள் காலத்தில் திருப்பனந்தாள் காசி மடாதிபதியாக இருந்த இராமலிங்கத் தம்பிரான் அவர்கள் 1880-ம் ஆண்டு

இத்தருமையாதீனப் பரம்பரையில் வராத ஒருவரை குருவாணை யின்றி அம்மடத்துக்கு அதிபராக்கி பரிபூரணம் எய்தினர். குரு சிஷ்ய உரிமையை நிலைபெறுவிக்க வேண்டும் என்ற எண்ணம் உதிக்க 1881ம் ஆண்டில் வழக்குத் தொடுக்கப் பெற்றது. 1878-ல் சென்னை உயர்நீதி மன்றத்தில் திருப்பனந் தாள் காசி மடத்து அதிபதியாக நியமனம் பெறுபவர்கள் 'தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியார்களில் ஒருவராக இருக்கவேண்டும்' என்று முடிவு செய்யப்பெற்றது. இப்படிப் பெரிய வழக்குக்களாக இரண்டுமூன்றேற்பட்டதால் மடாலயத் தின் பொருளாதாரநிலை பொதுவாகப்பாதிக்கப் பெற்றிருந்தது. அதனல் கடனும் மிகுதியாக ஏற்பட்டது.

இவர்கள் திருக்கடையூர் ஆலயத்தைத் திருப்பணி செய்வித் தார்கள். மகா கும்பாபிஷேகமுஞ் சிறப்புற நடத்தினர்கள். மடாலயத்தில் பல திருத்தங்கள் செய்தார்கள். புள்ளிருக்கு வேளூர் ஸ்ரீ வைத்தியநாதப்பெருமான் தேவாலயத் திருப்பணி தொடங்கப்பெற்றது.

இவ்வாறு மடாலயத்திலும், சிவாலயங்களிலும் திருப்பணி செய்வித்துக் கொண்டிருந்த குருமூர்த்திகள் தமது பரிபாலனத் துக் குட்பட்ட திருபுவனம் தேவஸ்தானத்திற்குச் சென்றிருந்த காலத்துச் சிவஞான தேசிகருக்குப் பீடாதிபத்தியம் அளித் தருளிச் சிவசமாதி கூடினர்கள்.

### 18. ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிகர்

இக்குருமூர்த்திகளது அருளாட்சி நாளையில் திருநின்றியூர் ஸ்ரீ லக்ஷ்மிபுரீசுவரசுவாமி ஆலயமும், சீகாழி ஸ்ரீ பிரமபுரீசுவர சுவாமி ஆலயமும் திருப்பணி செய்விக்கப் பெற்றன. மகா கும்பாபிஷேகங்களும் நடத்துவிக்கப்பெற்றன.

இவர்கள் 22—4—1900ல் மாணிக்கவாசக தேசிகருக்குச் சின்னப்பட்டங் கட்டினர்கள். 'எல்லா நிர்வாகப் பொறுப்பையும்

பெற்று நடத்துக' என்று ஒரு உயிலும் எழுதி வைத்தார்கள். கொஞ்ச காலத்துக்குப்பின் மனவேற்றுமை ஏற்பட்டது. அதனல் இவ்விருவரிடையும் விவகாரங்களும் உண்டாயின. பிறகு மகாசந்நிதானமவர்கள் காசி யாத்திரையாகப் புறப்பட்டார்கள். யாத்திரை முடித்துக்கொண்டு 30-3-1906-ல் திருப்பனந்தாளில் வந்து எழுந்தருளி யிருந்தார்கள். 1906ல் மீண்டும் தமக்கு நிர்வாகப் பொறுப்பை விட்டுவிட வேண்டும் என்று கும்பகோணம் நீதி மன்றத்தில் வழக்குத்தொடுத்தார்கள். வழக்கு நடைமுறையில் இருக்கும்போதே 1—12—1906ல் திருப்பனந்தாளில் பரிபூரண மானர்கள்.

## 19. ஸ்ரீ-ல-ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர்.

சிவஞான தேசிகரால் ஞானபிஷேகம் செய்விக்கப் பெற்ற இக்குருமூர்த்திகள் சின்னப் பட்டத்திலிருந்து நிர்வாகத்தை நடத்தி வந்தார்கள். மன வேற்றுமையுடன் திருப்பனந்தாளில் எழுந்தருளியிருந்த சிவஞான தேசிகரால் பரிபூரண காலத்து உயிலெழுதி வைக்கப்பெற்றதாகத் திருநாவுக்கரசு தம்பிரான் என்பவர் தாமே பட்டத்திற் குரியவரென்று 1907ல் கும்ப கோணத்தில் திருவம்பல தேசிகர் என்றபெயரால் வழக்குத் தொடுத்தார். 1910ல் அந்த வழக்குத் தள்ளுபடியாகி இக்குரு மூர்த்திகளுக்கே வெற்றியாக முடிந்தது. அதன்மேல் சென்னை உயர்தர நீதி மன்றத்தில் அப்பீல் கொடுக்கப்பெற்றது.

புள்ளிருக்குவேளூர், திருவாரூர் இராஜாங்கக் கட்டளை, மலைக் கோட்டை மவுனமடம் கட்டளை இவைகளுக்கு ஸ்கீம் வழக்குகள் ஏற்பட்டன.

இவர்கள் காலத்தில் கடன்தொல்லைகள் அதிகம். பல கடன் கள் கட்டுப்படுத்தத் தக்கதில்லை யென்று கட்சியாடிவென்றார் கள். இவர்கள் 1914-ல் சிவஞானதேசிகருக்கு ஆட்சித் திறத்தை யளித்து, சொக்கநாதப் பெருமான் பூஜையையுங் கொடுத் தருளி முத்திநிலை யெய்தினர்கள்.

## 20. ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிகர்

இவர்கள் ஆட்சிக்காலத்தில் திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவர சுவாமி ஆலயத்திருப்பணி தொடங்க தேவகோட்டை நகரத்தார் ஸ்ரீமான் உ. ராம. மெ. சுப. சேவு. சேவுகஞ் செட்டியார் இக் குருமூர்த்திகளிடம் ஒரு ஒப்பந்த விண்ணப்ப மளித்துத் திருப்பணி நடத்தத் தொடங்கினர்கள். இவர்கள் காலத்தும் சில கடன் தொந்தரவுகள் தொடர்ந்தன. சிலகடன்கள் தீர்ந்தன. பின்னர், சச்சிதானந்த தேசிகரைப் பிற்றோன்றலாக எழுந் தருளச்செய்து பேரா இன்பநிலை யெய்தினர்கள்.

## 21. ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிகர்

இவர்கள் ஆலய நிர்வாகத்தையும், நித்திய நைமித்திய பூசைகளையும் மிகச் சிறப்பாக நடத்திவந்தார்கள். இவர்கள் காலத்தில் கடன்களில் பெரும்பாகம் தீர்க்கப்பட்டுப் போக்கிய நிலமும் சில மீட்கப்பட்டன. இவர்கள் ஆட்சியேற்ற சிலநாளைக் குள்ளேயே மாணிக்கவாசக தேசிகரைப் பீடத்தமர்த்திப் பேரின்பம் பெற்றூர்கள்.

## 22. ஸ்ரீ-ல-ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர்

சச்சிதானந்த தேசிக சுவமிகளால் அபிஷேகம் பெற்ற மாணிக்கவாசக தேசிகசுவாமிகள் ஆலயத்திருப்பணி செய்வதில் நிறைந்த அன்பு கொண்டவர்கள். திருபுவனம் ஸ்ரீ கம்பகரே சுவரசுவாமி ஆலயம், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுர சுவாமி ஆலயம், தருமபுரம் ஸ்ரீ தருமபுரீசுவரசுவாமி ஆலயம், ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி ஆலயம் ஆகிய இவைகளில் திருப்பணி செய்விக்கப்பெற்றன. திருக்கடவூர் ஸ்ரீ அமிர்த கடேசுவரசுவாமி கோயில் உள்மதில் திருப்பணி தொடங்கப் பெற்றது. அவ்வவைகளுக்கு மகா கும்பாபிஷேகங்களுஞ் சீர்பெற நடத்துவிக்கப்பெற்றன. இன்றியமையாத திருவா பரணங்கள், எடுபிடிகள் முதலியனவுஞ் செய்யப்பெற்றன.

தற்போது திருப்பனந்தாள் காசிமடத்ததிபராக, சைவமுந் தமிழும் தழைத்தினிதோங்க வீற்றிருக்கின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் இவர்களிடம் உபதேசம் பெற்றவர்களாவார்கள்.

இந்த ஞானதேசிகர் ஆட்சித்திறன் பொதுப் பணிகளிலும் பெரிதும் ஈடுபட்டுதவியுள்ளது. அதற்கு மாயூரத்திலுள்ள நகராண்மைக் கழக உயர் நிலைப் பள்ளி மாணவர்கள் விடுதிக்கு ரூபாய் 10000 அளித்தது சிறந்த எடுத்துக்காட்டாம். இக்குருமூர்த்திகளால் மடாலயத்திற்கு மூளைப்பாக்கம், மணக்குடி, திருநின்றியூர் முதலிய கிராமங்களில் நிலங்களும் நெய்தவாசலில் உப்பளமும் வாங்கப்பெற்றன. போக்கியமாக வைக்கப் பட்டிருந்த நிலங்கள் மீட்கப்பட்டன. கடன்கள் பெரும்பகுதியுங் கொடுத்துத் தீர்க்கப்பட்டன.

சமயத்தொண்டாக ஆதீனவித்துவான் சுவாமிநாதபண்டிதர் அவர்களைக் கொண்டு மாயூரத்தில் சைவசித்தாந்த மகாநாடொன்று நடத்துவிக்கப்பெற்றது.

இக்குருமூர்த்திகள் மடாலயத்தின் திருக்கோயிலின் பொருளாதார நிலையைச் செப்பனிட்டு எழுந்தருளியிருந்து 29-10-1923ல் எதிர்பாராதவிதமாய்ப் பரிபூரணமெய்தினர்கள்.

இவர்கள் அருளாட்சிக் காலத்தில் சென்னை மாகாணத்திலுள்ள இந்து சமய அறநிலையங்களைக் கட்டுப்படுத்த மசோதா ஒன்று சென்னை சட்டசபையில் கொண்டுவரப்பட்டது. அதில் பல விதிகள் மிகக்கடுமையாக, அறநிலையங்களைப் பாதிப்பவையாக இருந்தன. அவற்றைத் திருத்தி நல்லவகையில் வெளிவரப் பலவழிகளிலும் முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. அவற்றின் பயனாகத்தான் இப்பொழுது இருக்கும் திருந்திய சட்டம் வகுக்கப்பட்டது.



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்
23-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

## 23. ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ மாணிக்கவாசகதேசிக சுவாமிகளுக்குப் பின் ஞானபீடத்தி லெழுந்தருளியிருந்து ஞானச்செங்கோல் நடாத்தியவர்கள் சுப்பிரமணியதேசிக சுவாமிகளாவார்கள். இவர்கள் அருளாட்சி ஏற்றநாள் 1923ம் ஆண்டு அக்டோபர்மீ 30வ யாகும். இவர்கள் இளமைப் பருவத்திலேயே சந்நியாசம் பெற்றவர்கள். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் கல்வி பயின்றவர்கள்.

மேற்கூறிய மாணிக்கவாசக தேசிகர் 29—10—23 இரவு திடீரெனப் பரிபூரணமடையவே சமீபத்திலிருந்த இரத்தின சபாபதித் தம்பிரான் என்பவர் தாம் பட்டம் பெற்றதாகச் சொல்லிக்கொண்டு பரிபூரணமானவர்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகளை மிக விரைவாக நடத்த முற்பட்டனர். அப்போது ஊர்காவற்றுறையார் வந்து குருமூர்த்திகள் பரிபூரணமடைந்த நிலை மிகவும் சந்தேகமானது என எண்ணி விசாரணை நடத்தி இரத்தினசபாபதித் தம்பிரானைக் கைதுசெய்து போயினர். மறுநாள் ஆதீனத் திருக்கூட்டத் தம்பிரான்கள் ஒன்றுகூடி ஆதீன சம்பிரதாயப்படி சுப்பிரம்ணிய தேசிகராகிய இக் குருமூர்த்திகளைத் தேர்ந்தெடுத்து, ஞானபுரீசுவரசுவாமி கோயிலுக்கு அழைத்துச்சென்று ஆதிபரமாசாரிய சுவாமிகள் செய்யும் பாவனையில் கோமுகியின் கீழிருத்தி அபிஷேகம் பெறச்செய்து பீடத்தில் எழுந்தருளுவித்தார்கள்.

இரத்தினசபாபதித் தம்பிரான்மீது குற்றச்சாட்டுகள் ஏற்பட்டு விசாரணை நடந்தது. முடிவில் விடுதலை செய்யப்பட்டது. பின்னரும் அவர் தாமே பீடத்திற்குரிய ரென்று மாயூரம் நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தார். முடிவில் அவ்வழக்கு மகாசந்நிதானத்திற்கே வெற்றியாயிற்று. இதன் இடையில் கூலி வீரர்களைக்கொண்டு குறும்புகள் பல செய்யப்பெற்றன. கட்டுப்பாடுமீறிக் கலகம் விளைக்கும்படிக் குடிமக்களைத் தூண்டப்பட்டது. பல கிரிமினல், சிவில் விவகாரங்கள் நடந்தன. எல்லா

வகையிலும் மகாசந்நிதானத்திற்கே திருவருள் விளக்கம் பிரகாசித்தது. அதனோடமையாது சென்னை உயர் நீதி மன்றத்தில் அப்பீல் செய்யப்பெற்றது.

குருமூர்த்திகள் காழிப்பிள்ளையார்போலப் பல தலங்களுக்கும் சிவிகையில் ஆரோகணித்து, சின்னமூத அடியார் குழாங்களும் அன்பர்கள் கூட்டங்களும் அரஹர முழக்கஞ்செய்ய, புலவர்களும் பெருமக்களும் ஆங்காங்கும் எதிர்கொள்ளத் திருத்தல யாத்திரை செய்தார்கள். சோழநாட்டுத் தலங்கள் பலவற்றிலுஞ் சென்று விதிப்படி இறைவனை வழிபட்டு, எதிர்கொண்டழைத்து உபசரித்த அன்பர்கள் பலருக்கும் அருளமுதத்தையும், பூதிச் செல்வத்தையும் பொருந்த அளித்தருளினார்கள்.

16-வது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்தசச்சிதானந்த தேசிகருக்குப்பின் தட்சிண யாத்திரையாக குருமூர்த்திகள் யாவரும் எழுந்தருளவில்லை என்ற குறையினை நிவர்த்திப்பான் திருவுள்ளம் பற்றிய இக்குருமூர்த்திகள் விவகாரங்களிடையிலேயும் யாத்திரைக் கெழுந்தருளினார்கள். வழியிலுள்ள மாயூரம், திருபுவனம், திருவையாறு முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருச்சியை யடைந்தார்கள். அங்கு திருவாளர்கள் T. M. நாராயணசாமிப் பிள்ளை, லால்குடி பரமசிவம் பிள்ளை, ஸ்ரீரங்கம் திரு. சிங்கம் அய்யங்கார், ராவ்பகதூர் T. V. கிருஷ்ண சுவாமி அய்யர் உள்ளிட்ட பெருமக்கள் பலர் குருமூர்த்திகளைக் கோயில் மரியாதைகளுடன் எதிர்கொண்டழைத்து உபசரித்து மாகேசுரபூஜை, பட்டணப்பிரவேசம் முதலியன சிறப்புற நடத்திவைத்தார்கள். குருமூர்த்திகள் யாவருக்கும் அருட்பிரசாதம் வழங்கினார்கள். ஸ்ரீ தாயுமான சுவாமிகளுக்குச் சிறப்பாக அபிஷேகம், ஆராதனை செய்து அதனை அகன்று திருவேடகம் முதலியவைகளை யெல்லாங் கடந்து ஆலவாய்ப் பதியை அண்மினார்கள். அங்குள்ள ஸ்ரீ திருஞானசம்பந்தராதீனத்தார்களும், கனம் திரு. P. T. ராஜன் முதலாகிய ஏனைய

பெரியோர்களும் கோயில் மரியாதைகளுடன் குருமூர்த்திகளுக்குச் சிறப்பான வரவேற்பு அளித்தார்கள்.

பின்னர்க் குருமூர்த்திகள் அங்கு நின்றும் புறப்பட்டுச் சிந்துபூந்துறை, ஸ்ரீவைகுண்டம் முதலிய பதிகளை வணங்கி, திருச்செந்தூரை அடைந்து சண்முகப்பெருமானை இறைஞ்சி இன்பக்கடலுள் திளைத்தார்கள். மீண்டு வருங்கால் திருநெல் வேலியில் மேடை தளவாய் முதலியார் அவர்களும், கோட்டைப் பிள்ளைமார்களும், ஏனைய அன்பர்களும் வரவேற்று உபசரித்து சொக்கநாத பூஜை, மாகேசுவரபூஜை பட்டணப்பிரவேசம் முதலியனவும் சிறப்புற நடத்துவித்தார்கள். அதில் மேடை தளவாய் திருமலையப்ப முதலியார் அவர்களும், அன்னார் குமாரர் களும் சொக்கநாதருக்கு கனகாபிஷேகம் செய்வித்தது குறிப் பிடத்தக்கது. அவ்விடத்தில் திருவாவடுதுறை ஆதீன சம்பந்த மான தலங்களைத் தரிசிக்குங்கால் அவ்வாதீன கர்த்தரவர்கள் சார்பில் உபசரிக்கப்பட்டார்கள். பாபவிநாசம், குற்றாலம், தென்காசி, ஸ்ரீவில்லிபுத்தூர், பரங்குன்று முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு பிரான்மலைக்கு வருங்கால் திருவண்ணாமலை ஆதீனத்தார்களால் வரவேற்கப்பட்டு உபசரிக்கப் பெற்றார்கள். இவ்வாறு ஆங்காங்குள்ள அன்பர்கள் பலரும் மாகேசுவரபூசை, பட்டணப்பிரவேசம் முதலியன சிறப்புறநடத்தி உபசரிக்க இறைவழிபாடியற்றிய குருமூர்த்திகள் யாத்திரையை முடித்துக் கொண்டு, மாயவரத்தில் நகரவாசிகள் உபசாரப் பத்திரம் வாசித்துக்கொடுத்து வரவேற்க அங்கெழுந்தருளிப் பின் தருமை நகரடைந்து அருட்செங்கோல் நடாத்துவாராயினர்கள்.

இங்ஙனமிருக்குங்கால் சைவநன்மக்கள் உள்ளத்தில்அறிவுக் கோயில்களைக் கட்டத் திருவுள்ளங்கொண்டு ஆதீனசம்பிரதாய நூல்களையும், சைவசம்பிரதாய நூல்களையும் அச்சுவாகனமேற்றி ஞானத்திருமகளை அன்பர்கள் ஒவ்வொருவர்கையிலும் இருந்து விளங்க இலவசமாக வழங்கினர்கள். ஆதீன வித்வத் சிகாமணி சுவாமிநாத பண்டிதர் அவர்களைக்கொண்டு கும்பகோணத்தில் மகாமக காலத்தில் சைவசித்தாந்த மகாநாடு கூட்டுவித்துச் சைவநற்பயிர் தழைக்கப் பிரசங்க மாரி பொழிவித்தார்கள்.

இக் குருமூர்த்திகள் செய்தருளிய ஆலயப்பணிகள் மிகப் பல. ஆதீன பரிபாலனத்துக் குட்பட்ட சீகாழி, திருக்கடவூர், மணக்குடி, கோளிலி, பறியலூர், விளநகர் ஆகிய கோயில்கள் திருப்பணி செய்யப்பட்டுக் கும்பாபிஷேகமும் நடத்துவிக்கப் பெற்றது. திருவையாறு அறம்வளர்த்த அம்மையார் பாலாலயமும், மாயூரம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் மகாகும்பாபிஷேகமும் நடைபெற்றதும் இக்குருமூர்த்திகளது ஆட்சிக்காலத்தேயாம். செம்பொனார்கோயில் என்னும் தலத்தில் கோயில்கொண்டிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்குக் கட்டளை ஒன்று ஏற்படுத்தியுள்ளார்கள்.

ஆதீன மடாலயத்திற்கு வெள்ளி நாற்காலிப்பல்லக்கொன்று செய்யப்பெற்று எடுபிடிகள் சிலவும் புதுப்பிக்கப்பெற்றன. திருப்பனந்தாள் ஆலயத்திற்கு வெள்ளிப்பல்லக்கும், சீகாழி ஆலயத்திற்கு வெள்ளிப் பல்லக்குடன் சில எடுபிடிகளும், ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் ஆலயத்திற்குச் சிறந்த வேலைப்பாடுடைய வெள்ளி ரதம் ஒன்றுஞ் செய்துவைக்கப் பெற்றன. திருவாரூர் தியாகராஜ சுவாமி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலய அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடத்துவிக்கப்பட்டது. தேர் செய்வதற்காக ரூ 5000 கொடுத்தார்கள். வெள்ளிப் பல்லக்கும், வெள்ளி யானைவாகனமும் செய்வித்துள்ளார்கள்.

ஆதீன வித்வான்களாக சீகாழி வித்வத்சிரோமணி ப. அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளை அவர்களையும், அவர்கள் குமாரர் ப. மு. சோமசுந்தரம் பிள்ளை M.A.,L.T., அவர்களையும், காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B.A., அவர்களையும் ஏற்றுத் தமிழுஞ் சைவமும் ஆக்கமுற நற்பயன் அளித்துவந்தனர். ஆதீனத்துப் புலவர் திலகமாக விளங்கியவர்களும், ஆதீன வெளியீடுகளாக வருகின்ற பண்டார மும்மணிக் கோவை போன்ற சாத்திர நூல்களுக்குக் குறிப்புரை முதலியன எழுதி



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
26—6—33ல் பட்டமேற்றபொழுது எடுக்கப்பட்டது

யருளியவர்களுமாகிய சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகளும் இக்குருமூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றவர்களே.

ஒவ்வொரு தேவஸ்தானத்துக்கும் சென்று தங்கி, கோவில் கணக்குகள் ஒழுங்காக வைத்து வரவும், காரியங்கள் செம்மையாக நடக்கவும் திட்டம் வகுத்து ஏற்பாடு செய்தார்கள். ஆதீன மடாலயம் தற்போது அடைந்துள்ள எல்லாவகையான முன்னேற்றத்திற்கும் இவர்களே மூலகாரண முதல்வர் எனக் கூறுதல் மிகையாகாது.

சென்னை இந்துமதமான்ய சட்டம் நடைமுறைக்கு வந்ததும் ஆதீன மடாலயத்திற்கும், தேவஸ்தானங்களுக்கும் அதன் விதிகளிலிருந்து விலக்குப்பெற்றார்கள்.

கனம், சென்னை உயர்நீதிமன்றம் நீதிபதி ஜஸ்டிஸ் ராமேசம், ஜில்லா நீதிபதி V. R. குப்புசாமி அய்யர், Sir C. P. இராமஸ்வாமி அய்யர், கனம் P. T. இராஜன் முதலியவர்களை மடத்துக்கழைத்து விருந்தளித்தார்கள்.

இவ்வாறு குருமூர்த்திகள் பல்லாற்றானும் தமிழுக்கும் சமயத்துக்கும் பணிகள் புரிந்து இப்போது ஞானபானுவாய் விளங்குகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்கு முறைப்படி அபிஷேகம் செய்வித்துப் பீடத்தமர்த்தி 1933-ம் ஆண்டு ஜூன் மாதம் 26-ம்நாள் பரிபூரணநிலை யெய்தினார்கள்.

## 24. ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிகர்

இக்குருமுதல்வர் பீடாரூடர்களானது முதல் செய்துவருகின்ற அறப்பணிகள் மிகப்பல. தருமையாதீனத்துப் பெரியோர்கள் அருளிச்செய்த ஞானநூல்களை அச்சியற்றி எல்லாருக்கும் வழங்குகிறார்கள். சமய சாத்திரங்களையும் அங்ஙனமே.

சம்பிரதாய நூல்களும் அப்படியே வழங்கப்பெறுகின்றன. ஆதீன மடாலயமானது ஞானநூற்பதிப்பகமாக, கலைமகள் கவினும் இடமாக, புலவர்கள் போற்றும் புகலிடமாக, சிற்பத் திறஞ் செறிந்த சித்திரச் சாலையாக, சமய நால்வர் தளிகளாக, சந்தானசாரியர் திருக்கோயில்களாக விளங்கிவருகின்றது. ஆதீன முகப்பு, புத்தகசாலையாக இருந்து அறிவு வண்மை வழங்கி நிற்கின்றது.

இக்குருமூர்த்திகளது ஆட்சி வருங்கால சைவ—தமிழுலகிற்கு வழிகாட்ட ஆகம பாடசாலை நிறுவித் திருக்கோயிற் பூசை முறைகளைச் செவ்வை பெறுத்துகிறது. தேவாரப்பாடசாலை ஆக்கித் திருக்கோயிலை—சைவவுலகை-அன்பு மயமாகத்—தமிழ் மயமாகச் செய்துவருகிறது. சுற்றியுள்ள கிராமத்துச் சிறுவர் சிறுமியர்களுக்கு அறிவு விதையிட ஆரம்பப்பாடசாலை யமைத்துப் பாதுகாக்கிறது. சிவஞானபோத மகாநாடுபோன்ற பல மகாநாடுகளைக்கூட்டிச் சித்தாந்தத் தேன் செவி வழியாகப் புகுத்தித் தித்திக்கச்செய்கிறது. புலவர்களைக்கொண்டு சமயப் பிரசங்கங்கள் நடப்பித்து வருகின்றது. தமிழ்நாட்டில் சமய மொழி மகாநாடுகளுக்கு நிலைத்த பயன்தருங் காரியங்களுக்காகப் பெரும்பொருள் தந்து சிறப்பிக்கின்றது. ஆங்காங்கு நடைபெறும் மகா கும்பாபிஷேகம் முதலியவற்றிற்கு அரும்பொருளீந்தும் ஆவன இயற்றியும் அனைவரும்போற்ற இருக்கின்றது. கலாசாலை, கல்லூரி இவைகளிற் பயிலும் ஏழைமாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் உதவி வருகிறது. தமது ஆதீனத்துக்குச் சொந்தமான ஆலயங்கள் திருக்குளங்கள் முதலியவற்றைப் புதுக்கியும், திருத்தியும் பேரழகு பெறச்செய்கிறது.

ஞானசம்பந்தம் என்னும் திங்கள்வெளியீட்டினல் சைவமுந் தமிழுந் தழைத்தமிளிரச் செய்கிறது. ஆதீன வெளியீடாகத் தோன்றும் ஞானசாத்திரங்கள் யாவற்றையும் அச்சிடுதற்காக ஞானசம்பந்தம் பதிப்பகம் என்பதோர் அச்சுக்கூடத்தையும் நிறுவியிருக்கிறது.



ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் பட்டணப் பிரவேச காலத்தில் உபயோகிக்கும் சிவிகை.



வெள்ளி நாற்காலி சவாரி
(Inspection Silver Sedan Chair)

இவர்கள் ஆட்சிக் காலத்தில் மடங்களைக் கடுமையாகப் பாதிப்பதாக மசோதா ஒன்று சென்னை சட்ட சபையில் கொண்டு வரப்பட்டு ஆலோசனைக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. அம் மசோதாவினால் ஏற்படக் கூடிய பாதகங்களை எடுத்துக்காட்டி அது தள்ளுபடி யாகுதற்குவேண்டிய பெருமுயற்சியில் ஈடுபட தள்ளுபடி பெறப்பட்டது.

உ

குருபாதம்

# திருக்கூட்டத்து அடியார்கள்

1. **ஆபதுத்தாரணர்:—** ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமி களது சீடர்கள் பலருள் இவரும் ஒருவர். இவர்களுடைய அவதார ஸ்தலம் மருதூர். அது இப்போது நயினர்கோவில் என வழங்கு கிறது. இவர் பூகோளவிலாசம் என்னும் ஓர் நூலியற்றியுள்ளார். அதில் யோசனை யென்னும் நீட்டலளவையின் விளக்கம் கூறப் பெற்றுள்ளது. அண்டங்களைப்பற்றி அறையப்பெற்றுள்ளன. புவனங்கள், திசைகாப்பாளர்கள், கண்டங்கள் இவற்றின் தன்மை கள்; விளைபொருள்கள், மக்களியற்கைகள் முதலியன விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. இடையிடையே மருதூரில் எழுந்தருளி யிருக்கும் இறைவன் பெருமையும் எடுத்தியம்பப்படுகின்றது.

"தமிழ்மணங் கமழும் கமலையம் பதிவாழ்
ஞானசம் பந்தனை வணங்கில்
ஈன சம்பந்த மில்லைவீ டெளிதே"

என்பது அந்நூற் குருவணக்கச் செய்யுளாகும்.

2. **குமரகுருபர சுவாமிகள்:—** இவர்கள் திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ வைகுண்டத்திற் கருகிலுள்ள கயிலாயபுரத்தில் வேளாள குலத்தில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமி யம்மையாருக்கும் தவத்தாற் பிறந்த சிவச்சேய். ஐந்தாண்டுவரை வாய்பேசாதிருந்து செந்தில் முருகன் அருள் நிரம்பப்பெற்றுப் பேசத் தொடங்கினர்கள். அவர்கள் பேசிய முதற்பேச்சு 'சைவசித்தாந்தத் தெளிதேனும், முருகனருட் பழமும், அடியார் கள் வாயை யினிக்கச்செய்யும் பயன் சருக்கரையுங் கலக்க ஆக்கப்பெற்ற கந்தர்கலிவெண்பா என்னும் தமிழர் பாராயண நூல்.

முருகனருள் பெற்ற சுவாமிகள் ஞானசாரியரை நல்கவேண்டு மென்றும் முருகனிடம் விண்ணப்பித்தனர். முருகன் அசரீரியாக 'உன் வாக்குத் தடைப்படும் இடமே ஞானசாரிய பீடம்' என்று அருள் செய்ய, ஞானசாரியரைத் தேடிப் புறப்பட்ட அவர்கள் தம்மூர் சென்று அங்குள்ள கயிலாயநாதர்மேல் **கயிலைக் கலம்பகம்** பாடினர். பின் தலயாத்திரை செய்துகொண்டு மதுரை வந்து, **மீனாக்ஷியம்மை பிள்ளைத் தமிழை** இயற்றினர். தமிழ் நலம் உணர்ந்து உணர்த்தும் தாயாகிய அம்மையார் திருமலைநாயக னுக்கும் அறிவித்துத் தானுங் காட்சிதந்து "தொடுக்குங் கடவுள்" என்ற பாடலில் மும்முறை தோய்ந்து முத்தமாலையைச் சுவாமி களுக்குப் பரிசாக அளித்து மறைந்தனர். பின்னர் **மீனாக்ஷி யம்மை குறம், இரட்டைமணிமாலை, மதுரைக்கலம்பகம்** என்பன வற்றையும் அருளிச்செய்தனர். திருமலைநாயகருக்காக ***நீதிநெறி விளக்கம்** என்ற நூலும் செய்தருளினர். அதுகேட்ட அரசன் மகிழ்ந்து கனகாபிஷேகஞ் செய்வித்தான். விருதுக ளளித்தான். அரியநாயகபுரம் என்னும் ஊரைப் பரிசாகக் கொடுத்தான். பின்னர், சுவாமிகள் திருவாரூரை யடைந்து தியாகேசனை வழி பட்டுத் ***திருவாரூர் நான்மணிமாலை** தொடுத்து அணிந்தனர். தருமபுரம் நான்காவது பட்டத்தெழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகர் திருவருட் சிறப்பைக் கேள்வியுற்றுச் சென்றபோது பெரியபுராணத்து " 'ஐந்துபேரறிவும்' என்னும் பாடலுக்கு அனு பவப்பொருள்தருக" என, சுவாமிகளுக்கு உரைதடைபட்டது. ஆகையால் 'குருநாதனைக் கண்டேன்! கண்டேன்!!' என களிப்புக் கடலிற் றிளைத்தனர். குருவாணைப்படி சிதம்பரம் செல்ல விரும் பியவர்கள் வழியில் புள்ளிருக்குவேளூர் சென்று செல்வமுத்துக் குமரனைத் தரிசனம்செய்து எழுந்தருளுங்கால் தம்கனவில் தமிழ் விரும்பு கந்தன்தந்த ஆணைப்படி **முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்** பாட எண்ணியும், "பொன்பூத்தகுடுமி" என அவர் முதல் கொடுக்கப் பிள்ளைத்தமிழைச் சந்நிதியில் அரங்கேற்றினர். பின்னர், சிதம்பரம் சென்று **சிதம்பர மும்மணிக்கோவை** யையும், புராணிகர் தருக்கொழியச் ***சிதம்பரச் செய்யுட்கோவை**

---

* நூல்கள் ஆதீனத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

யையும், அம்மை திருவருளால் சிவகாமியம்மை யிரட்டைமணி மாலையையும் இயற்றினர்.

பின்னர், தருமை வந்து ஞானதேசிகரிடம் உபதேசம் பெற்றுப் பண்டார மும்மணிக்கோவை* என்னும் சாத்திர மாலையை ஆசாரிய திருவடிகளுக்குச் சூட்டிக் குருவாணைப் படி காசிநகரம் சார்ந்தார். கங்கையில் நீராடி விசுவநாதர் வழிபாடும் செய்து எழுந்தருளியிருக்குங் காலத்து ஓர்நாள் இரவு கேதார நாதர் இவர் கனவிடை வந்து 'காடுகளிடையே நம்மைப் பூசிக்க' என ஆணை தர, சுவாமிகள் காடுவெட்டித் திருத்தி கேதார நாதரைக்கண்டு வழிபட்டனர். துண்டிவிநாயகர் பதிகம், காசிக் கலம்பகம் ஆகிய நூல்களை யாக்கியருளினர்.

காசியில் தருமமியற்றக்கருதி நவாபைக்கண்டு அவன் மொழியிற்பேச கலைமகள்மேல் சகலகலாவல்லிமாலை* பாடி அருள்பெற்று இந்துஸ்தானிமொழியை ஓதாதுணர்ந்து சிங்க வாகனத்தேறிச் சென்று அரசன் சிங்கவாகனத் திடங்கொடுக்க எழுந்தருளினர். மிகுதியும் பொறாமைகொண்ட மதியமைச்சன் ஒருவனால் வீணே தோன்றப்பெற்ற ஐயத்திற்குக் காட்சியளவை யால் பதில்கூறி நீக்கினர். சிவபரத்துவத்தைப் பழுக்கக் காய்ச்சிய இருப்புக்கோலைக் கையில் ஏந்தி விளங்கச்செய்தனர். ஒருநாள் சாதிவேறுபாடு கூடாதென்ற நோக்கத்துடன் தன்வீட்டுக்கு அமுதருந்த அழைத்த அரசன் எண்ணப்படி உண்ணச்சென்றபோது, ஊனுணவு பரிமாறப்பட்டிருத்தலை யறிந்து அவற்றைத் திருக்கண்சாத்த அவை காய் கனி கிழங்கு களாக மாறின. பின்னர் அமுதுசெய்தனர். இவற்றை எல்லாங்கண்டு அறிவு திருந்திய அரசன் தெய்வாதீனமாகக் கிடைத்த சகுனப்படி கங்கைக் கரையில் மடங்கட்டிக் கொடுத்தான்; பெரும் பொன்னளித்தான். அவற்றால் சுவாமிகள் தருமம் இடையறாது இயற்றிக் கொண்டிருந்துவிட்டு, ஆசாரிய தரிசனத்தில் அவா எழும்பத் திரும்பவும் தருமபுரம் வந்து குரு தேவரை வணங்கிப் பிரிய மனமின்றி வருந்தினர். ஞானதேசிகர்

---

* இந்நூல் அச்சிலிடப்பெற்றுள்ளது.

சொக்கலிங்கப் பெருமானை ஞான பூஜையாக எழுந்தருளிப் பண்ணிக் கொடுத்தனர். பெற்றுக்கொண்டு சுவாமிகள் காசியையடைந்து சிவானுபூதிச் செல்வராய்த் திகழ்ந்தார்கள். அப்போது டில்லிபாதுஷாவின் குமாரி ஜெபுனிஸா தன் தலை நகரில் ஒரு மத பரிஷத் கூட்டினுள். அதற்குச் சுவாமிகளுக்கும் அழைப்பு வந்தது. சுவாமிகள் சென்று சைவசமய உண்மைகளை எடுத்துக்காட்டி வெற்றியுடன் காசிக்குத் திரும்பினுர்கள். சில நாட்கழித்து வைகாசித் திங்கள் கிருஷ்ணபக்கத்து மூன்றும் நாள் இறைவன் திருவடிநீழலை யடைந்தார்கள்.

3. **வெள்ளியம்பலவாணத் தம்பிரான்:—** இவர்கள் நான்காவது குருமூர்த்தியான மாசிலாமணி தேசிகரிடத்தில் சந்நியாசம் பெற்றவர்கள். படிக்காசுவைத்த முனிவருடன் காசி யாத்திரையாகச் சென்று குமரகுருபர சுவாமிகளிடம் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவரானுர்கள். ஐந்தாவது பட்டத்து ஞானசம்பந்த தேசிக சுவாமிகளிடத்தில் ஞானதீக்கை பெற்று அவர்கள் திருமுன் ஞான்சாத்திரங்களையும் பண்டாரசாத்திரங்களையும் நன்கு கற்றுத் தெளிந்தார்கள்.

இவர்கள் தக்ஷணயாத்திரை செய்த காலத்துத் திருச்செந்தூரில் குதர்க்க வாதம் செய்து தூஷித்த ஒரு புலவரைத் தாம் செய்த சபதப்படியே தம் மாணுக்கராகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளைக்கொண்டு திருச்செந்தில் நிரோட்டகயமகவந்தாதி பாடித் தோற்கடித்து அடிமையாக ஏற்றனர். திருநெல்வேலி சிந்துபூந்துறை திருமடத்தில் பல மாணவர்களுக்குப் போதக ஆசிரியராக வீற்றிருந்தார்கள்.

இவர்கள் தல யாத்திரை செய்யுங்கால் ஆங்காங்குள்ள அன்பர்கள் வேண்டுகோட்படி, பல புராணப் பிரசங்கங்கள் செய்தும் சைவமுந் தமிழுந் தழைத்தோங்கச் செய்தார்கள்.

பின்னர், ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிகர் சமூகமாலை, நாலாட்டு, திருப்பள்ளியெழுச்சி முதலிய பிரபந்தங்களை *அருளிச் செய்தனர். குருஞானசம்பந்த தேசிக மூர்த்திகள் அருளிச்செய்த முத்திநிச்சயம் என்னும் பண்டார சாத்திரத்திற்கு ஒரு பேருரையும், ஒரு சிற்றுரையும் *அருளிச்செய்துள்ளார்கள். சிவஞான சித்தியாருக்கு ஞானவரண விளக்கம் என்னும் பாஷியமும் இயற்றியுள்ளார்கள்.

இவர்கள் பரிபூரணம் எய்தியஇடம் தில்லையம்பதியாகும். அங்கு இவர்கள் சமாதி ஞானப்பிரகாச குளத்துத் தென்மேற்கு மூலையில் இருக்கிறது.

கந்தபுராணச்சுருக்க ஆசிரியராகிய சம்பந்த சரணலய சுவாமிகள் இவர்களிடத்துக் கல்வி கற்றவர்களாவர்.

4. சம்பந்த சரணலயர்:— இவர்கள் ஆறுவது குருமூர்த்தியாக இருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிக சுவாமிகளிடத்தில் ஞானோபதேசம் பெற்றவர்கள். வெள்ளியம்பலவாணத் தம்பிரானிடம் கல்வி பயின்றவர்கள். இவர்கள் கல்வி நல்லருளும், கருணையும், துறவும், ஒழுக்கமும், விழுப்பமும், பொறையும் எய்தி விளங்கினர். இவர்களது பெருமையினைக் கேட்டறிந்த மைசூர் மகாராஜா சுவாமிகளுடைய நட்பைப் பெரிதும் வேண்டினர். சுவாமிகளும் குருமூர்த்திகளிடத்தில் விடைபெற்று மைசூருக்கு எழுந்தருளினர்கள். அரசன் புலவர் பலர் கூடிய பேரவையில் எழுந்தருளச் செய்தான். அப்போது அரசன் சுவாமிகளது தோற்றப் பொலிவைக் கண்டு 'அண்டங் காக்கை போல் உளரே' என்று நகையாடினன். அப்போது சுவாமிகள் புன்னகை பூத்துத் 'தாமே அண்டங்காக்கைக்குப் பிறந்தவர்' என்று பதில் கூறினர்கள். அரசர் அதிலுள்ள சொன்னயம் கண்டு மகிழ்ந்து தம்முடன் சிலநாளாவது சமஸ்தான விருந்தினராக இருந்தருளவேண்டும் எனப் பிரார்த்திக்க,

---

* இந்நூல் ஆதீனத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

சுவாமிகளும் இசைந்தனர். அதுபோது அரசன் வேண்டுகோட் படி கச்சியப்ப சிவாசாரியர் செய்த கந்தபுராணத்தைச் சுருக்கிச் சொன்னயம் பொருணயம் தோன்ற விருத்தப்பாவால் ஓர் *நூல் செய்தருளினர். அதுகண்ட அரசர் மன மகிழ்ந்து சுவாமி களுக்கு மும்முறை பொருளளித்தனர். அவைகளை சுவாமிகள் முறையே குருப்பிரீதியாக, சிவப்பிரீதியாக, அடியார் பிரீதியாகச் செய்தார். அரசர் சுவாமிகள் வேண்டாமையாகிய விழுச் செல்வமுடையாராதலை யறிந்து நகர் வலம் செய்விக்க விரும் பினன். சுவாமிகள் "குருவாணையின்றி உடன்படேன்" என மறுத்தனர். அரசர் தமது கருத்தைத் தருமபுரத்திலிருக்கும் குருமகாசந்நிதானத்திற்குத் தெரிவித்து அனுமதிபெற்றுச் சுவாமிகளை நகர்வலஞ் செய்வித்தார்.

ஒருநாள் அரசர் தருமபுரத்தில் உங்கள் குருத்தானத்தில் சீடர்கள் என்ன செய்வார்கள் என்று வினவினர். சுவாமிகள் சற்றும் தாமதியாது,

"ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே"

என்ற பாடலால் உத்தரமளித்தனர். அதனைக்கேட்ட அரசர் சுவாமிகளது ஞானசாரியர் பெருமையை யறிந்து நிறைந்த பொருளை மடாலயத்திற்கு அனுப்பி, சொக்கநாதப் பெருமா னுக்கு அபிஷேகிக்க ஆண்டுகள்தோறும் கபிலைப் பசுக்களை யனுப்புகின்ற வழக்கத்தையும் ஏற்படுத்தினர்.

பின் சுவாமிகள் அரசனிடம் விடைபெற்றுத் தருமபுர மடைந்தார்கள். குருஞானசம்பந்தர் மீது சிகா ரத்தினமாலை† என்ற ஓர் தோத்திரநூல் அருளிச்செய்தனர். இவ்வாறு சுவாமிகள் பல்லாற்றானும் தொண்டுகள் புரிந்து இறைவன் திருவடிநீழ லெய்தினர்கள்.

---

* கந்தபுராணச் சுருக்கம். † இந்நூல் ஆதீனத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

5. **படிக்காசுத் தம்பிரான்:—** இவர் தொண்டை நாட்டில் பொன்விளைந்த களத்தூரில் உயர் சைவக் குடியிற் பிறந்தவர். குமரகுருபரசுவாமிகளிடத்தில் வெள்ளியம்பலவாண முனிவரோடு கல்வி பயின்றவர். புதுக்கோட்டை அரசனிடம் சென்று சில பிரபந்தங்கள் பாடிப் பரிசில் பெற்ருர். மற்றும் பல அரசர்களாலும் பிரபுக்களாலும் சன்மானிக்கப் பெற்று மதுரை, திருவாரூர், திருவாஞ்சியம், முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு தருமபுரம் சார்ந்தார். அப்போது ஆருவது குருமூர்த்திகள் திருநாவுக்கரசு தேசிகர் ஆட்சிக்காலம். அவர்களிடம் சைவ சன்னியாசம் பெற்றுத் தாம் கொண்டுவந்த பொருள்களையெல்லாம் பாதகாணிக்கையாகச் சமர்ப்பித்து அணுக்கத் தொண்டராக இருந்துவந்தனர். இவர்கள் கொண்டுவந்து சமர்ப்பித்த பொருள்களைக் கொண்டு வாங்கப் பெற்ற நிலம் படிக்காசரது பெயராலேயே இன்றும் வழங்கப்பெறுவது காணலாம். பின்னர் குருவாணைப்படி வேளூர் கட்டளை விசாரணையை மேற்கொண்டு நிர்வாகங்களைக் கவனித்து வந்தார். அக்காலத்துப் **புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம்** * இவர்களாற் பாடப்பெற்றது. இவர்களின் கவி வளத்தைப்பற்றி,

"பண்பாய பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணுதே"

எனவும்,

"மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்த தமிழ்
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்ஞலும் வாய்மணக்குந்
தூய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப் பயிராய் விளைந்திடுமே
பாட்டினுடை நளினந்தானே"

எனவும் வரும் பாடல்கள் விளக்கி நிற்கும்.

---

* இந்நூல் ஆதீனத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

பின்னர், கட்டளை விசாரணையை விடஎண்ணியும் அணுக்கத் தொண்டராகவே இருக்க எண்ணியும் குருமூர்த்திகளிடம் விண்ணப்பித்து அவர்கள் ஆணை பெற்றுத் தருமையடைந்து பதினெட்டுக்கத்துச் சமாதி நிலை பயின்றுவந்தார். அப்போது ஒரு நாள் இரவு அர்த்தயாம நேரம். சமாதி கூடியிருந்த படிக்காசர் சிதம்பரத்தில் நடராஜப்பெருமான் திருமுனிருந்த திரைச்சீலை தீப்பற்றியதை ஞானத்தாலுணர்ந்து தம் கைகளைப் பிசைந்தனர்; தீயவிந்தது. நடராஜப்பெருமான் சிவசங்கர தீக்ஷதர் என்பார் கனவிற்றோன்றி 'நமது திரைச்சீலை நடுவில் தீப்பற்றியது. தருமையிற் பதினெட்டுக்கத்திருக்கும் படிக்காசன் அவித்தான். அவனுக்குச் சென்று கொடுக்க' என ஒரு விபூதிக் கிழி யளித்தனர். தீக்ஷதர் விழித்து இறைவனாணையைச் சிரமேற் றாங்கித் தருமைநகர் வந்து ஞானதேசிகரிடத்து நடந்தன விண்ணப்பித்து 'அப்படிக்காசர் யார்? எங்கிருக்கிறார்?' என்ன, ஞானதேசிகர் அவ்விபூதிப் பையை ஏற்று உபசாரங்களை முறைப்படி யியற்றிப் படிக்காசரை அழைப்பித்து அவர் கரத்தில் அளித்துத் தீக்ஷதருக்கு வேண்டிய சன்மானங்களையும் செய் தனுப்பினர்.

6. **காவையம்பலவாணத் தம்பிரான்:—** இவர்கள் வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளிடம் பாடங்கேட்டவர்கள். திருவருட் பயனில் அடங்கியிருக்கும் உண்மைப் பொருள்களை யமைத்து கலித்துறை என்னும் பாவினத்தில் பாடியுள்ளார்கள். இந்நூல் 100 பாடல்களுடையது.

7. **தமிழாகர முனிவர்:—** இவர்கள் திருநெல்வேலியில் வேளாள குலத்தில் அவதரித்தவர். கல்வி நிரம்பப் பெற்றவர். சிதம்பரம் குகைமடத்து ஆன்மானந்தவாதியான ஞானப் பிரகாசரிடத்தில் உபதேசங் கேட்டவர். அம்மடத்தைச் சார்ந்த திருநெல்வேலியிலிருந்த ஓர் அறச்சாலை மடத்துத் தலைவராக இருந்தார். மனச்சாந்தி கிடைக்காது சற்குருவைத் தேடியலைந்து, தக்ஷணயாத்திரைக்கு எழுந்தருளிய திருஞானசம்பந்ததேசிக

சுவாமிகள்பால் ஞானேபதேசம் பெற்று அவர்களது திருவடித் தொண்டராயினர். இம்முனிவரது செய்யுட்கள் சொற்சுவையும், பொருட் செறிவும், கற்பனைத் திறமும் பெற்றுப் புலவர் செவிக்குப் பெருவிருந் தளிப்பன. "பெருமைபெறு நாவலர்கள் கொண்டாட உலகினிற் பெருங்காப்பியங்கள் செய்யும் சீர் கொண்ட தமிழாகரன்" என்ற பாடலே இதற்குச் சான்று பகரும். இம்முனிவர் இயற்றிய நூல்கள்* குருராயவட்டகம், சந்திர கலாமாலை என்ற துதிநூல்களும் நீதிசாரம், ஆசௌசதீபிகை, பிராயசித்த சமுச்சயம் என்பனவுமாம். மற்றும் நெல்லையப்பர் நான்மணிமாலை, நெல்லைகாவலமாலை, திருப்பணிமாலை, கலைமக ளிரட்டைமணிமாலை என்பனவும் இவர்கள் செய்தருளியனவே. ஆனல் இவை அகப்படாதனவாதலின் அச்சாகவில்லை.

8. **ஸ்ரீ-ல-ஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிக சுவாமிகள்:—** இவர்கள் அறிவுநூற் கல்வியும், ஞானநூற் கல்வியும் நிரம்பியவர்கள். 8-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அழகிய திருச் சிற்றம்பல தேசிகரை ஞானகுருவாகக் கொண்டவர்கள். ஞான சாரியார்கள் மீது கிளிவிடுதூது* இயற்றியுள்ளார்கள். அறிவா னந்த சமுத்திரம்,* வினவுரை, திரிபதார்த்ததீபம், சித்தாந்த நிச்சயம், அனுட்டானவிதி, உசாத்தான தோத்திரம், அருட்பா மாலை முதலியனவும் இவர்களுடைய அருள்வாக்குக்கள். சொர்க்கபுர மடாலய ஸ்தாபகர்களும் இவர்களே. இவர்களது பெருமையைக் கேள்வியுற்ற தஞ்சை மன்னர் பாபுசாகிபு ஏகோஜி II அநேக நிலங்கள் கொடுத்துள்ளார். மகாராணி சுஜானபாய் இவர் நிஷ்டையிலிருக்கும் கோலத்தைக்கண்டு வணங்கி அருள் பெற்றதாகக் கனவு கண்டார். சொர்க்கபுரத் துக்கு வந்து சுவாமிகளை வணங்கிச் சில மானிபங்கள் விடுத்துச் சென்றார். இந்நிகழ்ச்சி கி. பி. 1737ல் நடந்தது.

9. **புன்கூர் சிவப்பிரகாச முனிவர்:—** இவர்கள் பத்தாவது குருமூர்த்திகளான ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞானதேசிகசுவாமிகளிடத்தில்

---

* இந்நூல் ஆதினத்தில் அச்சிடப்பெற்றுள்ளது.

உபதேசம் பெற்றவர்கள். வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகளிடத்தில் கல்வி கற்றவர்கள். இவர்கள் இயற்றிய நூல் சிவப்பிரகாசக் கட்டளை *.




10. சங்கர குமார முனிவர்:— இவர்களும் பத்தாவது குரு மூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றவர்கள். இவர்கள் இயற்றிய நூல்கள் தருமபுர ஸ்தல புராணம், சச்சிதானந்த விநாயகர் பிள்ளைத்தமிழ் என்பனவாம்.

11. சிவானந்த முனிவர்:— இம் முனிவர்பெருமான் எட்டாவது பட்டத்து அழகியதிருச்சிற்றம்பல தேசிகர் முதல் பத்தாவது பட்டம் சிவஞானதேசிகர் காலம் வரை இருந்ததாகச் சிவானந்த மாலை, சம்பிரதாயதீபம் இவற்றால் விளங்கும். ஆகவே இவர்கள் மூன்று மகா சந்நிதானத்து அனுபவ நிலையையும் அருள் நிலையையும் பெற்றவர்கள் எனக்கூறலாம். இவர்கள் இயற்றிய நூல்கள் சம்பிரதாயதீபம்,* சிவாநந்த போதசாரம்,* சிவாநந்த மாலை முதலியனவாம்.

12. அட்சயலிங்க சுவாமிகள்:— இவர்கள் ஆசிரியர் ஆணையின்வழி புள்ளிருக்குவேளூர் தேவஸ்தானம் கட்டளை விசாரணை செய்து வந்தார்கள்.

> "திகழ் சிவஞான தேசிகனருளாற் றெளிந்துளஞ் சகல சாத்திரமும்
> புகழ்பெற உணர்ந்தோ னட்சயலிங்கப் புண்ணிய முனிவரன்"

என்று புள்ளிருக்குவேளூர்த் தலபுராணத்திற்குச் சிறப்புப் பாயிரம் அளித்த அபியுக்தர் ஒருவரால் தமது பாடலிற் சிறப்பிக்கப் பெற்றுள்ளார்கள். மற்றும் இவர்கள் அட்டமா சித்தி வல்லவர்கள். "அட்டமாசித்தி வல்ல அட்சயலிங்கசாமி" என பட்டயத்திற் கண்டது. இவர்களது விசாரணைக் காலத்தில் சொத்து வருவாய் தேவஸ்தானத்திற்கு அதிகமில்லை. இருக்கிற கொஞ்ச நிலங்களையுங் காலத்தில் உழுது பயிரிட சாதனங்கள்

---

* இந்நூல்கள் ஆதீனத்தில் அச்சிடப் பெற்றுள்ளன.

சேகரிக்கமுடியவில்லை. சுவாமிகள் அதற்கு மனம் வருந்தாது நிலங்களை உழுகின்ற காலத்துத் தம்மிடம் உள்ள ஒரு காளையை ஏரில் ஒருபக்கம் பூட்டி மற்றொரு பக்கத்துத் தம்கழுத்தைமாட்டி உழுதனர். அப்போது யாத்திரைக்காக வந்த அரசன் இச்செயலைக் கண்டான். சுவாமிகளுடைய சிவத்தொண்டின் ஈடுபாட்டை — கோயில் விசாரணைத் திறமையை — வியந்தான். சுவாமிகளை அழைத்து, 'இவ்வாறு செய்யக் காரணம்யாது?' என வினவினன். சுவாமிகள் ''மற்றொருகாளை வாங்கி உழுதற்குப் பொருள் வருவாய் இல்லை. இவ்வூர் ஆலயத்திற்குச் சொந்தமான இச்சிறு நிலத்தை யானே ஒரு காளையாகயிருந்து உழுது பயிர் செய்கின்றேன்'' என்றார்கள். அரசன் சுவாமிகளது முறுகிய அன்பைக்கண்டு 'தங்களுக்கு இன்றோடு இக்கவலை நீங்கத் திருவருள் துணைசெய்யுமா?' என்று வினவினன். சுவாமிகள் 'திருவருட்சம்மதம்' என்றார்கள். அரசன் மிகுந்த நிலங்களை இறைவனுக்காகத் தானம் செய்தான். இவ்வாறு சுவாமிகள் இறைவனுக்குவேண்டிய பல நிலங்களைச் சேர்த்தனர். புள்ளிருக்குவேளூர்த் தலபுராணத்தை வடுகநாத தேசிகர் என்பவர்களைக் கொண்டு இயற்றுவித்தார்கள்.

13. சிதம்பரநாத முனிவர்:- பத்தாவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிகசுவாமிகள் தல யாத்திரையாகச் சென்று திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் காலத்தில் இவர் சென்று வணங்கி குருமூர்த்திகளது திருவடிகட்குத் திருப்பதிகமாலை* ஒன்று சாத்தினர். சிலநாள் கழித்துக் குருமூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டார்கள். பின் சிவஞானங் கைவந்தவர்களாய்த் தருமையம்பதியில் அடியார்களுடன் வசித்து வருநாளில் இவ்வாதினத்துக்குச் சொந்தமான திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி கோயில் கட்டளை விசாரணையாக எழுந்தருளியிருந்த பஞ்சாக்கரமுனிவர் கேட்டுக்கொண்டபடி சிவாகம சாரமான நித்திய கன்ம நெறியைக் குறள் வெண்பாவால் 'நித்தியகன்ம நெறி'* என்னும் பெயருடன் அருளிச்செய்தனர். 'அத்தனரு

---

* இந்நூல்கள் ஆதீனத்தில் அச்சிடப் பெற்றுள்ளன.

ளாகமத்தி னாய்ந்து அவாவினிற்செய், நித்திய கன்ம நெறி தனக்கு' என்பது இக்கருத்தை வலியுறுத்தும் அந்நூலின் காப் புச் செய்யுட் பகுதியாகும்.

தக்கன் இறைவனை மதியாது செய்யப்புகுந்த யாகத்தை ஸ்ரீ வீரபத்திரக்கடவுள் அழித்து, உதவிபுரியவந்த தேவர்களை யெல்லாம் வென்று, அவனது தலையையும் தடிந்த வரலாற் றைப் பொருளாக அமைத்து ஒட்டக்கூத்தராலியற்றப்பட்ட தக்கயாகப் பரணிக்கு உரைவகுத்தவர் இம் முனிவர் பெருமா னெனக் கருதப்படுகிறது.

பிறகு குருவாணைப்படி சீகாழி ஆலய நிர்வாகப் பணியை ஏற்று நடாத்திவந்தார்கள். இவர்களோடு பூர்வாசிரமத்தில் உடன் கல்வி கற்றவர் தில்லையாடியில் பிறந்த அருணசலக் கவிராயர். ஒருபோது வியாபார நிமித்தமாகப் புதுச்சேரிக்குப் போகும்வழியில் சீகாழிக்குவர அங்கே கட்டளை விசாரணையில் சுவாமிகள் இருப்பது அறிந்து பார்க்கச் சென்று அளவளா வினர். சுவாமிகள் தாம் சீகாழிக்கு ஒரு பள்ளுப் பிரபந்தம் பாடத் தொடங்கியிருப்பதையும், அதனை முடிக்க அவகாசமின் மையையும் உணர்த்தி 'இதனை இருந்து முடித்துச் செல்க' என்று கூறினர்கள். சுவாமிகளது அன்புரையை எதிரேயே மறுத்துச் செல்லும் மனவாற்றலில்லாதவராய் கவிராயர் பிரபந்தத்தைப் பாடி முடித்து அங்கிருந்து மறுநாள் இரவு அப்பிரபந்தத்தை மற்றொருவர் கையிற்கொடுத்துச் சுவாமிகளிடம் சேர்ப்பிக்கச் செய்து தாம் புதுவைக்குச் சென்றார்.

முனிவர்பிரான் கவிராயர் சென்றுவிட்டார் என்பதைக் காலையி லறிந்துகொண்டு எவ்வாற்றானும் இங்கேயே இருத்தி விடவேண்டும் எனத் திருவுளங்கொண்டு கவிராயர் அழைப்பது போலக் கடிதம் அனுப்பி அவர்கள் குடும்பத்தாரை வரவழைத் துச் சீகாழியில் வீடொன்றுவாங்கி அதில் இருக்கச்செய்தார்கள். சிலநாளில் கவிராயர் மீண்டுவந்தனர். சுவாமிகளைத் தரிசித்துச் சின்னளுடனிருந்தனர். ஒருநாள் சுவாமிகள் "வீதிவலம் வரு வோம்" என்று கூறி உடனழைத்து வருங்கால் வடக்குவீதி

அடைந்ததும் தம் குடும்பம் ஒரு வீட்டில் இருப்பதை அறிந்து ஆச்சரிய மடைந்தார் கவிராயர். சுவாமிகள் "உம்மை உடனிருத்துவதற்காகவே இக்காரியம் நம்மால் செய்யப்பெற்றது" என்று அறிவித்தார்கள். கவிராயர், கல்வியை நுகரும் சுவாமிகள் கருத்தையறிந்து சீகாழியிலேயே வசிப்பாராயினர். அது முதல் அப்புலவர் தில்லையாடி அருணசலக் கவிராயர் என்ற பட்டம் நீங்கிச் சீகாழி அருணசலக் கவிராயர் என வழங்கப்பெற்ருர். சீகாழியில் இருக்கும்போது முனிவராணைப்படி சீகாழிக்குத் தல புராணமுஞ் செய்தனர். இதனை விளக்குவிப்பது "இனைய காதை யீண்டியம்பவும் வல்லனே" என்னும் சீகாழித் தலபுராணத்துக் கடவுள் வாழ்த்து 25-ம் பாடலாகும்.

14. முத்துக்குமாரத் தம்பிரான்:- இவர்களும் பத்தாவது குருமூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றவர்கள் என்பதும், புள்ளிருக்குவேளூர் தேவஸ்தானம் கட்டளை விசாரணையாக நியமிக்கப் பெற்றவர்கள் என்பதும், ஆலயத்திருப்பணி பல செய்தவர்கள் என்பதும் கல்வெட்டுக்களால் அறியப் பெறுவனவாம். ஆண்டுகள் தோறும் இவர்கள் முத்தியெய்திய நாளன்று சமாதிக்கு அபிஷேக ஆராதனைகளும் மாகேசுவர பூஜையும் நடத்தப் பெற்று வருகின்றன.

15. தில்லைநாயகத் தம்பிரான்:— இவர்கள் காசியில் வசித்துக்கொண்டிருக்குங்கால் ஆங்குள்ள தருமங்களைக் கண்காணித்து நடத்தி வந்தார்கள். எல்லாம் நிறைந்துங் குருதரிசனப் பேறு அடிக்கடி கிடைக்காமையாற் பெரிதும் வருந்தி குருநாதருக்கு அணுக்கத்திருத்தலே மேலெனக் கருதிக் காசியை விட்டுப் புறப்பட்டார்கள். தருமைவந்து குருநாதரை வணங்கினர்கள். கொண்டுவந்த பொருள்களை எல்லாம் குருகாணிக்கையாக வைத்தார்கள். அப்போது குருநாதர் அவைகள் தரும சொத்தாக இருப்பதால் இங்கு வேண்டாம் எனப்பணித்து, "திருப்பனந்தாளைத் தலைமைத் தலமாகக்கொண்டு இருப்பீராக. உம்மெண்ணம் போல் அடிக்கடி இங்கு வந்துபோகவும்" என்று

ஆணை தந்தார்கள். அவ்வாறே திருப்பனந்தாள் சென்று காசி மடத்தைத் தாபித்துக் குருவாணைப்படி நடந்து வந்தார்கள்.

16. **ஆறுமுக சுவாமிகள்:-** இவர்கள் பதினான்காவது குரு மூர்த்திகளிடம் தீக்கை பெற்றவர்கள். கலாவல்லபர். வெள்ளப் பள்ளம் சாஸ்திரிகளை வாதில் வென்றவர்கள். விரிவு 14-வது மகாசந்நிதானத்தின் வரலாற்றில் காணலாம்.

17. **உலகநாத வள்ளல்:-** இவர்கள் பதினைந்தாவது குரு மூர்த்தியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ரிடத்தில் ஞானதீக்கை பெற்றுக் குரு ஆணைப்படி வேளூர் தேவஸ் தான பரிபாலனம் செய்துவந்தார்கள். அக்கோயிலுக்கு பெருஞ் சொத்துகள் சேர்த்தவர்கள். வடலூர் இராமலிங்க சுவாமிகள் தாமியற்றிய வைத்தியநாதர் பதிகத்தின் பன்னிரு பாடல் களிலும் தவறாமல் "**தவசிகாமணி உலகநாத வள்ளல்**" என்று குறிப்பிடுவது இவர்களது ஒழுக்க நலத்தையும் வள்ளற்றன்மை யையும் நாம் அறிந்துய்யச் செய்யும் நல்வாக்காகும்.

18 **சிதம்பரநாத சுவாமிகள்:—** பதினாறாவது குருமூர்த்தி களாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிகரிடத் தில் உபதேசம் பெற்றவர்கள். குரு ஆணைப்படி ஆச்சாள் புரம் தேவஸ்தானம் கட்டளை விசாரணை நடத்திவந்தவர்கள். மந்திர வலிமை பெற்றவர்கள். இவர்கள் சமாதி ஆச்சாள்புரத் தில் இருக்கிறது. விஷம் தீண்டியவர்கள், நோயுற்றவர்கள், பேய் பிடித்தவர்கள் எல்லோரும் இவர்களுக்குப் பிரார்த்தனை செய்து சமாதியின்முன் அடைந்தால் நோய் நீங்கப்பெறு கிறார்கள். அது இன்றும் கண்கூடு. இவர்கள் முத்தி எய்திய நாளன்று விசேஷ அபிஷேக ஆராதனைகள், மாகேசுரபூஜை முதலியன ஆண்டு தோறும் சிறப்பாக நடைபெறுகிறது.

19. **பரமசிவசுவாமிகள்:—** ஆதீனத்தில் புலவர்திலகமாக விளங்கியவர்களுள் இவர்களும் ஒருவர். வடநாடு, தென்னாடு

யாத்திரைகள் செய்து ஆங்காங்கு சைவமும் தமிழும் பரப்பிய வர்கள். திருப்பனந்தாள் காசிமடத்ததிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகளின் மாணக்கர். பரமசிவ சுவாமிகளுக்குப் பரோடா, நேபாளம், மைசூர் முதலிய சமஸ் தானங்களிலிருந்து ஆண்டுகள் தோறும் வழக்கமாக வர்த் தனைகள் வந்துகொண்டிருக்கும். இவர்கள் பனசை மும் மணிக்கோவை, குமரகுருபர சுவாமிகள் தோத்திரப்பாமாலை, காசிவிசுவேசர் அந்தாதி, சிவானுபவசாரம் முதலிய நூல்கள் இயற்றி யுள்ளார்கள்.

20. சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள்:— பதினேழாவது குருமூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றவர்கள். கட்டளை விசாரணையாகப் பல பெருந் தேவஸ்தானங்களுக்கு நியமிக்கப் பெற்றவர்கள். பின்னர் திருப்பனந்தாள் காசிமடத் ததிபராக நியமிக்கப் பெற்றுப் புலவர் சிகாமணியாய் விளங்கினர்கள். இவர்களிடத்தில் கல்வி கற்றவர்கள் மிகப்பலர். இப்போது காசிமடத் ததிபராகவுள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் இவர்களிடம் பாடம்கேட்டவர்கள்.

21. அருணசலத் தம்பிரான்:— இவர்களும் பதினேழாவது குருமூர்த்திகளிடத்தில் சிவஞானோபதேசம் பெற்றவர்கள். திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ சுவாமி தேவஸ்தானம் ராஜாங்கக் கட்டளை விசாரணையை ஆசாரிய அனுக்கிரகத்தால் பெற்றுத் திறம்பட நடாத்தியவர்கள். இவர்களால் திருவாரூர் தெற்குக் கோபுரம் திருப்பணி தொடங்கப்பெற்று 1897ல் முடிவுற்றது. இந்நிகழ்ச்சியைக் குறிக்கும் கல்வெட்டொன்று அக்கோபுரத்தி லுள்ளது.

22. பழனியப்பத் தம்பிரான்:— இவர்கள் ராஜாங்கக் கட்டளை விசாரணையிலிருந்தவர்கள். கட்டளைக் களஞ்சியம் கட்டினவர்கள். நிலபுலங்கள் பல இவர்களால் வாங்கப் பெற்றன.



26—6—33 ல்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
பட்டமேற்றபோது

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமும் திருக்கூட்டத்து அடியார்களும்

23. சிதம்பரநாதத் தம்பிரான்:— ராஜாங்கக் கட்டளை விசாரணையாக எழுந்தருளியிருந்து சில நிலங்கள் வாங்கிச் சேர்த்திருக்கின்றார்கள்.

24. சண்முக சுவாமிகள்:— ஆதீனத்தில் திருக்கூட்டத்துள் ஒருவராக இருந்து மகாவித்துவான் என்றபட்டமும் பெற்று விளங்கியவர்கள். சிதம்பரம் செந்தமிழ்ச்சங்க அக்கிராசனாதிபதியாக அமர்ந்து ஆங்காங்கு சமயச் சொற்பொழிவுகள் பல ஆற்றினார்கள். இவர்கள் இயற்றிய செய்யுள் நூல்களும், உரைநடை நூல்களும் பலவாம்.

25. சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகள்:— புலவர் திலகமாக விளங்கியவர். ஆதீனத்தில் வெளியிடும் பண்டார மும்மணிக்கோவை முதலிய சாத்திர நூல்களுக்கு குறிப்புரை எழுதுதல், ஏனைய நூல்களைப் பரிசோதித்தல் முதலாகிய தமிழ்ப்பணி யியற்றி இன்பநிலை யெய்தினர்.

26. ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசிசாமிநாதத் தம்பிரான் சுவாமிகள்:— 1930ஆம் பிப்ரவரிமீ முதல் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவராக எழுந்தருளி யிருக்கின்றவர்கள் இவர்களே. தருமை ஆதீன குருமூர்த்திகளிடத்தில் உபதேசம் பெற்றவர்கள். சமய முன்னேற்றத்திற்கும், மொழி முன்னேற்றத்திற்கும் இவர்கள் செய்துவரும் அறப்பணிகள் மிகப் பல. இது தமிழுலகம் அறிந்த உண்மைகளில் ஒன்று.

உ

குருபாதம்.

# கர்ண பரம்பரைச் செய்திகள்

குருஞானசம்பந்த சுவாமிகள் ஒரு திருக்கோவில்கட்டத் திருவுளங் கொண்டபோது எவ்விடத்தில் கட்டுவது என்ற எண்ணம் எழுந்தது. சொக்கநாதப் பெருமான் கனவிடை எழுந்தருளி "நான்கு மூலையிலும் வில்வமரமிருக்கும் இடமே ஏற்றது; அங்கு ஆலயம் அமைப்பாயாக" என்று அருளினர். அவ்வாறே அமைத்தார்கள்.

ஆதீனத்துத் திருக் கூட்டத்து அடியார்குழாங்களில் ஒருவர் பதினெருடுக்கத்தில் நிட்டை கூடியிருந்தார். அகக்கோயிலமைத்துக் கும்பாபிஷேகம் முதலியன செய்து நாட்பூசையும் விழாப்பூசையும் ஒழுங்காக நடத்தி வந்தார்கள். ஒருநாள் மனக்கோயிலில் எழுந்தருளிய பெருமானுக்கு அபிஷேக ஆராதனைகளை முடித்து அலங்காரத்துக்குத் தொடங்கினர்கள். மன அறையில் மாலைவகைகள், பதக்கங்கள், நாகாபரணங்கள் நிறையச் சேமித்தனர். ஒவ்வொன்ருக எடுத்து மனக்கோயிலில் மன்னிய மகேசனுக்குச் சாத்தினர்கள். வில்வமாலை சாத்தச் சாத்த, பலமுறையும் விழுந்துகொண்டே யிருந்தது. அதனல் முனிவர் மனச்சோர்வுற்ருர். சொக்கநாதப் பெருமானுக்குப் பூசை செய்துகொண்டிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ திருவம்பலதேசிக சுவாமிகள் அதனை உணராதுணர்ந்து ஒடுக்கத்திருந்த முனிவரை அழைப்பித்தனர். அருள்நோக்கம் பாலித்து, "சிரமாலையை முன்னர்ச் சாத்தி வில்வமாலையைப் பின்னர்ச் சாத்துக" எனப் பணித்தனர். முனிவர் வியப்பும் அச்சமுங் கொண்டனர். தாம் ஒடுக்கத்திலிருந்து அகக்கோயில் கண்டதும், அபிஷேக ஆராதனை செய்ததும், ஆசாரிய அனுக்கிரகத்தினலேயே என்பதை உணர்த்திய பேரருளுக்கு வழிபாடாற்றி ஒடுக்கத்துச்

சென்று சமாதிகூடி குருவாணைப்படி மாலைகளை அணிந்து எல்லையற்ற களிப்புக்கடலில் ஆழ்ந்தனர். பின்னர் நிட்டை கலைந்து ஆசாரியார் திருமுன் விண்ணப்பித்து அனுக்கிரகம் பெற்று விளங்கினர்.

செம்போத்தொன்று ஏழுநாட்கள்வரை சொக்கநாதப்பெரு மானது சந்நிதானத்தைவிட்டு அகலாமலிருந்தது. ஞானசம்பந்த தேசிகர் அதன் பக்குவம் நோக்கி அருள் வழங்கி வீடளித்தார்.*

ஸ்ரீ-ல-ஸ்ரீ திருவம்பல தேசிகர் காலத்து, மடாலயத்துள்ள அடியார்கள் சாஸ்திர ஆராய்ச்சி விஷயமாகத் தம்முள் வாதிட்டனர். வாதும் முற்றியது. அப்பொழுது ஸ்ரீ சொக்க நாதப் பெருமான் அடியார் உருவொடு தோன்றினர். அவ ருடைய திருமேனி ஒளியைக்கண்ட அடியார்கள் அவரிடமே விண்ணப்பிக்கலா மென்று எண்ணங்கொள்ள, வந்த பெருமான் "திருவம்பலன் தான் துணை"* என்று அருளி மறைந்தனர். உடனே முனிவர் குழாங்கள் குருமூர்த்திகளது மேன்மையைத் தற்போது நினைவிற்குக் கொண்டுவராது மறந்த பிழையினை உணர்த்தியருள, சொக்கலிங்கப் பெருமானே எளி வந்த கருணைக்குப் பரவசமுற்று தேசிகரை அணுகி, 'பிழை பொறுத்தருள்க' எனத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர் கள். குருமூர்த்திகளும் திருவருளுணர்த்த நிகழ்ச்சியை உணர்ந்து அடியவர்கள் ஐயத்தை அகற்றியருளினர்.

அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் ஒருநாள் சொக்கநாதப் பெருமானுக்கு அபிஷேகம் முடித்து நிவேதனம் செய்தார்கள். அப்போது வஞ்ச நெஞ்சினன் ஒருவன் பசு வெண்ணை என்று சொல்லிக் குழைத்த சுண்ணாம்பைக் கொண்டுவந்து கொடுத்தான்.

---

* எழ்நா ளுன்சந்நிதிநின்று மகன்றிடாப்போத்தின தன்பைச்
சிந்தைகொண் ஞானசம்பந்தர் காணச்சிருள் செய்தனை * *

பணையுளமுனிவர் கலகங்கொள்போதிற் பகர்திருவம் பலவன்றான்
துணையெனச் சொல்லி மறைந்தனை தருமைச் சொக்கநாதப்பரசிவமே
—தருமைச் சொக்கநாதர்மாலை.

குருமூர்த்திகள் அதனையும் நிவேதித்தனர். அதனால் அத்துவித நிலையிலிருந்த ஆசாரிய மூர்த்திகளுக்கு வாய் வெந்துவிட்டது.* குருமூர்த்திகள் யோகசமாதியால் காரணம் உணர்ந்து இவ்வாறு செய்தவன் எவனோ என்று மனதில் சிறிது சிந்தித்தனர். வஞ்சகனுக்கு இரத்தபேதி கண்டது. குற்றம்படைத்த நெஞ்சினன் ஓடிவந்து குருமூர்த்திகள் திருவடிகளில் வீழ்ந்து, 'அடியேனைக் காத்தருள்க! காத்தருள்க!!' என்று கதறினன். கருணைக்கடலாகிய குருமூர்த்திகள் மந்திர நீற்றை அளித்து அவனை வாழவைத்தனர்.

வஞ்சிநாட்டரசன் மனத்தை தேசிகரின் ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெருமானுடைய திருவருள் விலாசம் முழுதுங் கவர்ந்தது. காணிக்கையாக "மஞ்சு" என்னும் ஆபரணத்தை அனுப்பினன். குருமூர்த்திகள் அரசன் அனுப்பிய உபகரணங்களால் மகாபிஷேகாதிகளைச் செய்து அவ்வாபரணத்தை அணிவித்தார்கள். பெருமான்* நாதச்சிலம்பை நன்கொலித்து 'ஏற்றருளினோம்' என்பதை உணர்த்தினர். குருமூர்த்திகள் சிலம்போசைகேட்டுப் பெருமகிழ் வெய்தினர்.

சிதம்பரநாத முனிவர் திருமேனியில் ஈடுபட விரும்பிய கணிகை ஒருத்தி தன் இல்லத்துக்கு எழுந்தருளவேண்டுமென விண்ணப்பித்தாள். முனிவர் 'அடியார்களுடைய அழைப்பு போன்றது இது' என்று எண்ணி, 'குருமூர்த்திகள் அனுமதி பெற்று வருவேன்' என்று உட்புகுந்தார்கள். குருமூர்த்திகளிடம்

---

*விழைவி லான்கரந்தபாலினி லெடுத்தவெண்ணெ யென்றொருவனாற் சுட்டுக்
குழைவினிற்றந்த சாந்தினை நினக்குக் கோலமார்சிவே தனஞ்செய்த
வழகிய திருச்சிற்றம்பலவன் வாயன்று வெந்திட்ட தென்னுலகர்
சுழலல் கொண்டறியச் செய்தனை தருமைச் சொக்கநாதப்பரசிவமே

*வஞ்சி மன்னவனு நின்னிடங் கொண்டமகிழ்வினா லனுப்பினதான
மஞ்செனு மாரந்தன்னையும் வாங்கிமகிழ்ந் தனக்காட்டிய பின்னர்
பஞ்சரக் கிளியோ டினைத்துதித்தணியப் பகர்சிலம்பொலி முனமேற்ற
தஞ் சொலிக்காட்டி நிறவினை தருமைச் சொக்கநாதப்பரசிவமே
—தருமைச் சொக்கநாதர்மாலை.

விண்ணப்பித்தார்கள். குருமூர்த்திகள் திருவருளால் நிகழுயிருப் பதை திருவுள்ளத்தடைத்து அனுமதி தந்தார்கள். முனிவர் அவளில்லம் சென்று அமர்ந்தனர். அசையாவுள்ளத்து அருநிலை எய்தினர். அப்போது அவளது ஆடலும், பாடலும் அப்பரடி களுக்கு அரமாதர்கள் இயற்றியன போலாயின. இவருள்ளத்தை இசைக்கலை முதலியன கலைக்க ஆற்றலில்லாமையை உணர்ந்து அவள் உளந்தடுமாறி சுவாமிகள் அருகில் அணைந்தாள்; பெண்மை இழந்தாள். குற்றம் பொருத்தருள வேண்டுமென்று குறைபல சொல்லி இரந்தும் பேருநிலையிலிருந்து முனிவர் அச்சொற்களை ஏற்றுக்கொள்ளாமையினல் ஞானதேசிகரிடம் ஓடிவந்து நடந்தவற்றைக் கூறினள். ஞானதேசிகர் கருணைப் பார்வை கடைக்கணிக்க, தூய்மையுற்றுக் கொண்டகருத்துமாறி 'உபதேசஞானம் உதவுக' என்று பணிந்தாள். தேசிகர் ஞானேபதேசம் செய்யக்கேட்டு, சிந்தித்து, தெளிந்து, பேரின்ப நிலை எய்தினள்.

முத்துக்குமார தேசிக சுவாமிகள் அருளாட்சியின் பெரு மையை சிங்களத்து அரசனெருவன் கேள்வியுற்றான். சிறந்த கனி ஒன்றை அனுப்பினன். எந்த அரிய பொருளையும் சொக்கநாதப்பெருமானுக்கு நிவேதிப்பது வழக்கம். அப்படியே அன்றும் நிகழ்த்தினர். உடனே பெருமான் அருவத்திருமேனி யிலிருந்து அருளுரை பிறந்தது. "காரைக்காலம்மையார் கனி வோடு தந்த கனியாமிது"* என்பது அவ்வுரை.

ஒருநாள் மாலைக்காலம். கந்தப்பதேசிக சுவாமிகள் திரு நந்தவனத்தைப் பார்வையிடச் சென்றார்கள்.* எல்லாம் வல்ல

---

*சிங்களத்தரச னனுப்பிய கனியைச் சீரொடுநிவேதனஞ்செய்த
மங்கள முத்துக்குமாரனுக் கிரவின்மை யமர்காரைக்காலம்மை
யிங்கிதத்தோடுந்தந் ததாமென்றே யியம்பினை * *

* மதுரையினுரைத்த கடவுணியென்பது தெரிய
மாலையில் வாழ்கந்தப்பதேசிகனு மகிழ்ந்திட வளர்மகிமாவைச்
சோலையி னடுவிற் சொற்றனை * *

—தருமைச் சொக்கநாதர்மாலை.

சித்தராகிய சொக்கநாதப் பெருமான் அடியார் வடிவுகொண்டு எழுந்தருளினர். மகிமா என்னும் சித்தியை உபதேசித்து மறைந்தனர். தேசிகமூர்த்திகள் பெருமான் எளி வந்த கருணையை நினைந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப, நாக்குழற, உரைதடுமாற, ஆனந்தக்கண்ணீர் சொரிய வணங்கித் துதித்தனர்.

சிவராத்திரியில் அடியார் ஒருவர், ‘சொக்கநாதப் பெருமானுக்கு அபிஷேகிக்க இளநீர் இல்லையே, என் செய்வேன்!’ என்று செயலற்றுச் சிந்தை நொந்தனர். திருவருள் *தென்னை ஒன்றை வளையச்செய்து இளநீர் அடியார் கையிலிருக்கச் செய்தது. அடியார் இளநீரைக் கொண்டுவந்து அபிஷேகித்து மகிழ்ந்தார். மற்றொருநாள் சிவபூசையிலமர்ந்து நியாஸங்கள் புரிந்து பூஜைக்கு உபகரணங்களைத் தேடத் தொடங்கியபோது அவை சுவர்மேலிருப்பதைக் கண்டு, ‘சிவபூசைக்கு உட்கார்ந்த நாம் எழுந்திருத்தல் ஆகாதே? பூசைக்கைங்கிரியம் புரியச்சிற்றாள் இங்கு இல்லையே. எங்குச் சென்றனன்?’ என்ற எண்ணத்தை அடைய, அந்தச் சடப்பொருள்களும் பெருமானருளால் கீழிறங்கி அடியார் கரத்தை அடைந்தன.* அடியார் இவ்வாறு பெருமானருள் கண்கூடாகக் காணக்கிடைத்த பெருந்தவத்திற்கு வியந்து தோத்தரித்துப் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்தனர்.

இறையன்பு நிறைவுடைய மங்கை ஒருத்தி கொல்லையில் காய்த்த வளமான பூசணிக்காய் ஒன்றை ‘இது பெருமானுக்காகுக’* என்று விட்டுவைத்தாள். இந்நிகழ்ச்சியறியாத அவள்

---

*படியிலாச் சிவராத்திரி யபிடேகம் பண்ணுதற் கில்லையெனத் தென்னை
யடியினி னின்றமுநிவ ரன்களிப்பி லாழ்ந்திட வளைந்த வன்காத்தின்
முடியினைக் கொடுக்கப் பறித்தனக்காட்டி மொழித்திடச் செய்தனை

*மூடுத லில்லாச் சுவரின்மேல் வைத்த முதிர்தலை யுற்றிடா விளநீர்
தேடுறு கன்னல் சந்தனக் கட்டை திரவிய மிவை யெடுத்தற்கு
ஈடுறச்சிறுவ னிலையென வதுவு நடந்திடச் செய்தனை * *

*முழவெனத் தடித்து நீறுதோய்காயை முன்னுமின் றனக்கென மனையின்
கிழவியால் விடுக்க வஃதறியாத கிழவனு லெடுத் தரிந்திடலும்
பழமறை சொலுமோ ரிலிங்க முள்ளிருக்கப் பார்த்துடனஞ்சினின் முன்னர்
தழவிடச் செய்ய வருளினை * *

—தருமைச் சொக்கநாதர்மாலை.

கணவன் பறித்து அரிந்தான். அதனுள் ஓர் சிவலிங்கம் இருந்தது. அச்சமும் வியப்பும் அடைந்தான். மனைவி தன்வேண்டுதலை அறிவிக்க, இது சொக்கநாதப்பெருமான் திருவிளையாடலே என்று தேறி, திருமுன் சென்று வணங்கிச் சிறப்புக்கள் பல செய்தான்.

ஒருவன் சொக்கநாதப்பெருமானது நிலத்தில் விளைந்திருந்த நெற்கதிர்களை காவலர் அறியாமல் அறுத்து வீட்டுக்குக் கொண்டு போனான். காவலர் அறியாவிட்டாலும், உரியவர் உணராமலிருப்பரோ? மனைவி கதிரைப் பிசையக் கையைக் கொண்டுபோனாள். சொக்கநாதரது திருமுடி நாகம் கதிர்முடியில் காணப்பட்டது; நடுங்கினாள். தன் கணவனுக்கு அறிவித்தாள்.

மற்றொருவன் பெருமானுக்குரிய நெற்கோட்டை ஒன்றை இரவில் களவாடினான். கொண்டுவந்த மகிழ்ச்சியோடு மனைவியையும் கூட வைத்துக்கொண்டு கோட்டையை அவிழ்த்துக் கொட்டினான். அது ஒரே கருமணலாகச் சொரிந்தது.*

பணியாளன் ஒருவன் திருமேனிக்குக் காப்பணியச் சந்தனம் அரைக்குங்கால் மணலையும் சேர்த்து அரைத்தான். கைகண்ட பலனாக அவன் உடம்பில் மணல் போன்ற சொறி வந்துவிட்டது. பெருமானுக்கு நிவேதிக்க வைத்த கனியை எடுத்து ஒருவன் உண்டிட, அதனால் அவன் பெருவயிறு கொண்டு வருந்தினான். பாலை நீருடன் கலந்து பெருமானுக்கு அபிஷேகிக்கக் கொடுத்த ஒருவன், தன் மகன் பெருநோய்பற்ற வருந்தினான். மூன்று பசுக்களைப் பிராயச்சித்தமாகத் தந்து பிழைபொறுத் தருள வேண்டினான். பெருமான் கருணையால் மகனது பெருநோய் தீர்ந்தது.

---

*வாவியினனைத்த கோட்டையிலொன்றை மறைத்திலிற்கொண்டு போய்ச்சேர்த்துக்
கூவின்மனையை யருகினிறுத்திக் கொட்டுபோத தனிடையிருந்து
பாவிகண்மனம்போற் கருமணல்வீழப் பண்ணினை
—தருமைச் சொக்காதர்மாலை.

நெய் திருடிய ஒருவன் அந்தக் குறையை எண்ணையால் நிறைவிக்க ஊமையானான். மனைவி, சொக்கநாதருக்குச் செய்த அபசாரத்தால் நேர்ந்தது என்றெண்ணி, திருமுன்சென்று அவனையும் வணங்குவித்துத் தானும் பிரார்த்தித்தாள். இறையருளால் ஊமை நீங்கிய கணவனோடு உரையாடிச் சென்றாள்.

வயிற்று வலியால் மிகுந்த துன்புற்ற ஒருவன் தன்னுடைய பழவினைப்பயனால் ஒருநாள் சொக்கநாதப்பெருமானை வணங்கி அன்றிரவு சந்நிதானத்தில் படுத்திருந்து நோய் நீங்கப்பெற்றான்.

காவிரியில் ஒருநாள் பெருவெள்ளம் வந்தது. ஊருக்குள் புகுந்தது. மக்கள் வருந்தினர். எப்போதும் புகலிடம் மடாலயமே என்றெண்ணி உட்புகுந்தனர். குருமூர்த்திகள் மனங்கனிந்து சொக்கநாதருக்கு சாத்திய இண்டைமாலையிலிருந்து ஒரு வில்வத்தை எடுத்து ஐந்தெழுத்தை ஓதி ஆற்றுவெள்ளத்திலிட்டார்கள்.* வெள்ளம் தணிந்தது.

அடியார்கள் காவிரியில் ஸ்நானம் செய்து திருமடத்தில் எழுந்தருளி ஐந்தெழுத்தை ஓதும் அழகைக்கண்ட கிளியொன்று, 'அடியேனும் இவ்வருளை அடையக்கூடுமோ' என்று எண்ணிற்று. ஒருநாள் ஞானதேசிகர் திருவடித் தாமரைகளில் விழுந்து வணக்கம் தெரிவித்தது. தேசிகர் சட்சுதீக்கை செய்து ஐந்தெழுத்தை உபதேசம் செய்து ஆட்கொண்டார்.*

மகாசந்நிதானத்துடன் மாறுபட்ட மனதுடைய சில திருக்கூட்டத்து அடியார்கள் ஸ்ரீ சொக்கநாதப் பெருமானை இரவில் எடுத்துச்செல்ல முற்பட்டனர். அப்போது பெருமான் குதிரை

---

*தட்குணப் பொன்னிநீரை யிவ்வில்வந்தடுக்குமென்று ரைத்தளித் ததனாற்
றட்கரமின்றி யமர்ந்தனை தருமைச் சொக்கநாதப் பரசிவமே

* பைங்கிளிக் கைந்தாம்வகையெழுத்துரைத் தனதடியிற்
றோய்ந்திடச் செய்து மாண்டனை * *

—தருமைச் சொக்கநாதர்மாலை.

வீராக எழுந்தருளி புளியம் விளாரால் அவ்வடியார்களை அடித்து விரட்டினர். மேலும் மகாசந்நிதானத்தினது கனவி லும் எழுந்தருளி அழுக்காறுகொண்ட அடியார்களது செயலை யும் அறிவுறுத்தருளினர். உடனே மகாசந்நிதானம் திடுக்கிட் டெழுந்து திருமஞ்சன முடித்து பூசைக்கு எழுந்தருளினர். பூசைமுடித்து அருட்பூதி வழங்கும்போது அடியார்களது முதுகில் விளாரினுல் ஏற்பட்டுள்ள தழும்பைக்கண்டனர். பரமனது அருள்விளையாடலை எண்ணி வியப்புற்றனர். விசேஷ வழிபாடு செய்தனர். அடியார்களும் குருமகாசந்நிதானத்தை வணங்கிப் பிழை பொறுத்தருள வேண்டினர். கருணைக்கடலாகிய குரு மூர்த்திகளும் அடியார்களுக்குத் திருநீறளித்தனர். இதனைக் குறிக்கும் சிற்பமொன்று ஸ்ரீ சொக்கநாதப் பெருமானது பூசை மடத்தில் காணப்படுகின்றது.

குருமகா சந்நிதானமவர்கள் ஸ்ரீமத் சொக்கநாதப் பெரு மானை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வேளூருக்கு யாத்திரை யாகப் புறப்பட்டார்கள். பெருமானைத் திருக்கூட்டத்து அடியார் கள் திருமுடியில் எழுந்தருளச் செய்வது வழக்கம். புறப்பட்ட காலை பெருமானை எழுந்தருளச் செய்வதற்கு அடியார் பலர் வேண்டுமே என்று குருமகாசந்நிதானம் திருவுள்ளத் தெண்ணி ஞர்கள். அக்குறிப்பறிந்த அடியவர் ஒருவர் 'இஃதென்ன பெருங்காரியம் யான் ஒருவனே வேளூர்வரை எழுந்தருளுவிப் பேன்' எனத் தருக்குடன் மொழிந்து பெருமானைத் தனது திருமுடியில் எழுந்தருளச் செய்துகொண்டு சிறிது தூரம் சென்ருர். பாதங்களில் கொப்புளங்கள் தோன்றின. மேற் செல்ல முடியவில்லை. தான் முன்னர்க்கூறிய தருக்கு மொழியை யுணர்ந்தார். பூசையை கூடவந்த அடியார் ஒருவர் முடிமீ தெழுந்தருளப் பண்ணிவிட்டு, குருமூர்த்திகளிடம் விண்ணப் பித்து வணங்கினர். அருட்பூதி பெற்று உய்ந்தார்.

மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் முத்தி நிலையை எய்திய ஞான்று அரசாங்கத்தார் பூசை மண்டபத்தைப் பூட்டிக் காவல்

புரிந்தனர். அன்று பகல் சொக்கநாதப் பெருமானுக்கும் பூசை நடைபெறவில்லை. நள்ளிரவில், மனிதர் நடமாடும் அரவமும், மணி ஓசையும், இன்னன பூஜா அங்கங்கள் பலவும் கேட்க, காவலர் திடுக்கிட்டு மேலதிகாரிகளிடம் தெரிவித்தனர். அதிகாரிகள் விடியலிலேயேவந்து திருக்காப்பு நீக்கிப்பார்க்க மூன்றுநாளைக்குமுன் திருமுன்னர் ஏற்றப்பட்ட திருவிளக்கு முன்னைவிட ஒளிவிட்டுக்கொண்டிருத்தலைக் கண்டார்கள். உடனே அன்றுமுதல் யாதொருதடையுமின்றிப் பூசை நடக்கும்படிச் செய்து சென்றூர்கள்.

உ

குருபாதம்

# பண்டார சாத்திரங்களும் அருணூல்களும்

## பண்டாரசாத்திரங்கள்

1. **சிவபோகசாரம்:—** இந்நூல் ஆதி குருமூர்த்திகளாகிய குருஞானசம்பந்தரால் அருளப்பெற்றது. அனுபவத்திற் கலந்து நின்று சிவானுபவம் பிறக்க இரண்டற அழுந்திய நிலையாகிய சிவபோகத்தினின்ற அனுபவ முதிர்ச்சியை ஆன்மாக்கள் உய்ய எடுத்தருளிச்செய்வது. வெண்பாவினால் ஆக்கப்பெற்றது. 139 பாடல்களையுடையது. அடிகள் வணக்கம், பெறுதற்கருமை, அறியும் பகுதி, உபதேசவிளக்கம், அனுபூதிநிலை, உபாயநிலை, பணியறுத்தல், துறவின் பகுதி, அறிவோர் புகழ்ச்சி, மடவோர் பழிப்பு, பொதுநிலை முதலிய பல பகுதியாக விளங்குவது. 'புசிப்போம் சிவபோகம்' என்பதும், 'சிவபோகம் விளையப்புணர் நெஞ்சே' என்பதுமாய பகுதிகள் இரண்டும் சிவபோகத்தின் இன்றியமையாச் சிறப்பும், சிவபோகம் சேர்ந்தார்க்குள்ள சிறப் பியல்பும் தெரிவிக்கப் பெறுகின்றன. 'ஆசான் திருவுளத்துதித்த பெருங்கருணையால் சீடனிடம் பெற்றதுபோல சீடனுளத்து ஆசான் புகுந்து ஆசான் தானேயாய அத்துவிதநிலை யடைந் தார்க்கன்றி சிவபோக நிலை சித்தியாது' என்று கூறுகின்ற சிறப்பு இன்புறத்தக்கது.

> "முத்திநிலை நிற்போர்க்குப்—பேருகப்
> பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
> ஓர் விருத்தப் பாதிபோதும்."

என்ற வெண்பா தத்துவங்கடந்து ஆணவம் கெட, வல்வினை நீறுக, முத்திநிலை நிற்பார்க்குப் பலநூல் அறிவு வேண்டாம்; சிவஞானசித்தியாரில் ஒரு விருத்தப்பாதியினுலேயே எண்ணியது எய்தக்கூடும் என்றபகுதி சிவஞானசித்தியாரின் பெருமையைப் புலப்படுத்தும் அனுபவத் திருவாக்கு.

இந்நூலுட் காணப்பெறும் பொதுநிலை என்றபகுதி எந்நிலையில் நிற்போர்க்கும் அவரவரறிவின் பரிபாக நிலைக்கேற்கப் பெரும்பொருள் தந்து மன அமைதியாக்கி நிற்கின்றது. எல்லாவற்றினும் முனைத்தெழும் மனத்தை, சீற்றங்கொள்ளும் மனத்தை, அடக்கி யாளும் தோட்டி போன்றது "பரபரக்கவேண்டாம் பலகாலுஞ் சொன்னேன் வரவரக் கண்டாராய் மனமே" என்ற பகுதி. அதன் பிற்பகுதி அடங்கிய யானைபோன்ற அகத்திற்குக் கொடுக்கும் வேலை. இங்ஙனமே பல பகுதிகள் படிப்பார் மனத்தைச் சொல்லிற் பிரித்துச் செயலிற் செலுத்தும் சிந்தனைப் பாக்கள். உபாயநிலையில் தானெல்லாமானேம் என்கின்ற அறிவும் முத்திக்கு இடையூறு எனக் கூறும் பகுதியும் அப்படியே.

2. சொக்கநாத வெண்பா:— இந்நூலும் குருஞான சம்பந்த ரருள்வாக்கு. 94 வெண்பாக்களையுடையது. ஆனல் திரு. S. வையாபுரிப் பிள்ளையவர்கள் வீட்டுப்பிரதியிலிருந்த பாடல்களையும் சேர்க்க நூற்றொன்றாகின்றது. பாடல்கள் எல்லாம் செம்பாகமாக, பொருட்குவியலாக, அனுபவத் திறவுகோலாக இருப்பது. இந்நூல் தமக்கு ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெருமானை முன்னிலைப்படுத்தி எழுப்பப்பெற்றது. பிறவி நோயின் இயல்புகளும், அவை நீங்கும் உபாயமும், அநுபூதி பிறக்கச் செய்யும் வகைகளும், பலவும் பேசப்படுகின்றன. இன்பசுக நாட்டை எய்துவார்க்கு மூன்று வெறுப்பு முறையே உண்டாகவேண்டும். அவை முதற்கண் உலகவெறுப்பு, அடுத்து உடல் வெறுப்பு, அடுத்து மலவெறுப்பு என்பன என்னும் பகுதிகள் மிகமிக இன்புறுத்துவன. "எரிசுடுவதல்லா லிரும்பு சுடுமோ" "கான்ற சோறுயுலகங் காணவில்லை" என்பன போன்றன எவ்வளவு சிறந்த உவமைகள். அதனல் உள்ளம் எய்தும் உண்மைநிலை எவ்வளவு? இத்தகைய பல இன்பங்களை ஒருசேர எய்துவிக்கும் தோத்திர சாத்திரநூல் இச்சொக்கநாத வெண்பா என்னும் அருணூலாகும்.

3. முத்திநிச்சயம்:— இதுவும் குருஞான சம்பந்தசுவாமிகளுடைய அனுபவ ஞானத்திருநூல். இது மிகமிக நுணுக்கமான

ஐயமகற்றவே எழுந்தது. 22 வெண்பாவாலானது. இந்த ஞானசாரியர்கள் காலத்திலோ அல்லது சிறிது முன்போ ஆன்மானந்த வாத முத்திநிலையும், சிவசமவாத முத்திநிலையும் மொழியுஞ் சமயிகள் பரவினர். அச்சமயத்துக்குத் தலைவராகவிருந்தவர் சிதம்பரம் குகைமடத்தைச் சேர்ந்த மறைஞான சம்பந்த தேசிகர் என்பார். அத்தகைய சமயம் முற்றின் இறையின்பமாகிய பரமானந்த நிலையறிய ஆன்மாக்கள் முயற்சியார்; உண்மை நிலையை உணர்த்துவது தம்மனோர் கடன் என்றுணர்ந்த இக்குருமூர்த்திகள் இந்நூலை அருளிச் செய்தனர். இதில் முதற்பாடல் குருவணக்கம் கூறுவது. இரண்டாம் பாடல் "எந்த முத்திநிலையினைச் சந்தான சமயாசாரியர்கள் கூறினரோ அதனையேயாம் முத்தியென்போம்" எனத்தாம் கூறும் முத்திநிச்சயம் பிரபல சுருதிப்பிரமாணங்களோடு கூடியது என விளக்குவது. மூன்று முதல் 20 பாட்டு முடிய உள்ள வெண்பாவின் ஒருபகுதி ஆன்மானந்தவாதிகளின் பலதிறப்பட்ட கொள்கைகளும், ஒருபகுதி அவர் ஏற்கும் பிரமாணங்களோடு கூடிய மறுப்புரையுமாகச் செல்கின்றது. 21-ம் செய்யுள் சிவசமவாதியை வெளிப்படையாக மறுக்கின்றது. 22-ம் பாடல் இங்ஙனம் உண்மை விளக்கிச் சித்தாந்த முத்தி இன்னதென எளிய சொல்லமைப்பாற் பல ஆகமங்களிற் சென்று தினைத்தெடுக்க வேண்டிய மறைக்கருத்துக்களை மாண்புற எடுத்துக்காட்டுகின்றது. இவற்றில் சிந்திப்பார் மனந் திளைக்கும். ஆன்மானந்தவாதிகளின் கொள்கைகளும், இவர்கள் கூறும் சமாதானமும், சித்தாந்த முத்தியின் தன்மையும் இந்நூலுரைகளைப் பற்றிச் சிந்திக்கின்றபோது தெரிவித்தற்குரியன.

4. **சோடச கலாப் பிராஸாத ஷட்கம்:—** இது குருமுகமாகக் கேட்டு ஒவ்வொரு நிலையாகப் பயிலுதற்குரிய முறையினைக் கூறுவது. ஆறு செய்யுள்களாலானது. பதினறுசீர்க்கழிநெடிலடி லாசிரிய விருத்தமாய் அமைந்தது. பிராஸாதத்தின் பெருமை முற்றும் ஆறு செய்யுட்களில் அடக்கிச் சொல்வது. வடமொழியில் பிராஸாத ஷட்சுலோகி என்னும் நூலின் மொழிபெயர்ப்பாயமைந்தது. இந்நூலுள் செய்யுள் ஏழு இருப்பினும் முதல்

ஆறு, பிராஸாத மந்திரங் கூறுவதாகவும், ஏழாவது மாத்திரை சூனிய மட்டுங் கூறுவதாகவும் உள்ளதாதலால் ஷட்சுலோகி யாதல் ஏலுமாதல் அறியக்கூடும். பிராஸாதம் என்பது சிவ ஞான சித்தியாகிய மோட்சத்தைத் தருவது என்னும் பொருள் படும். இந்நூல் ஐவகைப் பிராஸாதங்களுள் சோடச கலா பிரா ஸாதமாகிய இது முன்னர்க் கேட்டுப்பயின்று வியோமரூபிணி முதலிய நாற்பிராஸாதங்களை அடக்குமுறை அறிந்து அடக்கி துவாதஸ பிராஸாதங்கொள்ளல் சிறப்புடைத்தென்று தெளி தல் வேண்டுமாதலின் இது அருளிச் செய்யப்பெற்றது. இந்த பிராஸாதக் கிரமத்தை பலர் தனித்தோ சேர்ந்தோ கிரமமாய்ப் பயின்று வந்த இடமே முன்னர்ச் சரித்திரத்து விளக்கப்பெற்ற பதினுறேடுக்கம் என்பது. இந்நூலுள் 6 கலைகளும், அவற்றின் தன்மையும், தானமும், அளவு, வடிவு, தேவதைகுணம், மலநிலை முதலியனவும் விளக்கப் பெறுகின்றன. ஆகவே இந்நூல் சுருங் கிய அளவினதாயினும் பெருகிய நிலையான இன்பத்தை யளிக் கும் பெற்றியது.

5. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்:— இந்நூல் நிலை மண்டில ஆசிரியப்பாவாலானது. மூன்று பாடல்களையுடையது. பாச தசகாரியம், ஆன்ம தசகாரியம், சிவ தசகாரியம் என முத்திறப்பட்ட தசகாரியங்களை யுணர்த்துவது. இந்நூல் பாச தசகாரியத்தைப் பத்துவகையானும், பசு தசகாரியத்தைப் பதி னறு வகையானும், பதி தசகாரியத்தைப் பதினெரு வகையானும் அறிவிக்கின்றது. மற்ற தசகாரியங்களைக் காட்டிலும் இந் நூலுக்குள்ள ஏற்றம் பிறநூல்கள் உண்மை என்றுரைப்பதை ரூபம் என்றும், சுத்தியென்றுரைப்பன இந்நூல் சிவபோகம் சிவயோகம் என்றும் உரைப்பதாகும்.

6. சொக்கநாதக் கலித்துறை:— இது தோத்திரநூல். பதினெரு கலித்துறைப் பாடல்களையுடையது. முதற்பாடல் சொக்கநாதப் பெருமான் பொற்றாமரையிலிருந்து தமது திருக் கரத்தில் எழுந்தருளியதையும் அதன்பின் சொக்கநாதப் பெரு

மான் தமக்குத் தரவேண்டிய இன்ப நிலையினையும் எடுத்தியம்பு கின்றது. ஒவ்வொரு கலித்துறையிலும் ஆன்ம இயல்பை எடுத்துக்கூறி, "சொக்கநாத! நீ பூரணவாரியுள்ளே நண்ணும் படிச்செய், பாடும்படிச்செய், நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே யாடும்படிச்செய், மலமைந்தும் விடும்படிச்செய்" என வேண்டு கின்றார்கள். இந்நூலுள் "ஏறாத விண்ணப்பம் கூறுகின்றே னஃதேதெனிற்" என்று தொடங்கி அவர்கள் சொக்கநாதப் பெரு மான் திருச்செவியில் ஏற்பித்துப்பெற்ற வரந்தான் இற்றைக் கும் நாம் எல்லாம் உய்யச் சொக்கலிங்கத் திருவுருவிடை இருந்துஅருள் வழங்கி நிற்கும் அன்பாற்றலாகும்.

7. **பண்டாரக் கலித்துறை:—** இந்நூல் கமலை ஞானப்பிர காசர் மேற் பாடப்பெற்றது. 36 பாடல்களையுடையது. ஒவ் வொரு பாடலும் ஆசாரியர் தம்மையாட்கொண்ட அருமைப் பாட்டினை அறிவிக்கின்றது. உலகமக்களை விளித்துக்கூறும் உண்மை ஒன்று எல்லாருள்ளத்தையும் இனிக்கவைப்பது. அது "காரே சுமந்த" என்ற எட்டாம் பாடலாகும். அதில் உடல் வருந்தத் தவம் செய்யவேண்டாம்; அதனாற் பயனில்லை. யாராயிருந்தாலும் ஆட்கொள்ளும் பெருங்கருணையாளனாகிய ஞானப்பிரகாசனுக்கு அடியார்கள் என்று பேர்படைத்தாற் போதும். பயனே! பிறவி நீங்கும் என்கின்ற பொருள்கள் ஆயுந்தோறும் அளவிலா அறிவின்பம் ஆக்குவன. "தெவ்வுளி யுரைக்கும் பதி பசு பாசத்தின் கேள்விகளே" என்னும் அத்தகைய ஆற்றல் படைத்தது. இங்ஙனமே ஒவ்வொரு பாட லும் படிக்கக் கேட்கப் பயனுகர இன்பந்தருவன. இந்நூல் ஞானப்பிரகாசமாலை எனவும் பெயர்பெறும்.

8. **நவரத்ன மாலை:—** இது கமலை ஞானப்பிரகாசர் சிவாத் துவிதநிலை யெய்தியபோது கூறியது. ஒன்பது பாடல்களானது. கட்டளைக் கலித்துறையா னமைந்தது. இந்நூலில் சொக்கலிங் கேசர் மதுரையில் ஆணைதந்ததும் ஆரூர் வந்து அருளுபதேசம் பெற்றதும் மூன்றும் செய்யுளில் மொழியப் பெற்றுள்ளது.

குருவாரந்தோறும் தம்மைக்காண அனுமதி தந்ததை விளக்கும் பாடல்,

"குருவாரந் தோறும் வந்துனைப் போற்றவும் கூறியசொற்
கருளேநின் காயத்தை நீக்கினையே அடியேன் றனக்கு
ஒருவா சகமின்றி யுன்னைப் பிரிவ துனக்கழகோ
திருவா சகமுறை ஞானப்பிர காச சிகாமணியே."

என்னும் அம்மாலையின் செய்யுளாகும். இவ்வொன்பது செய்யுளுமே குருதேவரிடத்து ஒவ்வொருவரும் கொள்ளவேண்டிய அன்பின் அளவை வலியுறுப்பதாகும்; பெரியோர்கள் அனுபவம் பின்வருபவரை அவ்வழி நிறுத்தும் பெருந்துணையாகலான்.

9. வருணாச்சிரம சந்திரிகை:— இது ஏழாவது குருமூர்த்தியாகிய திருவம்பல தேசிகரால் அருளிச் செய்யப்பெற்றது. தஞ்சை அரசனுக்கு எழுந்த ஐயம் நீக்க ஆக்கப்பெற்றது. இந்நூலில் நான்காம் வருணத்தார்க்கும் சந்நியாசாசிரமம் உண்டு என்பதைச் சுப்ரபேதம், காமிகம், அஜிதம், காலோத்தரம் முதலான ஆகம வசனங்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்ற வடமொழி நூல். குருத்துவம் நான்கு வருணத்தார்க்கும் இல்லறந் துறவறமாகிய இருவகை நிலையிலும் உண்டு என்பதைப் பிரபலப் பிரமாணங்காட்டி நிறுவுகின்றது.

10. சமாதிலிங்கப் பிரதிட்டாவிதி:— இதுவும் ஏழாவது குருமூர்த்திகளால் அருளிச் செய்யப்பெற்றது. தமிழ்வாக்கு. 220 செய்யுட்களைக் கொண்டது. இதில் சமாதியிற் சிவலிங்கம் பிரதிட்டை செய்தற்குரிய விதியும், அம்மை, பரிவாரங்கள் அமைக்க வேண்டிய முறைகளும், கொடிமரம் பலிபீடம் இவற்றின் அமைதியும், நாட்பூசை, பெருவிழா நடத்தும் முறைகளும், நடத்துவோர் எய்தும் பயனும் நன்கு விளக்கப் பெற்றுள்ளன.

11. சித்தாந்த நிச்சயம்:— திருநாவுக்கரசு தேசிகர் அருளிச் செய்தது. கட்டளைக் கலித்துறையாலாயது. 97 பாக்களை

யுடையது. இந்நூல் குருமுகமாகக் கேட்ட கருத்துக்களைக் கொண்டு ஆக்கப்பெற்றதென "சித்தாந்த மீதெனப் பாரில் வந்து தருமையமழகிய சிற்றம்பலகுரு சாற்றினனே" என்னும் செய்யுட்பகுதி விளக்கி நிற்கின்றது. ஆயின் பாடபேதமாகிய செய்யுள் "தருமையுடைய சித்தாந்த மீதெனின் அருளுருவாம் தருமையி னவுக்கரசு சம்பந்தனும் சாற்றினனே" என்னும் பகுதி ஆக்கியோன் பெயரையே அறிவித்து நிற்கின்றது.

இந்நூல் ஆணவத்தின் மூவகை நிலைகளையும் மொழிகின்றது. ஆணவமாகிய மலங்களின் உண்மையையும், உருவத்தையும், ஆணவம் ஆன்மாக்களையும் வைத்துத் தன்னையுங் காட்டாத இருட்டன்மையையும் விளக்கிச் செல்கின்றது. சிறப்பாக 99-ம் பாடல் சீவன் முத்தர் நிலையும் அவர்காணும் பொருளும் கூறுகின்றது.

### சிவஞானதேசிகர் அருளிச்செய்தவை

12. **செல்வ முத்துக்குமர சுவாமி திருவருட்பா:—** இது மெள்ளப் புகுந்து உள்ளம் உருக்கும் பத்துப் பாடல்களையுடையது. இதில் முருகன் எழுந்தருளியுள்ள இடங்களாக இறைவன் சடாடவி முதல் திருச்செந்தூர் இறுதியான பல தலங்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன. முருகன் 12 செவிகளினுடைய தொழிற்பாடு தோத்தரிக்கப் பெற்றுள்ளன. தன் கரணமெல்லாம் முருகன் கரணங்களாக ஆகிய அடியார்களுடைய பேறு அருள வேண்டுமென்று வேண்டுகிறது முக்கட் குருக்கள் குருவே என்பது.

13. **ஆபதுத் தாரண மாலை:—** இது கட்டளைக்கலித்துறையால் ஆகிய நூல். 30 பாடல்களையுடையது. சீகாழியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சட்டைநாத சுவாமியின்மேல் பாடப்பெற்றது. ஆபதுத்தாரணரென்பது ஆபத்துக்களிலிருந்து எடுப்பவர் என்னும் பொருளைத்தரும் ஸ்ரீ சட்டைநாதர் திருநாமங்களிலொன்று. நாள்தோறும் பாராயணம் செய்யும் நூல்களுள்

ஒன்று. பச்சை சட்டையனே என்பது நரசிங்கத்தில் தோலைப் போர்த்து சட்டைநாதரான வரலாற்றைக் குறிக்கும் பகுதி. இதிற் கேட்கப்படும் வரங்கள் காமியமும், நிஷ்காமியமுமாக அமைந்துள்ளன. இதனைப் பாராயணம் செய்வார்க்குப் பூதப் பிசாசங்களாலும், வறுமையாலும், நோயாலும் நேரும் துன் பங்கள் நீங்குமென்ற நம்புக்கை மிகவும் உண்டு.

14. சிதம்பரநாதர் பதிகம்:— இந்நூலிற்கு சிதம்பர நடராஜ திருவருட்பா என்றும் மறுநாமம் உண்டு. நடராஜப்பெருமா னுடைய நடனச் சிறப்பும், ஐந்தொழில் ஆக்கும் திறமும், விளக்கப் பெற்றுள்ளன. நடராஜப்பெருமானுகிய கதிருதிக்கப் பரசமயர் கண்கள் இருண்டன. சைவசித்தாந்திகள் கண்கள் மலர்ந்தன. இருளகன்றது. மனமலர் மலர்ந்தது என்கின்ற அழகிய உருவகம் 3-ம் பாட்டிலமைந்துள்ளது. பவப்பசியால் வாடிய மனவண்டு சரணகமலத் தேனையுண்டு தேக்கிடுவதெந்நாள்? என்று ஏமாந்திருக்கும் எளிமையைக் காட்டும் பாடல் பண்பட்ட மனத்தை நையவைக்கும் அருஞ்செய்யுளாகும். இதுபோலவே இச்சிறுநூல் சாத்திரக்கருத்துக்கள் அமைந்த சாத்திர தோத் திர நூல்.

15. தட்சிணாமூர்த்தி திருவருட்பா:— இந்நூல் பத்து ஆசிரியத் திருவிருத்தங்களால் ஆனது. முதற்பாடல் தக்ஷிணா மூர்த்திப் பெருமானின் முடிமுதல் அடிகாறும் படிப்பார் மனத்து தியான மூர்த்தியாகத் திகழவைக்கிறது. குருமூர்த் தியை ஞானபானுவாக, சந்திரோதயமாக, பெரிய செல்வமாக, தேவாமுதத்தைக் கைக்கவைக்கும் பேரமுதமாகப் பேசுகிறது. ஒவ்வொருவகையிற் றாகமுற்றோர் அந்தந்தப் பொருள்களைக் கொண்டு தாகந்தணிவார். பிரபஞ்ச வெப்பந்தணிய வேண்டின் குருவருணோக்கம் ஒன்றாலன்றி முடியாதென்று மொழிகின்றது.

16. அசபா நடனப்பதிகம்:— சிவஞான தேசிகர் அருளிச் செய்தன. நிறைசெல்வத் தியாகேசப் பெருமான் திருவருட்

கடலிற்றிளைத்துத் தரிசித்து நின்றபோது இந்நூல் பாடப் பெற்றது. ஆசிரிய விருத்தத்தாலாயது. பத்துப் பாடல்களை யுடையது. 9-ம் பாடல் யாக்கையின் இழிதகைமையை இயம்பு கின்றது. 'நீ நானுக இருக்கும் உயரிய நிலேயை யருளுக' என்று வேண்டுகின்றது.

17. துண்டிராஜ கணபதி திருவருட்பா:— பத்து ஆசிரிய விருத்தத்தாலாகியது. முதற்றிருப்பாடல் தியானத்திற்கேற்ற முறையில் திருவுருவைச் சித்திரிக்கிறது. மூன்றும்பாடல் இறை வனது விசுவரூபத்தை விளக்கி நிற்கின்றது. ஐந்தாம் பாடல் தேவர் முதலிய பதினெண்கணங்களுக்கும் பதியாயிருத்தலேத் தெளிவிக்கிறது.

18. விசுவநாதர் திருவருட்பா:— இதுவும் எவ்வகையிலும் முன்னேயதைப் போன்றதே. ஸ்ரீ காசி விசுவேசருடைய கருணேத் திறங்கள் பலவற்றையுங் காட்டுவது. கல்லில் நாருரித்தல், உயிரை வாழைக்கனியாக்குதல் முதலியன போன்ற பழமொழி கள் ஆங்காங்கு அமைந்து மிளிர்கின்றன. காசியின் பெரு மையைத் திருக்கயிலாயத்துத் திருவோலக்க மண்டபத்துக் கூடி யிருக்கின்ற உருத்திர கணத்தார் தமக்குள் பேசிக்கொள்வ தாக அமைந்துள்ளது.

19. அன்னபூரணி திருவருட்பா:— அன்னபூரணி அன்னே யினது திருக்கரத்து அன்னமலே வளர்க்கும் பொற்பாத்திர மிருப்பது சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது. அம்மையின் நவந்தருபேதம் அறிவிக்கின்றது. ஒருபாடல் பிறவிக்கடலில் உடலென்னும் ஓட்டைப் படகின்மேல் ஏறிநிற்கும் உயிருக்குப் பராசக்தியின் திருவருட்காற்று இல்லேயானுல் நோய்ச் சுழலில் அகப்பட்டுத் திசைதப்பிக் கவலே கொள்ளும் நிலேயேற்படும்; அவ்வாறின்றிக் காக்கவேண்டுமென்ற கருத்துப் பொதியப் பெற் றுள்ளது. ஞானசம்பந்தருக்குத் திருமுலேப்பாலளித்ததும்,

பைஞ்ஞீலியில் நாவுக்கரசருக்கு அன்னம் அளித்ததும், சுந்தரருக்குக் குருகாவூரில் கட்டுச்சோறளித்ததுமாகிய வரலாறுகள் விளக்கப் பெறுகின்றன.

20. கேதாரநாதர் திருவருட்பா:— முதற்பாடல் இறைவனுடைய உருவ அமைப்பை உரைக்கின்றது. மற்றும் திருவருள் ஒன்றே அதனதன் தன்மைக்கேற்ப ஆட்டிவைக்கின்றது என்னும் பொருள் "சித்தினுக்கறிவும் சடங்களுக் கசைவும் திருவருள் கொடுக்கும்" என்பன போன்ற பகுதிகள் அறிவித்து நிற்கின்றன. இனி ஓரிடத்து சம்பந்தனெனும் திருநாமம் பந்தர் என வழங்குதல் அரும் வழக்கினுளொன்று. இறைவன் வசிட்டமுனி என்னும் சிவயோகிக்காகத் திருக்கேதாரத்துத் திகழ்வதைத் தெரிவிக்கின்றது.

21. கேதார கௌரியம்மை திருவருட்பா:— இதுவும் அருட்பா பத்தனுள் ஒன்று. உலகிலுள்ள எல்லாச் செல்வங்களும் உமையம்மை அடியவரின் செல்வத்துக்கு அணுவளவும் ஒவ்வாதன வென்றும், "ஆருமாதார மிலர் கேதாரமே" என்று சொல்லில் கௌரியம்மையின் அருள்பெற் றுய்யலாமென்றும், ஸ்ரீகாசியில் நிகழும் பல்வகையான ஒலிகளுள் தொண்டர் அரகர வென்னுமொலியே சிறப்புற்றதெனவுங் கூறுகின்றது.

22. ஸ்ரீ விருத்தகாளேசுவரர் திருவருட்பா:— இது கலி விருத்தத்தாலாகியது. பத்துப் பாடல்களிலும் நோய் தீர்க்க வேண்டுமென்றும் அபயமளிக்க வேண்டுமென்றும் வேண்டுகிறது. நீர் என்னும் பொருள்தரும் பாணி என்றசொல் 8ம் பாடலில் பெய்யப் பெற்றுள்ளது. இறைவன் திருவடிக் கமலங்களை மனம் சென்று ஒன்றுதலுக்கு மேட்டுத் தண்ணீர் பள்ளத்திற் பாய்தலை ஒப்பிட்டிருக்கிறது. இறுதியாக இவர் வேண்டும் வரம் "பாலாழியாகிப் பர வெளியாய் ஒன்றாகும் நாலாம் பதத்தில் எனைநாட்டி அஞ்சலஞ்ச லென்பாய்" என்பது.

23. ஸ்ரீகாசி காலபைரவர் திருவருட்பா:— இது ஆசிரிய விருத்தம் பத்துக்கொண்டது. முதற்பாடல் பைரவர் திருவருள் அமைப்பினைச் சிந்தையுறச் செய்யும். 3ம் பாடல் பைரவருடைய பல அவசர பேதங்களை அறிவிப்பது. பைரவர் பிரமன் சிரத்தைக் கொய்தது குருநிந்தை செய்வோர் பயந்து உய்வதற் கெனவும், இயமனை உதைத்தது இலிங்க நிந்தை செய்பவர் பயந்து உய்வதற்காக எனவும், நரசிங்க உரி போர்த்தியது சங்கமத் துரோகிகள் பயந்து உய்வதற்காக வெனவுங் காரணம் கூறப்பட்டுள்ளது.

24. கதிர்காம வேலவர் திருவருட்பா:— இதுவும் முன்னை யது போன்றதே. முதல் 2ம் பாடல்கள் முருகன் வீரத்தையும் அருளையும் குறிப்பன. 3ம் பாடல் முருகனை ஆறு குருக்களாகச் சொல்வி யின்புறுகின்றது. 4ம் பாடல் வேலையும், 5ம் பாடல் மயிலையும், 6ம் பாடல் கோழியையும் விளக்கி நிற்கின்றது. 7ம் பாடலில் "யாருக்கு வந்த விருந்தோ" "ஊருக்கு வந்தவள் ஒருத்தி பிள்ளைக்குப் பால் கொடுப்பளோ" என்ற பழமொழி கள் அமையப் பெற்றுள்ளன. 9ம் பாடலில் அடியார் பெருமை அறிவிக்கப்படுகின்றது.

25. பாகீரதியம்மை திருவருட்பா:— முதற்பாடல் பாகீரதி யம்மை திருக்கரமொன்றில் நிறைகுடமிருப்பதைக் குறிக்கின்றது. 2ம் பாடலில் கங்காதேவி தியானிக்கக்கூடிய முறை கூறப் பெற்றுள்ளது. 3ம் பாடலில் கங்கையைப் பற்றி உமையவட்கும் இறைவனுக்கும் நிகழ்ந்த உரையாடல் மிகவும் இன்பமளிக்கக் கூடிய பகுதிகளில் ஒன்று. கங்கையில் மூழ்கினல் ஐம்பெருங் குற்றங்களும், சிவத்துரோகம் முதலிய எல்லாப் பாபங்களும் தொலையுமென்பது ஒன்பதாம் பாடற் கருத்து.

26. தாரகப் பத்து:— இது விசாலாட்சி சமேத விசுவ நாதர் பக்கல் கிளியை, மயிலை, குயிலை, வண்டை, நாரையை

பூவையை, அன்னத்தை, புருவை, அன்றிலைத் தூதாக அனுப்பித் தாரக மந்திரப் பொருளை உபதேசிக்கும் நாள் எந்நாளென்று கேட்டுவரச் சொல்லும் முறையில் அமைந்திருக்கின்றது. தாரக மந்திரம் உள்ளுயிராயிருப்பது; வேதங்களால் உணர்த்தப்படுவது; பழமையாவது; உடல் நீங்க உயிராக்கத்தையளிப்பது முதலியவற்றைக் குறிக்கின்றது.

27. சிவஞானபோத பாஷ்யம்:— இது ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிக மூர்த்திகளால் அருளிச்செய்யப் பெற்றது. வடமொழிச் சிவஞான போதத்திற்கு வடமொழியில் ஆக்கப் பெற்ற விரிவுரை.

உ

குருபாதம்.

# அருணூல்கள்

## குமரகுருபரசுவாமிகள் இயற்றியவை

1. **கந்தர்கலிவெண்பா:-** இந்நூல் 122 கண்ணிகளையுடையது. குமரகுருபர அடிகள் செந்திலாண்டவன் திருமுன் ஊமை நீங்கிச் சொன்ன முதல் அனுபவ சைவசித்தாந்தநூல். முதல் முப்பத்தாறு கண்ணிகள் இறைவனுடைய இருவகை யிலக்கணங்களும், ஆன்மவியல்பும், மாயையின் தன்மையும், கூட்டுவிக்கும் இறைவன் கருணையும், ஆட்சிகொள்ளும் திறமும் தெரிவிக்கின்றன. 37 முதல் 65 வரையுள்ள கண்ணிகளில் முருகனுடைய திருமுகம் திருக்கரங்கள் இவற்றின் அருட்செயல்களும், தத்துவங்களே சாங்கோபாங்கங்களா யிருக்கும் பெருநிலையும் அறிவிக்கப் பெறுகின்றன. 66 முதல் 74 வரை மலை கடல் முதல் தசாங்கச் சிறப்பும், 75 முதல் 108 வரை முருகன் திருவிளையாடல்களும், 109 முதல் 122 வரை வேண்டுகோளுமாகிய இவற்றை விளக்கி நிற்கின்றன. தமிழ் மக்கள் நூல்தோன்றிய நாள்தொட்டு இன்றுவரை பாராயண நூலாகக் கொண்டிருப்பதே இதன் பெருமைக்கு ஏற்ற சான்றாகும்.

2. **கயிலைக்கலம்பகம்:—** சுவாமிகள் அவதார ஸ்தலமாகிய கயிலாயபுரத்திலுள்ள இறைவன்மேல் இயற்றப்பெற்ற பிரபந்தம். இந்நூலுள் 8 பாடல்களே இப்போது கிடைத்துள்ளன.

3. **மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்:—** இது அரங்கேற்றப் படும்போது பிள்ளைத்தமிழ் கேட்கப் பெருவிருப்புக்கொண்டு தாயாகிய அம்மையே குழந்தையாகி இருந்து கேட்ட பெருமை யுடையது. அதிலும் இந்நூல் அரங்கேற்றுங் காலத்து ஒருமுறை இருமுறை கேட்டும் போதாமல் மும்முறை சொல்லச் செய்து

கேட்டு மகிழ்ந்தது. 10 பருவங்களையுடையது. 100 பாக்களா லாயது. சந்த இன்பமும் இசையின்பமுஞ் செறிந்தது. "குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமர" னென்பதில் வணக்கப் பொருளையறிவிக்கும் சலாம் என்னும் உருது மொழிவந்துள்ளது.

4. மீனாட்சியம்மை குறம்:— "இறப்பு நிகழ்வு எதிர் வென்னும் முக்காலமும் திறம்படவுரைப்பது குறத்தி பாட்டே" என்பது சூத்திரமாதலின் ஒரு குறத்தி குறி சொல்லுவதாக இந்நூல் அமைந்துள்ளது. குறவஞ்சி என்று ஒரு நாடகநூல் உண்டு. அது குறத்தி குறவன் முதலிய பலரால் பாடப் படுவது. இது குறத்திமட்டும் கூறுவது. இதுபோலக் கலம்பகத் துள் ஒருறுப்புண்டு. இவள் கூறும் குறி நெல் குறி, பல்லிக் குறி, பறவைஒலி, பத்தினிப் பெண்வாய் மொழி இவற்றாலும்; தலைவியின் மெய்க்குறி, கைரேகை யிவற்றாலும் அறிந்து சொல் வாள். மீனாட்சியம்மைக்குரிய தசாங்கங்கள் கூறப்பெற்றுள்ளன. குறத்தி மலைவளம் கூறுதலும், குலநலம் கூறுதலும், தொழிற் சிறப்புக் கூறுதலும் முறையே அமைந்துள்ளன.

5. மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை:— இது வெண் பாவும் கலித்துறையுமாக அந்தாதித் தொடையான் பாடப் பெற்றநூல். இறுதியும் முதலும் மண்டலித்து வரும்படியாக அமையப்பெற்றது. இருபது பாடல்களுடையது. தாம் சொல்லும் செய்யுஞ் செயல்யாவும் அம்மை அதிட்டித்து ஆக்கப்பெற்றன என்பார், 'இவட்காடல் வேறில்லை யெமைப் பாட்டுவிப்பதுங் கேட்பதும்,' 'கற்பூரவல்லி கருத்திற் புகப்புகுந்தாள்' என்று அருளிச் செய்தனர். அம்மையினிடமுள்ள பெருகிய அன்பால் கள்வி என்றும் கொடியாள் என்றும் அன்புவசை யருளுகிறார். "ஏழாய் விளக்கிட்டிரு" என்ற பகுதி மிக நயமுடையது. 'நீ ஏழையாயிருப்பதால் குடிக்கூலி தரவேண்டாம் விளக்கு ஏற்றி வைத்துக்கொண் டிருந்தாற்போதும்' என்கிறார். இத்தகைய நயப்பகுதிகள், சுவைப்பகுதிகள் மலிந்த சிறுநூல்.

5. **மதுரைக் கலம்பகம்:—** இது கலம்பக உறுப்புக்கள் யாவும் அமையப் பாடப்பெற்றது. சித்திரக்கவிகள் செறிந்தது. வடமொழிச் சந்தியமைய இரண்டு அடிகள் பெற்றுள்ளபாடல் களும் சில காணப்படுகின்றன. ஒவ்வொரு துறைப்பாடலும் உள்ளுறையும், இறைச்சிப் பொருளும் இயைந்து இலங்குவன. "பாட்டிற் குருகும் தமிழ்ச் சொக்கநாதர்" என்பன போன்ற பகுதிகள் தமிழ் தாழ்சடைப் பெருமானைப் பிணித்து நிற்கும் பெற்றியைக் காட்டுவனவாம். "மேதகைய பலகலைபோர்த்து அறம் வளருந் தமிழ்க்கூடல்" என்பனபோன்ற பகுதிகள் கூடற் சிறப்பினைக் குறிப்பன. இங்ஙனம் உவமை நலத்தானும், பாடற் பண்பானும், வருணனை வளத்தானும் விளங்கிப் புலவர் உண்ண விருந்தாக விளங்குவது இக்கலம்பகம்.

6. **நீதிநெறி விளக்கம்:—** இது நீதிநூல். வெண்பா யாப் பால் ஆகியது. 102 பாடல்களைக் கொண்டது. குறட் கருத்துக்கள் அனைத்தையும் வகுத்துத் திருமலை நாயக்கன் வேண்டுகோட்காக யாக்கப்பெற்றது. சிறந்த உவமைகளால் உயர்ந்த நீதிகளை உள்ளத்துப் பதிப்பது. ஆங்காங்கு மார்க்கண்டர் வரலாறு போன்ற கதைகளும் காட்டாக எடுத்துக் காட்டப்பெறுவது. வீட்டின் பேற்றினை ஐயந்திரிபின்றி அளவுகளான் அளந்து உத்திகளாற் றெளிந்து மெய்ஞ்ஞானமாகிற கண் விழிக்கத் தூங்குபவர்கள் காணுகின்ற காட்சிக் கனவை நனவாக அறிவதே செம்பொருளுணர்ச்சி யென்று, "அறம் பொருளின் பமும் வீடும் பயக்கும்" என்று தொடங்கியதற் கேற்ப வீட் டிலக்கணத்தை விளக்கி நிற்கின்றது.

7. **திருவாரூர் நான்மணிமாலை:—** திருவாரூர் ஸ்ரீ தியாகேசர் மேல் பாடப்பெற்றது. வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரிய விருத்தம், அகவலென்ற முறையில் 40 பாடல்களைக் கொண்டு விளங்குவது. கற்பனைநலம் கவினுவது. தியாகர் எனப் பெயர் வந்தது அம்மை அறம் வளர்த்தாள் இடப்பங்கிலிருப்பதால்; அவள் கரமாகிய இடக்கரம் வரதம் அருள்கின்ற வள்ளன்மை

யினது என்று கற்பிக்கின்ருர். இருந்தாடும் பெருமாளுக எழுந் தருளி யிருப்பதற்குக் காரணம் திருமால் சபதம் காரண மாகவோ, கடவூர் நிகழ்ச்சியைக் கருத்துக் கொண்டு காலன் கலங்குவன் என்று கருதியோ, என்று கேட்கும் முறையான் உள்ளக் கிளர்ச்சியைத் தருவது; ஆரூர் என்பது ஆர் ஊர் என்று கேள்வியாகப் பொதுவானது எனப் பொருள்பட அமைந் திருப்பது; இத்தகைய நயப்பகுதிகள் பலவும் நம்மை யின் புறுத்துவன. இறுதி யகவற்பா இயற்கை நிகழ்ச்சியிலிருந்து இறைவன் எம்மனேர்க் கெளிவந்து எழுந்தருளிய அருட் டிறத்தையும் அறிவிப்பதாகும்.

8. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்:— இந்நூல் வைத்தீ சுவரன்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிகள்மீது பாடப்பெற்றது. அப்பெருமானல் 'பொன்பூத்த குடுமி' என முதல் கொடுக்கப்பெற்றது. 100 ஆசிரிய விருத்தத் தாலாகியது. சந்தப்பாக்கள் இடை இடையே கலந்துவருவது. உள்ளமுருகி ஓதும் அன்பர் அகக் கண்ணிலும் புறக்கட் பார்வை யிலும் வருகைப்பருவத்துச் செய்யுட்கள் முருகன் எழுந்தருளி வரச் செய்யும் இன்பப்பாடல்களில் "செத்துப் பிறக்கின்ற தெய் வங்கள் மணவாள" என்பது பெருமானது முழுமுதற் றன்மையை அறிவிப்பது. சிற்றிற்பருவத்தில் சிறுமியரியல்பும், பிள்ளைப் பெருமான் எளிவந்த கருணையால் பெருமையினிழிந்து சிற்றி லழிக்குஞ் சிறு குறும்புகளுங் கூறப்படுகின்றன. முத்தமிழ் முருகன் முழக்கும் பறை புலவர்களையழைக்கும் கொடைமுரச மாக எண்ணி வடமொழி தென்மொழிக் கவிராயர்களை ஓடிவரச் செய்யும்; தெய்வயானை யம்மையாரை மணக்கும் மணமுர சென்று இறைவனும் இறைவியும் மனமகிழச்செய்யும்; வேள்விப் பறை யெனத் தேவர்களைக் களிக்கச்செய்யும் என எல்லாரையும் இன்பமுறச்செய்கின்ற திறம் பேசப்பெறுகின்றது. இன்னும் தையனுயகி உச்சிமோந்து பாராட்டி மடித்தலத் திருத்தி முகமுந் துடைத்துத் தன்கண்மணிப் பிள்ளையைக் காட்டி இதனேடு விளையாடுக எனப் பணித்து மகிழ்ந்தார் என்பனபோன்ற பல பகுதிகள் மிக இனிமை பயப்பனவாம்.

9. சிதம்பர மும்மணிக்கோவை:— இது ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்ற முத்திறப்பாக்கள் முப்பது கொண்டநூல். முதற் பாடல் நடராஜப் பெருமானுடைய ஐந்தொழில் நடனச் சிறப்பும், இல்லற வியல்பும், துறவற மேன்மையும், முத்தித் தலங்களும், அவற்றையடைவதில் உள்ள எளிமை யருமைகளும் முறையே காட்டப்பெறுகின்றன. ஐம் பொறிப் பாம்பை யாட்டுவிக்க உம்மை இன்று ஒரு பாம்பு ஆட்டுவிக்கின்றதே என்பதும், உலகமே திருமேனியாக் கொண்ட உமக்கு ஆட்சி சிற்றம்பலம் பற்றுமோ என்பதும் போன்ற கருத்தடங்கிய செய்யுட்கள் பல கற்பனைத்திறம் மிகுந்தன. தென்திசைநோக்கி யாடுவதற்குக் காரணம் காட்டப்பெறு கின்றது. "பாவலர் கூற்றும் நின்னேவலி னல்லதை, நிகழா நிகழ்ச்சி" என்பது எவ்வளவு உயர்ந்த கருத்து. செல்வத் திற்கும் வறுமைக்கும் இலக்கணம் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறப்பட்டுள்ளது.

10. சிதம்பரச் செய்யுட்கோவை:— இந்நூல் எல்லாப் பாக் களும் பாவினங்களும் அமையப்பெற்றது. 84 பாடல்களை யுடையது. இலக்கியம் கண்டதற் கிலக்கணமியம்புவது மரபாக இந்நூல் இலக்கணத்திற்கு இலக்கியமாக ஆக்கப்பெற்றது. "நீரிற் குமிழி" என்றபாடல் நீதிநெறிவிளக்கத்திற்குக் காப்பாக இருப்பினும் அச்செய்யுள் இந்நூலினதென்றே அறியக்கிடக் கின்றது. இருபொறியும் ஒருபொறியாக் கொண்ட பதஞ்சலி கண்களே பஞ்சாக்கரத்தின் உருவத்தைக் காண்பன என்பதும், அம்மை மனைவி, தாய், தமக்கைகளாக இருக்கின்ற மாண்பும், சாத்திரமும் கற்பனையுங் காண அமைந்தது. நயம்பல செறிந்த இந்நூல் இலக்கியமாக இலக்கணமாக இன்பமளித்து நிற் கின்றது.

11. சிவகாமியம்மை யிரட்டைமணி மாலை:— இது வெண் பாவும் கட்டளைக் கலித்துறையுமாக அந்தாதித்தொடையான் ஆக்கப்பெற்ற இருபது பாடல்களையுடையது. இதில் ஒரு

செய்யுளில், சிவகாமவல்லி பூத்தது ஆதலின் பூமிக்குப் ‘பூ’ எனப் பெயர்வந்தது என்று கூறப்பெற்றுள்ளது. அம்மையை அன்னமாக அதிலும் பச்சையன்னமாக உருவகித்துக் காட்டும் அழகு ஊன்றிப்படித் தின்புறக்கூடியதொன்று.

12. பண்டார மும்மணிக் கோவை:— மும்மணிக்கோவை யிலக்கணப்படி முப்பது பாடல்பெற்ற நூல். இது சிறந்த குருவணக்கப் பாமாலையாகும். ஞானசாரியர் ஞானமகளார் நன்மார்பில் பதக்கத்து மணியாகக் கூறுகிறது. கண்டங்கருத்த கடவுள் மாமுனியே அக்கறுப்பு நீங்கி வந்த மாசிலாமணியாக இருக்கிறது. சிந்தாமணி கருதிய ஒன்றையே நல்கும். இம்மணி கருத்திற்கெட்டாப் பேரின்ப வாழ்வையும் பெறுவிக்கும் என்பன போன்ற பல நயப்பகுதிகள் பார்க்க இருக்கின்றன. இந்த மும்மணிக்கோவைக்கு மாசிலாமணியே நாயகமணி என்றும், அங்ஙனம் கோக்கப் பெற்றதால் இம் மும்மணிக்கோவையைப் பூண்டார் எம்மணிக்கோவையையும் இனிதெனக் கொள்ளார் என்றும் இறுதிப்பாடல் இந்நூலின் பெருமையைக்கண்டு புலப் படுத்தும். மற்றும் பின்னுள்ள ஒரு மூன்று பாடல்கள் இந் நூல் கலைமகள் அருள் உண்ணின்றுணர்த்த ஆக்கப்பெற்றது. கள்ளப் புலன்கொண்டு உரைத்ததல்ல என்றும், இந்நூலை நித்தம் ஓதுவார் இப்பிறவியிலேயே பேரின்பம் எய்துவார் என்றும் கூறப்பெறுகின்றது. “இந்தநூல் மொழிநயமும், காவியப்பண்பும், சாத்திர நுட்பமும், தோத்திர மாண்பும், ஒருங்கமைந்து விளங்குவ” தென வித்துவான் சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

13. காசிக்கலம்பகம்:— இந்நூலும் கலம்பக உறுப்புகள் முழுதும் அமையப்பெற்ற சிறந்த கற்பனைத் தோத்திர நூல். இந்நூலிற் காசியில் இறப்பார் செவியில் விசுவேசர் பிரணவத்தை யுணர்த்துவார் என்னும் வரலாறு பலமுறையில் நயம்படப் பேசப்பெறுகிறது. ‘பாவலரும் நாவலரும் பண்மலரக் கண்மலரும், காவலரும் ஏடவிழ்க்குங் காசி’ எனச் சிலேடை

யின்பம் தோன்றக் கூறுகிறது. இறைவன் அளித்த கபாலங்கள் ஏன் நகுகின்றன என்பதற்கு இப்போது தொழில்புரியும் பிரமனைப்பார்த்து நகுகின்றன் என்று காரணம் கற்பிப்பது அழகிய பகுதிகளுள் ஒன்று. சிறந்த நயந்தரும் பகுதி வெளியூர்களில் உள்ளார் நரைதிரை வந்தால் வருந்துவார்; நரைதிரை வேண்டாமென்றாலும் வெறுப்பார்; ஆனல் காசியில் உள்ளார் அதற்குமாருக நரையை-திரையை விரும்புகின்றார்கள் என்னும் பொருள் தரும் "படுத்தபாயுடனே பிணிமூழ்கினும், பல்விழுந்து நரைத்தற மூப்பினும், அடுத்த திங்கிவர்க்கே பெருவாழ்வெனும், அப்பெரும்பதி யெப்பதி யென்பிரேல்" என்னும் பாடலாகும். இத்தகைய நயமலிந்த நாற்பாவும் பரவிவந்த கலம்பகம் புலவர் விருந்தாகப் போற்றப் பெறுவது.

14. சகலகலாவல்லி மாலை:— இது ஒரு பாராயணநூல். சுவாமிகள் முதநூலாகிய கலிவெண்பாவும், இடைநூலாகிய பண்டார மும்மணிக்கோவையும், இறுதிநூலாகிய இந்நூலும் பாராயணநூலாக எல்லா இன்பங்களும் எய்துவிக்கும் நூல்களாக அமைத்திருப்பது அறிந்தின்புறக்கூடியன. இந்நூல் சுவாமிகள் உருதுமொழி யறிவுபெற கலைமகள் நல்லருளை வேண்டிப் பாடப்பெற்றது. கட்டளைக் கலித்துறையாலாகியது. 10 பாக்கள் கொண்டது. ஒவ்வொருபாடலிலும் கலைமகள் இயல்பும், வேண்டுங் கவித்திறமும், அவதானமும் விளங்குகிறது. "மண்கண்ட வெண்குடைக்கீழாக மேற்பட்ட மன்னரும் என் பண் கண்டளவிற் பணியச் செய்வாய்" என்று வேண்டியபடியே சுவாமிகள் மன்னன் பாதுஷாவைப் பணியவைத்த வரலாற்றுச் சிறப்பு ஒத்துநோக்கி இன்புறற்குரியது.

## வெள்ளியம்பலவாணசுவாமிகள் இயற்றியன

15. ஞானசம்பந்த தேசிகர் சமூக மாலை:— சமூகமாலை என்பது குருநாதனுடைய திருச் சமூகமானது இவ்விவ்வாறு விளங்குகிறது எனக் கூறுவது. பன்னிரு விருத்தப் பாடல்களையுடையது. குருஞானசம்பந்த தேசிக சுவாமிகளுடைய சமூகம்

நாதாதி பாசங் கழன்று சல்லாபஞ் செய்யும் சிவானுபவச் செல்வர்கள் சேர்ந்தது; அருள்வெள்ளமீர்க்கக் குறையிரப்போர் கள் கூடியிருப்பது; சந்நிதிசார என்ன புண்ணியம் செய்தோம் என ஏக்கமுழுத்தமுற்றிருப்பார் இனிதிருப்பது; சாத்திர ஆராய்ச்சி, தோத்திரப்பாடல் செய்துகொண்டிருக்கும் தவச் செல்வர்களை யுடையது எனப் பல்லாற்றானும் பாராட்டப் பெற்றுள்ளது. குருநாதன் கவிதையைப் பற்றிவரும், 'கற்ற அடியார் சினத்தை அடியோடு அழிக்கும் கடுங்காற்று குரு நாதன் கவிதை' என்ற கருத்தடங்கிய "கற்றவர் சினத்தரு வனத்தையு மலைக்குமொரு காலான கவிதையாளன்" என்ற பாடற் பகுதி மிக இனிக்கும் பகுதிகளுள் ஒன்று. இங்ஙனமே ஒவ்வொரு செய்யுளும் உள்ளத்தொன்றிநின்று உண்மை யின்பம் ஊறச்செய்யும்.

16. குருஞானசம்பந்தர் தாலாட்டு:— ஞானக் குரவனை நற்குழந்தையாகப் பாவித்து அவரிடம் தாம்பெற்ற ஞானப் பேறுகளை யமைத்துச் செய்யப்பெற்ற தாலாட்டுப் பிரபந்தம். இதுவும் தோத்திர நூல். தாலாட்டு என்பது தாய்மார் குழந் தையை உறங்கவைப்பதற்காகச் சொல்லும் பாடல். முன்னுவை யசைத்து ஆக்கப்பெறும் ஒருவித ஒலியோடு கூடிய பாடல். இது 40 கண்ணிகளையுடையது. "மெய்யன்பர் எல்லாம் வியன் கருணை பாராட்டப், பொய்யன்ப னேனைப் பொருட்படுத்தும் போதகனே" "ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுட்கலந்து, தேனா யமுதமுமாய்த் தித்திக்குந் தேசிகனே" என்பனபோன்ற பகுதிகள் மிக இனிப்பன. 32 முதல் 35 முடிய உள்ள கண்ணிகள் ஞானமழை பொழியும் ஞானசம்பந்தக் குழந்தையை—அறிவில் தித்திக்கும் அருள் ஞானக் குழந்தையை—அகண்ட பரிபூரண சிதானந்தத்தை இருந்தபடி காட்டும் பெருந்தவக் குழந்தை யைப் பிறதாய்மார் வைததாக எண்ணி உன்னைச் சொன்னவ ரார் என்று பாராட்டுகின்றது.

17. திருப்பள்ளி எழுச்சி:— அறிதுயிலமர்ந்திருக்கும் ஆசாரி யனைத் துயிலுணர்த்துவதாகத் தோத்தரிப்பது. துயிலுணர்ந்து

பராசக்தியோடு எழுந்திருக்கவேண்டும் என்றும், அடியார் களுக்கு அருளையே நாடும் கருணைகரனைக் கவினவேண்டும் என்றும் பல இடங்களில் பாராட்டுகிறது. பதினொரு பாடல்களை யுடையது. "தண்டமிழ்ச் சொல் தென்றருமை ஞானசம்பந்தன்," "சாதிகுலமேனி சமயம்புகல வந்தவொரு சற்குரு" என அவர் பெருமை அறிவிக்கப் பெறுகின்றது. ஓராறு சமயமும் ஓராறு சமயமும் ஓராறெழுத்து முயல்வான், ஓராறு சென்னியில் ஒளித்துவந்திடுந் தேசிகோத்தமா'' என்பது சொல்லணியும் பொருள் நயமும் அமைந்தபகுதி. இங்ஙனம் பல்லாற்றானும் சிறந்து விடியல் நேரத்து விரும்பிப் பாடுவர்க்கு ஞானவமுதினை நன்கு வழங்க நிற்பது.

18. முத்திநிச்சயச் சிற்றுரை:— முத்தி நிச்சயம் என்ற நூல் ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமிகளால் அருளிச் செய்யப் பட்ட சைவ சித்தாந்த நூல் என்பது முன்னர்க் கூறப்பட் டுள்ளது. அதற்கு இம்முனிவர் சிற்றுரை யொன்று இயற்றி யுள்ளார்கள். ஒவ்வொரு பாடலுக்கும் தொடக்கத்தில் பாட லால் நுவலப்படும் பொருளைச் சுருங்கக்கூறிப் பின்னர் பதவுரை, விசேடவுரை, இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் முதலியனகூறி, இறுதியாக, கூறப்பட்ட பொருளை யெல்லாம் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. ஆங்காங்குக் காணப்படும் உள்ளுறைப் பொருள்களும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

19. முத்திநிச்சயப் பேருரை:— மேற்கூறிய வுரையைவிட விரிவானது. பெரும்பாலும் அசிந்தியவிச்வ சாதாக்கியம், காமிகம், மதங்கம், இரௌரவம் முதலாகிய வடமொழி ஆகமங் களின் சுலோகங்கள்பல மேற்கோள்களாக எடுத்தாளப் பட்டுள்ளன. பரமோபதேசம், ஐக்கியவியல், பரமததிமிரபானு முதலாகிய வெளிவராதநூல்கள் பல அதில் காணப்படுகின்றன. திருமந்திரம் என்ற திருமுறைநூலில் இதுகாறுங் காணப்படாத சில பாடல்கள் மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அப்பாடல்கள் மிக இனிமை பயப்பன.

20. மிருகேந்திரம்:— இது உபாகமங்களில் ஒன்று. சூத்திர யாப்பான் ஆக்கப்பெற்றது. பாயிரம் உபோத்காதப் படலம், பரமோட்ச நிராசப் படலம், பதி படலம், சிருஷ்டிப் படலம் அனுக்கிரகப் படலம், பசு படலம் என ஆறு படலங்களை யுடையது. ஆசிரியர் சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த காலத்துப் பாடப் பெற்றது. இறைவனிடம் இந்திரன் நரசிங்கத்தின் தோலைப் போர்த்திக்கொண்டு கேட்டதால் மிருகேந்திரம் எனப் பெயர்பெற்றது. இது இந்திரனல் பரத்துவாச இருடிகளுக்கு மன நிலை நன்ருக அறிந்தபிறகு உபதேசிக்கப் பெற்றது. பாயிரத்துள் பிற இலக்கண நூல்களில் இல்லாத மூலத்தின் இலக்கணம், உத்தேச இலக்கணம், உரைச் சூத்திரங்களின் இலக்கணம், ஞானநூல்களைப் பயிற்றும்—பயிலும் இலக்கணங்கள் எல்லாம் இயம்பப் பெறுகின்றன. ஞானநூற் படித்தார் மேற்கொண்டொழுகும் முறைகளும் விரித்துக் கூறப்பெறுகிறது. நூல் வந்த வரலாறும், புறச்சமயங்களில் முத்தியிலக்கணமும், சித்தாந்த முத்தித்திறமும், பதி இலக்கணமும் ஈசான முதலான மந்திரங்கள் ஐந்தும் இறைவனுக்கு ஐந்தொழிலாற்று மந்திரங்கள் என்பதும், சிருட்டித்திறமும், ஆன்மாக்கள் வகையும், பாசநீக்கமும், நீங்கியபின் ஆன்ம விளக்கமும், பிறவும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறப்பெற்றுள்ளன.

### சம்பந்தசரணலயமுனிவர் இயற்றியன

21. கந்தபுராணச் சுருக்கம்:— இது மைசூர் மன்னர் வேண்டுகோளின்படி யாக்கப்பெற்றது. 104 பாடல்களை யுடையது. கச்சியப்பசிவம் செய்த 12000 பாடல்களைச் சுருக்கி ஒராயிரமாக யாத்த அருமைப்பாடுடையது. அளவிற் சுருங்கினும், வேண்டிய இடங்களில் கவிதை நயமும் கதையமைப்பும் சுருங்காமல் சொல்லப்பெறுவது. இதன் நயத்தை யுத்த காண்டத்தில் ஒரு படலத்து, பல பெயர்களால் இடப்பெறும் போர்வகைகளில் எய்யப்பெறும் அம்பு வகைகளில் ஒன்றையும் விடாது ஒரே செய்யுளிற் கூறும் அருஞ் சிறப்பு அறிந் தின்புறற்குரியதாம். அதுபோலவே காசியபனுபதேசம், சுக்கிரனுபதேசம் முதலிய

உபதேசப் பகுதிகள் சிறிதும் சுருங்காது சொல்லப்பட்டுள்ளது. உவமை நலமும், சமயத்திற்கேற்ற செய்யுள் நடையும் ஊன்றி யின்புறுதற்குரியன.

22. சிகாரத்னமாலை:— குருஞான சம்பந்தர்மீது பாடிய தோத்திர நூல். சிகாரத்னம் என்பது முடிமணி. முடிமணி போன்ற குருராயரது பாமாலையாதலின் சிகாரத்னமாலை எனப் பெயர் பெற்றது. தமது ஞானசாரியருடைய வல்லமை வகுக்கப் பெறுகின்றது. 11 பாடல்கள் கொண்டது.

மூன்றும் பாடலில் குருநாதர் கமலையும், தருமையும், விரி தமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருக்கும் சிறப்பு கூறப் படுகின்றது. நான்காம் பாடலில் "ஆகமபுராணங்கள் வேதங்கள் ஆகிய சகல கலைகளும் ஆய்வது உனது புகழானல் அறிஞர்கள் உனைப் புகழ்கிறார்கள் என்று கூறுவது வியப்போ" என்பது நவிலப் படுகின்றது. இறைவன் பிறை, புனல், அனல் முத லியன கரந்து குருநாதனாக எழுந்தருளியிருக்குஞ் சிறப்பும், குயில், கிளி, பூனை எலி முதலியன குருநாதனது உபதேசத்தால் ஞானம் பெற்ற சிறப்பும் 5-ம்பாடல் அறைகின்றது. நாவாணர் கள் ஒருபுறம் பாமாலை பொழிகின்றார்கள்; மற்றொருபுறம் இசை வாணர்கள் தமிழ்மறை ஓதுகின்றார்கள்; அடியார் கூட்டங்கள் குவித்த கரங்களுடன் நின்று சேவிக்கின்றார்கள்; இத்தகைய நிகழ்ச்சிகள் குருசந்நிதானத்தில் நிகழ்கின்றன என 9-ம் பாடல் ஓதுகின்றது.

## தமிழாகரமுனிவர் இயற்றியன

23. ஆசௌச தீபிகை:— இது விருத்தப்பாவால் விரிக்கப் பெற்றது. 108 பாக்களையும், சிறப்புப்பாயிரச் செய்யுளையும் உடை யது. ஆசௌசவிதி ஆகமங்களிற் கூறப்பட்டதன் காரணம் கூறுகின்றது. பின்னர் முறையே ஆசௌச லக்ஷணங்களும், நிமித்தங்களும், வகைகளும், வருணச்சிரம பேதங்களால் ஏற்றத் தாழ்வும், புறனடை விதிகளும், மரணங்களும், ஆசௌச

நியமங்களும், ஆசௌசமுடையவன் தீண்டிய எந்தப் பொருள்களுக்குத் தீண்டல் இல்லை என்பதும் முதலான அரிய கருத்துக்கள் அறிவிக்கப்பெறுகின்றன. இறுதியாகச் சிறப்புப் பாயிரத்துள் நூற்பெயர், ஆக்கியோன் சிறப்பு, ஆசாரிய பரம்பரைச் சிறப்பு முதலியன கூறப்பெற்றுள்ளன.

24. ஞானசம்பந்தர் குருராய அட்டகம்:— குருமூர்த்திகள் தம்மை யாட்கொண்டதிறம் மனத்துவகைக் கடலை எழுப்ப எட்டு விருத்தங்களால் இயற்றப்பெற்றதொரு தோத்திரநூல். இதில் முதற் செய்யுளில் ஞானதேசிகர் தக்ஷிண யாத்திரை எழுந்தருளிய காலையில் சிந்துபூந்துறையில் அறச்சாலைமடம் ஈடேறத் தன்னை எழுவகைத் தீக்ஷையால் இன்னருள் வழங்கியதைத் தெரிவிக்கிறது. 2-ம் பாடல் இவர்கள் செய்த நூல்மாலைகளைத் தொகுத்துச் சொல்லுகிறது. மற்றச் செய்யுள்கள் முறையே சற்குரவன் முத்திக் கொடிகட்டியாளும் வண்ணமும், இமசேது பரியந்தம் சன்மார்க்க ஞானமோக்ஷம் பெறும் வகையை விரித்தோதிய வண்மையும், தமிழ்ப் புலவர்களை யாட்கொண்டதும் முதலிய அருட்செயலை அறிவிப்பது.

25. சந்திர கலா மாலை:— சந்திரகலை பதினாறு ஆதலின் அதுபோல 16 செய்யுட்கள் கொண்ட இந்நூலும் சந்திர கலாமாலை எனப்பெயர் பெற்றது. தான் பிறவிக் கடலிற் படுகிற வேதனைகளும், திருவடி சேர்ந்துய்யுந் தன்மையும், பாததீர்த்தத்தின் பண்பும், வானந்துளங்கி மண்கம்பமாகிலும் அசையாத ஆசிரியர் அகத்திண்மையும், குருசந்நிதியில் கவிவாணர் சமயவாதர் இவர்கள் கூட்டத்தின் இயல்பும் பிறவும் அறிவிக்கப்பெறுகின்றன. "ஞானபண்டிதசாமி கைப்பிடித்துப் பார்ப்பையால்" "தவராசர் பிரியாத சிவராச தானி யுன் சந்நிதானம்" "உன்மடத்தில் நாயாக் கடைத்தலையில் மவுனியாயசையாமல் நானிருக்கக் கிடைத்தது" என்பன போன்ற பல பகுதிகள் கற்பார் மனத்தைக் கரைவிப்பன. குருமகிமையைக் குறிக்கொளச் செய்வன.

நீதிசாரம், பிராயச்சித்த சமுச்சயம், நெல்லையப்பர் நான் மணிமாலை, நெல்லைகாவலமாலை, திருப்பணிமாலை, கலைமக ளிரட்டை மணிமாலை முதலிய பல நூல்களும் இயற்றியதாக இவர்கள் வாக்கினின்றும் அறியக் கிடக்கின்றது.

### சொர்க்கபுரம், அழகியதிருச்சிற்றம்பலவர் இயற்றியன

26. அறிவானந்த சமுத்திரம்:— இது சித்தாந்த தோத்திர நூல். சகசானந்த வல்லாச வாழ்வு, மலபரிபாகவாழ்வு, உபதேசக் கிரமம் என மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 105 சிறுபிரிவுகளை யுடையது. 1154 பாடல்களால் ஆக்கப் பெற்றது: தேவாரங்களைப்போல இசையமைப்புடன் கூடியது. யாப்பிலக்கணங்கள் அமையப் பெற்றுள்ளது. "அருளுந் தருவ ரருளுந் தருவ ரருளுந் தருவாரே" என்பனபோன்ற சொற்பின் வருநிலையணிகள் அமைந்த பாடல்கள் பல காணப்படுகின்றன. 'குணமிலகுங் கோகிலமே, நயமிலகு நன்னாய், இசைபாடும் வண்டரசே' என அஃறிணைப் பொருள்களை விளித்துத் தூது விடுவதாகச் சில துறைப்பாடல்களுங் காணப்படுகின்றன. "மேடமொன்று புலியைந்தால் வீரங்குன்றி மயங்குவபோல்" "ஓடும் தேரை வொன்றதனை யைந்து நாக முழக்குவபோல்" "ஆடும் பாம்பொன் றைங்கலுழ னலைப்பபோல்" என்பன போன்ற பல வுவமைகளால் ஆன்மாக்கள் ஐம்புலன் வசப்பட் டுழலுதலை விளக்குகின்றார்.

27. கிளிவிடுதூது:— தமது அருட்குரவர் தருமை அழகிய திருச்சிற்றம்பலதேசிக சுவாமிகளிடத்து கிளியைத் தூது விடுவதாக அமைந்துள்ளது. 158 கண்ணிகள் கொண்டது. 1 முதல் 9 வரை இறைவனுடைய அருட்பிரபாவங்களும், 16 வரை அவ்விறைவன் ஆன்மாக்களுக்குப் பரபோகம் ஊட்டுதற்காகக் கண்ணுதல், கண்டக்கறை, தலைமான், கைமான் முதலியவற்றைக் கரந்து சம்பந்தனென்னப் பேர்தாங்கி வந்ததும், 20 வரை தருமையில் காணப்பெறும் ஒலிகளின் சிறப்புங் கூறப்பட் டுள்ளன. பின்னர் 122 வரை தமது ஞானசாரியாரை உருவகப்

படுத்துகின்றார். "உளச்செய்முழுதும் பாயும் வடியுமொரு பாலாறு" "உருகித் தேடாமல் வாராத தெள்ளமுதம்" "வாயாற் கடியாமல் உண்ணவந்த கன்னல்" "புலப்புனத்தை வெட்டி யருள்வித்திட்டுத் தேடாவிளைந்ததொரு தெய்வீகம்" "பல்லுயிர் கள் போனாற்பின் மீளவிடாப் பொன்னுலகு" என்பன எடுத்துக் காட்டாம். 140 வரை தசாங்கச் சிறப்புக் கூறப்படுகிறது. 141 முதல் 'கிளியாகிய நீ குருசந்நிதானத்திற் சென்று "தேனே, கனியே, கருணைபொழிகாரே, பவஅரவின் பற்பட்ட புண்ணற வந்த மருந்தே" எனத் துதித்து 'அடியேன் விண்ணப்ப மொன் றுண்டு அதனைத் திருச்செவி சாத்தியருளல் வேண்டும்; தேவரீர் மீது விடாய் கொண்டு சித்தம் நைந்து நின்ற பெண்ணுக்குத் திருநோக்கமளித்துப் பேரின்பமும் அளிக்கவேண்டும்' எனப் பேசி 'அதற்கு அடையாளமாக தேவரீரது கொன்றை மாலையைத் தந்தருள வேண்டு' மெனக் கூறி, அதை நீ கையிலே வாங்கிக் கொண்டு விரைவில் வருவாயாக' எனக் கூறப்படுகிறது. "கருங் கற்பிசைந்து கனியாக்கல்போல்" என்பன போன்ற உவமைகள் மிக இன்பம் பயப்பன. ஒவ்வொரு கண்ணிகளும் அறிஞர் அறிந்து இன்புறக் கூடியனவாம்.

## படிக்காசுமுனிவர் இயற்றியன

28. புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம்:— கலம்பக உறுப் பெல்லாம் அமைய 101 பாடல்களாற் பாடப்பெற்றது. 'பண்பாய பகர்சந்தம்' அமைந்த பல பாக்களால் மிளிர்வது. பொருளமை திக்கு (தாலிபுலாக நியாயமாக) ஒரு சோறுபதம் பார்த்தது போல 47ம் பாடலில் முருகன் பூசித்தது முதல் தேவகணங்கள் பூசித்தது வரை பலர் வைத்திய நாதனை வழிபட்டதை ஒரு சேரத்திரட்டி ஓரகவலிலேயே குறிப்பிட்டுள்ளமை ஆய்தற் குரியது. "அடியார்கள் உய்ய உண்டை மருந்தளிக்கும் நீர் உமது மையலுக்கு மருந்தறிய வில்லையே, ஊருக்கு வைத்தியன் தன்னுடம்புக்கு விரோதி' என்ற பழமொழிபோல ஆயினீர்" என நகைச்சுவை தோன்றக் கூறியிருக்கும் அழகு அறிந்தின் புறக் கூடியவற்றுள் ஒன்று. மற்ற கலம்பகங்களுள் புயவகுப்பு

என்ற வகுப்புச் செய்யுள் ஒன்றே யிருக்கும். இந்நூலுள் பாத வகுப்பு என்ற ஒன்றும் வைத்தியநாதன் பாதப் பெருமை பகர்வதாக இருக்கின்றமை தனிச் சிறப்பாகும். 'அப்பிறப்பும்' என்ற செய்யுளின் பிற்பகுதியில் பல காட்டை வைத்து, எல்லாம் சாகாடுபோல (வண்டி) வரும் ஒரு காட்டில் முடித்துக் காட்டிய சொல்லழகு புலவர்க்குப் பெருவிருந்தாம். 'உலகத்தில் மக்களாகப் பிறந்து அறஞ்செய்தலை மறந்து உயிர்வாழ்பவர்கள் மறுபிறப்பில் வீடுகள் தோறுஞ் சென்று பிச்சை யெடுத்து உழல்வர்; இறைவனுகிய நீயோ பிறப்பில் பெருமானுக விளங்கு கின்ருய்; அவ்வாருக ஐயமேற்ற திருக்கோலம் தேவரீர் அடை தற்குக் காரணம் யாது?' என வரும் பாடல், சிவபரத்துவத்தை நிலைநாட்டி "அறஞ் செய விரும்பு" என்ற நீதியையும் புகட்டி நிற்கின்றது.

29. தொண்டைமண்டல சதகம்:— இந்நூலாசிரியர் அவ தரித்த தலம் தொண்டைநாட்டகத்தது ஆதலின் அந்நயப்பால் இந்நூல் ஆக்கப்பெற்றது. ஒரு நாட்டைப்பற்றிய வரலாறு அறியவேண்டின் சரித்திரநூல் போன்ற இத்தகைய சாதனங் களே துணையாவன. 100 கட்டளைக் கலித்துறைகளால் ஆயது. அந்நாட்டைப்பற்றிய பல வரலாறுகளைக் காட்டுவது. பல அருங் கவித் திரட்டுகளையும், புலவர் வரலாற்றினையும், புரவலர்கள் கொடைச் சிறப்பினையுங் குறிப்பது.

இம் முனிவர் இயற்றிய பிறநூல்கள் உமைபாகர் பதிகம், சிவந்தெழுந்த பல்லவனுலா, பிள்ளைத்தமிழ், பாம்பலங்கார வருக்கக்கோவை, திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை முதலி யனவாம்.

### சிதம்பரநாதமுனிவர் இயற்றியன

30. திருப்பதிகம்:— பத்தாவது குருமூர்த்தியாக எழுந்தருளி யிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞானதேசிக சுவாமிகள்மீது பாடிய நூல். பத்து ஆசிரிய விருத்தங்களை யுடையது. ஞானகுருவின் அருட் பார்வையில் அகப்பட்டார்க்கு மனக்கலக்கம் இல்லை யென்பதும்; குருதிருவுருவம் மெய்கண்ட நூல்கள், தேவாரம், திருவாசகம்,

முதலிய சாத்திர தோத்திரங்களே திருவுருவெடுத்து வந்தா லொத்தது என்பதும், மெய்கண்ட பரம்பரை ஆசாரிய மரபும், ஆசாரியப் பெருமக்களைப் புலவர்களும் அடியார்களும் பாடிய கவிதைத் தொகுப்புமாய இவைகளை அறிவிப்பது.

31. நித்தியகன்மநெறிக் குறள்:— வடமொழி ஆகமங்களை யும் பத்ததிகளையும் ஆராய்ந்து செய்யப்பட்டது. 755 குறள் வெண்பாக்களாலாயது. தியானவிதி முதலாகப் போஜனவிதி யீருக ஒன்பது பகுப்புக்களையுடையது. அவசிய கருமஞ் செய் யும் முறை, தந்த சுத்திமுறை, நீராடல் முறை, அனுட்டான முறை, சிவபூஜாவிதி முதலியன யாவும் விளக்கமாகக் கூறப்பட் டுள்ளன. பாக்கள் யாவும் செம்பாக முடையன. "பூதியணிந்தே புறத்திற் புறப்படுக, பூதியணியா தொழிந்தபோது", "அற்றைக் குபவசியா யானைந் தினையருந்த, லுற்றே யிருநா றுரை" என்பன எடுத்துக் காட்டாம்.

## சிவானந்த முனிவர் இயற்றியன

32. சிவானந்த மாலை:— வெண்பா யாப்பா னமைந்தது. 414 வெண்பாக்களையுடையது. சித்தாந்த அனுபவத் திறனைப் பொருந்திய உவமை வாயிலாக உணர்த்துவது. தத்துவராயர் பாடுதுறையிலும், ஒருபாவுண்மை உபதேச உரையிலும், சைவ சித்தாந்த உரைகளிலும் எடுத்தாளப் பெற்றுள்ளமையே இதன் பெருமைக்கு ஏற்ற சான்றாகும். கடவுள் வாழ்த்தில் விநாயகப் பெருமானது நீங்க மற்றவை திருஞானசம்பந்தர் வாழ்த்தாக அமைந்துள்ளன. "இறைவன் சுட்டுவிரலையுங் கட்டை விரலையுஞ் சேர்த்த போதக முத்திரையாற் காட்டமுடியாத உண்மையைச் சுட்டுவிரலாற் காட்டிய தோன்றல்' என்று ஞானசம்பந்தர் பாராட்டப்பெறுகின்றார். அப்பகுதி "ஈசனிரு விரலாற் காட்ட வொண்ணா இன்பத்தை, மாசறவோ ரங்குலியால் வாழ்வித்த" என்பது. "இந்நூலின் பேர் சிவானந்தப் பெருங்கடலுட் பேர முத மார் சிவானந்தமாலை" என்றபகுதி சிவானந்தப் பெருங் கடலுள் மதித்தெழுந்த அமுதம்போன்றது இம்மாலை என்பதை

விளக்கிநிற்றலால் இதன் பெருமை நன்கு விளங்கும். சரியை முதல் நாற்பாதங்களும், அவத்தைநிலைகளும், சத்திநி பாத வகைகளும், குரு சீட இலக்கணங்களும், தீக்ஷை முறை களும், தசகாரிய பேதங்களும், துறவியலும், சீவன் முத்தியும், சிவானந்தப்பேறு முதலிய அரிய பொருளும் அனுபவர்க்கேற்க அறிவிக்கப் பெறுகின்றன. உவமை நலமும், பொருள் நயமும், பிறநூல் மேற்கோள்களும், அனுபவத் திறமும் கண்டு விழையத் தக்கன.

33. **சிவானந்தபோத சாரம்:—** இது 70 அடிகளையுடைய ஆசிரியப்பாவான் அமைந்தது. தசகாரியங்களை முப்பது அவ சரத்துள் வைத்துச் சிவபோகத்தைத் தெள்ளிதினுணர்த்துவது. ஆன்மா ஐம்மலங்கள் நீங்கிச் சிவத்துடன் கலக்கும் நெறியும், பாச பசு பதி யாதாரங்களும், முப்பதவதரத்தையும் ஏழாயடக்கிச் சொன்ன இயல்பும், சிவரூப சிவதரிசன சிவயோக சிவபோகங் களும், சாக்கிர முதலிய அவத்தைத் தன்மைகளும், முத்தி வகைகளும் அறிவிக்கின்றது.

34. **சம்பிரதாய தீபம்:—** சிவஞானோபதேச பரம்பரையில் வருகின்ற சம்பிரதாயங்கள் யாவற்றையும் விளக்கி நிற்றலின், இந்நூல் சம்பிரதாயதீபம் எனப் பெயர்பெற்றது. வெண்பாவா லாகியது. குருமரபு சம்பிரதாயம், சாத்திர சம்பிரதாயம், குருபீட சம்பிரதாயம் என மூன்றாகப் பகுக்கப்பட்டு ஒவ்வொன் றும் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது.

## புன்கூர் சிவப்பிரகாசர் இயற்றியது

35. **சிவப்பிரகாசக் கட்டளை:—** தத்துவம், தத்துவத் தோற் றம், தத்துவ குணம், அவத்தைகளினியல்பு, தசகாரியம் ஆகிய இவைகளை நன்கு விளக்குவது. உரை நடையில் அமைந்துள்ளது. சைவ சித்தாந்தம் பயில்வார்களுக்குப் பெரிதும் பயன்றருவது. (ஆங்கிலக்கல்வி யுடையாரும் கற்றுணரு நோக்கத்தால் ஆங்கில மொழிபெயர்ப்புடன் அச்சிடப் பெற்றுள்ளது.)

## காவை அம்பலவாணமுனிவர் இயற்றியது

36. திருவருட்பயன் உதாரணக் கலித்துறை:— திருவருட் பயனை மேற்கோளாகக் கொண்டு விளங்குவது. 100 கட்டளைக் கலித்துறையான் ஆயது. திருவருட்பயன் குறட்பா ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு விரிவுரை யமைந்ததுபோல ஆயது. சிற்சில இடங்களில் உவமை வாயிலாகவும் உள்பொருளை விளக்கிநிற்பது.

## சண்முகசுவாமிகள் இயற்றியன

37. சடையப்பர் மாலை:— திருப்பனந்தாள் செஞ்சடையப் பருக்குச் சாத்தியமாலை. முப்பது பாடல்களால் ஆக்கப்பெற்றது. எளிய சொற்களால் இழுமென் ஓசையோ டியல்வது. "அகர வுயிர்போ லறிவாகி எங்கும் நிகரிலிறை நிற்குநிறைந்து" என்ற கருத்து அப்படியே 7ம் பாடலில் "அகரம் போ லுயிர்கள் அகந் தொறும் விளங்கி" எனக் கூறப்பெற்றுள்ளது.

38. பெரியநாயகி மாலை:— இது திருப்பனந்தாள் பெரிய நாயகிமேற் பாடப்பெற்றது. 10 பாடல்களையுடையது. 'கண்ணு மணியும்' என்ற பாடல் "கண்ணே கண்ணுட் கருமணியே" என்ற திருத்தாண்டகப் பகுதியை அன்பர் மனத்தாக்கும் நயம்பெற்றது.

39. சந்தானதேசிகர் போற்றிக் கலிவெண்பா:— 105 கண்ணி களாலாய கலிவெண்பா. இதில் ஸ்ரீகண்டதேவர் முதல் தருமை யாதீன 20-வது குருமூர்த்தியாகிய சிவஞான தேசிகர் வரையுள்ள சந்தான குரவர்களுக்கு வணக்கம் கூறுகிறது. குருஞானசம்பந்த ரென்ற மேகம் ஞானப்பிரகாச னென்னும் கடலிற்சென்று, ஞானமெனும் நீரை முகந்து மலமாகிய கனலினால் வெதும்பும் (அடியார்களது) உயிராகிய பயிரிடத்தே பெய்தது என்ற பகுதி புலவர்களுக்குப் பெருவிருந்தளிப்பது.

40. ஞானசம்பந்த தேசிகமாலை:— இது 32 கட்டளைக் கலித் துறையாலாயது. குருஞானசம்பந்தர்மீது பாடப்பெற்றது. பல

பாடல்கள் வளஞ்செறிந்தன. அவற்றுள் 25ம் பாடல் பல ஊர்ப் பெயர்கள் சொல்லலங்காரமாக அமையப் பொருளமைதியும் பெற்று விளங்குகிறது.

5. **அகப்பொருள்நவமணிக் கோவை:—** இதுவும் ஞான சம்பந்த தேசிகர்மீது அகப்பொருளமைதி பெறப் பாடப் பெற்றது. ஒன்பது கலித்துறைப் பாடல்களை யுடையது. பல துறைப்பாடல்கள் நயமும், இருபொருளுந் தோன்ற யாக்கப் பெற்றுள்ளன. 'கறைபூத்த வேலை நற்கையேந்தல் இதற்குக் கருணையன்றே' என்ற நாணிக் கண்புதைத்தல் பகுதியும், 'சொந்தம் நினக்கென் திருக்கூடல் என்றவள் சொற்றனளே' என்ற புணர்ச்சி விரும்பல் துறைப்பகுதியும் மிக இன்பம் பயப்பன.

6. **செந்தமிழிரட்டைமணிமாலை:—** இவர்களியற்றிய நூல்களுக்குள் மிக்க அழகும், தெய்வச் செந்தமிழ்ப் பற்றும் நிறைந்து விளங்குவது. வெண்பாவும் கலித்துறையுமாகிய இருபது பாடல்களால் ஆக்கப்பெற்றது. தமிழ்ப் பற்று கலைமகளை, திருமாலை, பிரமனை, பிறதேவர்களை மக்களாகப் பிறக்கச்செய்தது என்று செப்புகிறது. தமிழ் ஆண்மொழி என்றும், ஆட்சிமொழி என்றும்; தமிழும் வடமொழியும் உயிர் உடல்; சூரியன் சந்திரன்; தந்தை தாய்; சிவம் சத்தி; வலக்கண் இடக்கண்; சீவன் உடல் எனவும் உவமித்த அழகு சிந்தித்தற்குரியது. தமிழ்ப் பற்றுடைய புலவர் பெருமானுக்கு இந்த இருபது பாடலுமே எல்லா வகையினும் இன்பமளிப்பது. இன்னும் இவர்கள் இயற்றிய உரைநடை நூல்களும் பல.

உ

குருபாதம்

# ஆதீனத் தொடர்புடைய பிறநூல்கள்

1. தசமணிமாலை:—நிரம்பவழகிய தேசிகரால் ஆதீன முதற் குரவராகிய குருஞானசம்பந்தர்மீது பாடப்பெற்ற தோத்திர நூல். 10 ஆசிரிய விருத்தங்கள் கொண்டது. ஆ! ஆ!! இதென்ன தெய்விகம்! இது ஆரிடத்துண்டு! பண்டுமிலை என்றுமிலை இதற்கிணை யென்று யாவரும் கூறுமாறு எழுந்தருளியிருக்குங் குருமூர்த்திகளது நாளோலக்கச் சிறப்புக் கூறப்படுகின்றது.

2. தோத்திரப்பாடல்:— ஆறாவது அருட்குரவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ திருஞானசம்பந்ததேசிக சுவாமிகளது அருட்பிரபாவத்தை விளக்கிக்காட்டுவது. 22 வெண்பாக்களாலாயது. திருவாரூர் சிதம்பரநாத முதலியார் என்பவரால் பாடப்பெற்றது. சைவ சித்தாந்த உண்மைப் பொருளையுங் கூறுவது.

3. பஞ்சரத்தினம்:— பத்தாவது குருமுதல்வர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞானதேசிக சுவாமிகளது திருவருட்டன்மையினை வியந்து உரைப்பது. ஆறு ஆசிரிய விருத்தங்களாலாயது. நூலியற்றினர் அந்தகக்கவி வீரராகவமுதலியார் ஆவர்.

4. சிவஞானதேசிகர் நான்மணிமாலை:— வெண்பாவும், கலித்துறையும், விருத்தமும், அகவலும் அந்தாதித் தொடையாக மண்டலித்துவர நாற்பது பாக்களால் ஆக்கப்பட்டது. சொற்சுவை பொருட்சுவை நிறைந்தது. ஒவ்வொரு செய்யுளிலும் சைவசித்தாந்தசாரம் அமைந்திருப்பது. படிப்பார்க்குக் குருபக்தி, அடியார்பக்தியினைப் புகட்டுவது. குருமூர்த்திகள் செய்தருளிய பற்பல சித்திகள் விளக்கப்பட்டுள்ளன.

5. சச்சிதானந்ததேசிகர் மாலை:— மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களால் இயற்றப்பட்டது. இதுவும் தோத்திரநூல். 101 கலித்துறைச் செய்யுட்கள் கொண்டது. 16-வது குருமூர்த்திகளான ஸ்ரீ-ல-ஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகளது பெருமையை அறிவிப்பது. கற்பனைத்திறம் பொருந்தியது.

6. தருமைச் சொக்கநாதர் மாலை:— ஆதின மடாலயத்தில் குருமூர்த்திகளது ஆத்மார்த்த பூஜாமூர்த்தியாகத் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சொக்கநாதப் பெருமானது கருணைப் பெருக்கை விளக்கிக்கூறும் தோத்திரநூல். மாயூரம் முத்துசாமிப் பிள்ளையால் இயற்றப்பட்டது. 100 பாடல்கள் கொண்டது.

7. தோத்திரத்திரட்டு:— 23-வது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்மீது பல வித்துவான்கள் அவ்வப்போது பாடிய தோத்திரப்பாக்களின் தொகுதி. குருமூர்த்திகள் திருச்செந்தூர் யாத்திரைக்கு எழுந்தருளியகாலத்து ஆங்காங்கு நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சிகளும் குறிக்கப்பெற்றுள்ளன.

8. சண்முகதேசிகர் ஆற்றுப்படை:— ஞானசம்பந்த பீடத்தில் 24-வது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து ஞான வரசு செலுத்தும் ஞானபானுவாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளிடத்து, செந்தமிழ்ப் புலவர்களை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. 659 அடிகளையுடைய அகவற்பாவாலானது. ஆக்கியோர் திருவையாறு அரசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், வித்துவான், திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை அவர்களாவார்கள்.

9. சண்முகதேசிகர் இரட்டைமணிமாலை:— வெண்பாவும், கலித்துறையுமாக இருபது பாடல்களால் யாக்கப்பெற்றது. 24-வது குருமகாசந்நிதானத்தின் பேரருட்டன்மையினை விளக்குவது. ஆசிரியர் சத்திவேற் பிள்ளை அவர்களாவர்.

உ

சிவமயம்

# கல்வெட்டுக்கள்

1. *கலியுக வருஷம் 4842ல் சகாப்தம் 1663க்கு மேற்செல்லாநின்ற ரௌத்திரி வருஷம் சித்திரைமீ 3உ ஒன்பதாங் குரு மூர்த்தமாக அவதரித்த திருநாவுக்கரசு தேசிக னருள்பெற்ற சிவஞானதேசிக சம்பந்த னருட்செங்கோல் செலுத்தும் நாளையிற் சொக்கநாதசுவாமி பூஜைமடமுந் தம்பிரான்கள் பூஜை மடமுந் தொட்டிக்கட்டுஞ் சித்திரக்கட்டுங் கருங்கல் திருப்பணியாகக் கட்டி நிறைவேறினது.

2. †ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1689 கலியுகவூ 4868 இதன் மேற்செல்லாநின்ற சருவசித்துவூ ஆவணிமீ போஸ்லே வங்சத்தார்களான துளசாமகாராசா சாயபு அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணுகிற நாளையில் ஸ்ரீமல்லாசிகாடேராயரவர்களுக்கு சீகாழிச் சீமை முகாசு நடக்கையில் தருமபுரம் பண்டாரசன்னதி ஸ்ரீ சிவஞானதேசிக சம்பந்தன் அநுக்கிரகத்தைப் பெற்ற முத்துக்குமரசாமித் தம்பிரான் அவர்கள் வயித்தியநாத சுவாமி கட்டளை அதிகாரம் பண்ணுகிற காலத்தில் ரெண்டாம் பிரகாரம் நாலுபுறத்து மதிலும் திருமாளிகைப் பத்தியும் அம்மன் சன்னதி தட்டி சுற்றி மண்டபமும் சாங்கமாகக் கருங்கல் திருப்பணியாய்க் கட்டி நிறவேற்றி அந்தத் திருமாளிகைப் பத்தியின் மேலே நாலுபுறமும் வவ்வால் நெற்றிகட்டி நிறைவேறினது.

---

* தருமபுர ஆதீன மடாலய பூஜைமடத்திலுள்ளது.

† புள்ளிருக்கு வேளூர் அம்மன் சந்நிதியிலுள்ள சித்தாமிர்தத் தீர்த்தப் படித்துறையில் உள்ளது.

3. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகனசகாப்தம் 1692–கலியுகஷு 4871-க்கு இதன் மேற்செல்லாநின்ற விக்றுதிஷு வைகாசிமீ போசலே வங்சத்தார்களான துளசாமகாராசாசாயபு அவர்கள் ராஜ்யபரிபாலனம் பண்ணுகிற நாளையில் ஸ்ரீமல்லாசி காடே ராயரவர்க்குச் சீகாழிச்சீமை முகாசு நடக்கையில் தருமபுரம் பண்டாரசன்னதி ஸ்ரீ சிவஞானதேசிக சம்பந்தன் அநுக்கிரகத்தைப்பெற்ற முத்துக்குமரசுவாமித் தம்பிரான் அவர்கள் வயித்தியநாதசுவாமி கட்டளை அதிகாரம் பண்ணுகிற காலத்தில் தீர்த்தக்கரை நாச்சாரியும் மண்டபமும் சாங்கமாக கருங்கல் திருப்பணியாய் கட்டி நிறைவேறினது.

4. மணக்குடி கோவில் கலியுக வருஷம் 4654 சகாப்தம் 1775 மேல்செல்லாநின்ற பிரமாதீட்ச வருஷம் வைகாசிமீ 23உ தருமபுரம் ஆதீனம் கந்தப்பதேசிகனருளைப்பெற்ற மாசிலாமணித்தேசிகன் நாளையில் சுவாமி கோவில் கட்டி நிறைவேறினது. உ ீடுழி உ



உ

குருபாதம்

ஸ்ரீமத் குமரகுருபரசுவாமிகள் அருளிச்செய்த

(தருமையாதீன நான்காவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த)

மாசிலாமணி தேசிகர் தோத்திரமாகிய

# பண்டார மும்மணிக் கோவை

# நூற்சிறப்பு

தடுத்த பிறவித் தளையாம் விலங்கு தனைமுறித்து
விடுத்த கருணைக் கடன்மாசி லாமணி மெய்ப்புகமாற்
றெடுத்த தமிழ்மும் மணிக்கோவை நித்தந் துதிக்கவல்லார்
எடுத்த சனனத்தி லெய்தாத பேரின்ப மெய்துவரே. 1

உள்ளத் தருணின் றுணர்த்தவென் னுவி லுறைந்தவெள்ளை
வள்ளக் கமலத் தவண்மாசி லாமணி வண்புகழில்
எள்ளத் தனையள வோர்தொடை யாக்கி யிசைத்தனளாற்
கள்ளப் புலன்கொண் டுரைத்தே னலனிக் கவிமுற்றுமே. 2

விரிக்குஞ் சரியையிப் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்கின்று சாத்திய தேமற்றென் றண்டமிழ்நீ
தெரிக்கின்ற போதருள் செய்தது வேசிவ யோகமுண்மை
பரிக்கின்ற ஞானமொன் றேமாசி லாமணி பாலித்ததே. 3

## தருமபுர ஆதீன மடாலயத்தில்



1. மெய்கண்டான் நிலையம் & சாந்தநிலையம்



2. குருமூர்த்தங்கள்
முன்னால் உள்ளது 4-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் ஆலயம்.

உ

குருபாதம்

# பண்டார மும்மணிக்கோவை

## காப்பு

எண்டிசைக்குஞ் சூளா மணிமாசி லாமணிசீர்
கொண்டிசைக்கு மும்மணிக் கோவைக்கும்— கண்டிகைபொற்
பைங்நாகத் தானனத்தான் பாற்கடலான் போற்றவருள்
கைங்நாகத் தானனத்தான் காப்பு.

## நேரிசையாசிரியப்பா

பூமலி சததளப் பொன்னந் தாதுகு
காமர்பீ டிகையிற் கருணையொடு பொலிந்து
விற்றுவீற் றமைந்த விரிதலைப் புவனம்
பாற்பட வகுத்த பழமறைக் கிழவனும்
மதுக்குட முடைந்தாங் கிதழ்க்கடை திறந்து
பிரசமூற் றிருந்து முருகுகொப் புளிப்ப
வண்டுமு துழக்கும் தண்டுழா யலங்கற்
புரவுபூண் டகிலம் பொதுக்கடிந் தளிக்குங்
கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணனும்
அஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட் டன்னமுஞ்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற் றேனமும்
ஆகுபு தனித்தனி யலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட் டம்ம
எம்மனோர் போல வினிதெழுந் தருளிக்
கைம்மா றற்ற கணக்கில்பே ரின்ப
மோனவாழ் வளிக்கு ஞான தேசிகன்
விரிகதிர் பரப்பு மரகதத் தகட்டிற்
சுடர்செய் செம்மணி யிடையிடை பதித்தெனப்
பாசடைப் பரப்பிற் பதும ராசிகள்
சேயிதழ் விரிக்குஞ் செழுமல ரோடையும்
அண்டகோ ளகையு மெண்டிசா முகமுங்

கோட்டுடைத் தடக்கை நீட்டியளந் தென்னச்
சேட்பட நிவந்த செண்பகா டவியுங்
கால்கிளர் விசும்பிற் கற்பகா டவிக்கு
வேலியிட் டன்ன வியன்மணிப் புரிசையும்
மருங்குசூழ் கிடந்த வண்டமிழ்க் கமலைப்
பெரும்பதி புரக்கும் பேரருட் குரிசில்
நான்மறை நவின்ற நற்பொரு ளிவையென
மோனவா சகத்தான் முப்பொரு ணவிற்றுபு
நன்னலம் புரியு ஞானப் பிரகாசன்
இன்னருள் பழுத்த செந்நெறிச் செல்வன்
திருக்கிளர் ஞானத் திருந்திழைக் கணியாம்
அருட்பெருஞ் சைவத் தருங்கல னுப்பண்
ஆசற விளங்கு மாசி லாமணி
அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்
துள்ளதன் படிவ முணர்த்துவ கடுப்ப
மாநிலத் தமர்ந்த ஞானசம் பந்தன்
பொன்னடிக் கமலஞ் சென்னிவைத் திறைஞ்சுதும்
இருகால் சுமந்த வொருபெருஞ் சேவகத்
தைம்புலக் களிறுந் தம்புலத் திழுப்ப
ஊனிடைப் பிறவிக் கானகத் துழலா
தேனைய முத்திநா டெய்தவோர்
ஞான வாரண நல்குதி யெனவே. 1

### நேரிசை வெண்பா

என்வடிவ நின்வடிவாக் கொண்டா யெளியேற்குன்
றன்வடிவ நல்கத் தகுங்கண்டாய்—மன்வடிவால்
வெம்பந்த நீக்கும் விமலநீ மெய்ஞ்ஞான
சம்பந்த னென்பதனாற் றான். 2

### கட்டளைக் கலித்துறை

தானின் றெனைத்தனக் குள்ளே யொளிக்குமென் றன்மைநிற்க
யானின்ற போதெனக் குள்ளே யொளித்திடு மிப்பரிசே
வானின்ற சின்மய மாமாசி லாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணே னிதற்கொத்த நன்மணியே, 3

## நேரிசையாசிரியப்பா

மணிவடஞ் சுமந்த புணர்முலைக் கொதுங்கி
ஈயா மாக்க டமொழி கவர்ந்த
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கரைகொன் றிரங்குந் திரைசெய்நீர்ப் பட்டத்து
மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சீராட் டயரு நீராட் டயர்ந்து
புலவியிற் றீர்ந்து கலவியிற் றிளைக்கும்
நீரர மகளிர் பேரெழில் காட்ட
மருதம்வீற் றிருந்து பெருவளஞ் சுரக்குந்
தருமையம் பதிவாழ் சற்குரு ராய
ஒள்ளொளி பரப்பும் வெள்ளிவே தண்டத்
தொருபாற் பொலிந்த மரகதங் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் கடவுண்மா மணிக்கு
விளங்கெழின் மிடற்றோர் களங்கமுண் டென்பவக்
காசுலா மலினங் கரந்தகா ரணத்தால்
மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோ டமர்ந்த ஞானசம் பந்த
ஈண்டுனைத் தமியனேன் வேண்டுவ தியாதெனின்
அந்நிய மென்று மநந்நிய மென்றும்
இந்நிலை யிரண்டு மெய்திற் றென்றும்
பல்வே றுரைக்குநர் சொல்வழிப் படாது
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்
திறவா நிலைமைபெற் றின்பமார்ந் திருக்கும்
பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே
அங்கது புரிதற் கரிதெனி னிங்கொரு
சனனமியான் வேண்டுவ தினிதரு ளெனக்கே, அதுவே
ஐந்தரு நிழற்கீ ழரசுவீற் றிருக்கும்
இந்திர னாகிவாழ்ந் திருப்பதோ வன்றே
மலரோ னாகி மன்னுயிர்த் தொகுதி
பலர்புகழ்ந் திசைப்பப் படைப்பதோ வன்றே
அடலரா வணையி லறிதுயி லமர்ந்த
கடவுளா யுலகங் காப்பதோ வன்றே, அவைதாம்
ஆரா வின்பமென் றரும்பெயர் பெறினும்

வாரா வல்வினை வருவிக் கும்மே
அன்னவை யொழியமற் றென்னைகொல் பிறவெனின்
விழுத்தகு கல்வியு மொழுக்கமு மிலராய்ப்
பழிப்புள ராயினு மாக வழுத்துநின்
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகல மாந்தியிப் பவக்கட லுழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையு மயரா தவதரிப் பதுவே. 4

### நேரிசைவெண்பா

அவமாசி லாமனத்தார்க் காருயிரா ஞான்றேற்
பவமாசி லாமணிச்சம் பந்தா—தவமார்
தகியருளத் தானேநின் சந்நிதிப்பட் டேற்குக்
கதியருளத் தானே கடன். 5

### கட்டளைக் கலித்துறை

கடல்பெற்ற தோர்மணி சிந்தித்த நல்குங் கருத்துக்கெட்டா
மிடல்பெற்ற பேரின்ப நல்கிய வாவருள் வேலைபெற்றென்
உடல்பெற்ற கண்மணிக் குண்மணி யாகியொண் கூடல்வைகும்
அடல்பெற்ற ஞானச் சுடர்மாசி லாமணி யானதொன்றே. 6

### நிலைமண்டிலவாசிரியப்பா

ஒன்றே தன்மை யுனக்குமற் றெமக்கும்
அன்றென மொழியினு மாமெனப் படுமே
அங்ஙனங் கூறிய தெங்ஙனம் பிறவெனின்
எஞ்ஞான் றுளையுள மஞ்ஞான் றியாமே
அழியா நிலைமையை யனையம் யாமே
வியாபக நினக்குள தியாமுமஃ துளமே
அறிவெனப் பெயரிய பெயரினை யப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
இச்சா ஞானக் கிரியையென் றிசைக்குஞ்
சத்திக ளனையுள தத்திற மெமக்கே

இங்கிலே முழுவது உ மெமக்குமுண் டாகலின்
அங்கிய மலகினக் ககிய மியாமே
தருமையுங் கமலேயும் விரிதமிழ்க் கூடலுந்
திருநக ராக வரசுவீற் றிருக்கும்
மாசி லாமணித் தேசிக ராய
சம்பந் தப்பெயர் தரித்தமை யாலெமைச்
சம்பந் தஞ்செயத் தகுந்தகு கினக்கே
கருவிகட் கிறைமை காட்டுபு கிற்றலிற்
புருட நாமம் புனேந்தன மாயினும்
அத்தகிற் குறிப்பிற் சத்திகள் யாமே
புருடனேச் சத்தியிற் புணர்த்தனே யன்னதற்
கொருகாட் டென்ப புருடோத் தமனே
உன்னுட னெம்மையு மொப்பெனப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில
முழுவது மொவ்வா தொழியினு மொழிக
உயர்ந்தோன் றலேவ னெத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினு மிழிபெனப் படாதே
ஆதலின் யாமுனேக் காதலித் தனமாற்
காதலி னெமையருட் கைப்பிடித் தருளி
ஒருவரு முணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்
துயர்நா தாந்தத் திருமல ரமளியிற்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவா ரமுத பானம தருந்திக்
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து
பேரா வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா வின்ப மளித்தரு ளெமக்கே. 7

**நேரிசைவெண்பா**

எம்மா ருயிரா மெழின்மாசி லாமணியை
அம்மா பெறுதற் கரிதன்றே—சும்மா
இருந்தாரே பெற்றூர்மற் றெவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றூர் மணி. 8

### கட்டளைக் கலித்துறை

மணிகொண் டவர்தம் பொருளாவ தன்றியம் மாமணியாம்
அணிகொண் டவரைக்கொண் டாள்வதுண் டேயருட் கூடல்வைகுங்
கனிகொண்ட கொன்றைத் தொடைமாசி லாமணி கண்டவுடன்
பணிகொண்டு தொண்டுங்கொண் டாளுங்கொள் வோமென்று பார்க்கு
[முன்னே. 9

### நிலைமண்டிலவாசிரியப்பா

முற்படு மாயை முதற்கரை நாட்டிற்
பற்பல புவனப் பகுதி பற்றி
ஈரிரு கண்ணுற் றெழுதரம் வகுத்த
ஆறே ழிரட்டி நூறு யிரத்த
செயற்படு செய்களி னுயிர்ப்பயி ரேற்றி
ஊழெனப் பட்ட தாழ்புனற் படுகரிற்
றெய்விக முதலாச் செப்புமும் மதகும்
ஒவ்வொரு மதகா யுடனுடன் றிறந்து
தாக மென்னுந் தனிப்பெருங் காலிற்
போக மென்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயுமைம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துட னகித மெனுமிரண் டுற்றிற்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத் தோட
வார்புன லதனை மந்திர முதலா
ஓரறு வகைப்படு மேரிக ணிரப்பி
விளைவன விளைய விளைந்தன வறுத்தாங்
கொருகளஞ் செய்யு முழவ னாகி
மாநிலம் புரக்கு மாசி லாமணி
ஞானசம் பந்த ஞான தேசிக
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவய லுப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவ மதனிற் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே இலையோரி இத்

தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
அவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னாயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனால்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே. 10

### நேரிசை வெண்பா

விண்புரக்குஞ் சிந்தா மணியென்கோ மெய்ச்சுடரால்
மண்புரக்குஞ் சூளா மணியென்கோ—பண்பார்
திருமா முனிவர் சிகாமணியென் கோசீர்
தருமாசி லாமணியைத் தான். 11

### கட்டளைக் கலித்துறை

தானவ னாகிய தன்மைபெற் றானடி தாழப்பெற்றாற்
றானவ னாகிய தன்மைபெற் றுய்வனத் தன்மையின்றித்
தானவ னாகிய தன்மைபெற் றேற்கரு டாழ்சடிலத்
தானவ னாகம் பெருமாசி லாமணிச் சம்பந்தனே. 12

### நேரிசையாசிரியப்பா

பந்தனை தவிராச் சிந்தனை நிகர்ப்பப்
பாயிருள் பரந்த மாயிரும் பொழிலிற்
கொளற்குரி மாந்தர்க் களித்தல் செய்யா
தரும்பூண் சுமந்த வறிவி லாளரிற்
சுரும்பூண் வெறுத்த துதைமலர் வேங்கை
தன்மருங் குறீஇப் பொன்மலர் பிலிற்ற
இலையறப் பூத்த துதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புல னோக்கார் கட்புலன் கடுப்ப
இமையா வறுங்கண் ணிமைத்தபைங் கூந்தற்

பசுந்தார் மஞ்ஞை யசைந்தமர் தோற்றம்
பொற்றுணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண் டுண்ணு நறுமலர் தூற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்
கவளங் கொள்ளாத் தவளமால் களிற்றிற்
கண்பல படைத்த கார்முகில் வண்ணத்
திந்திரன் பொலியு மெழினலங் காட்டுந்
தண்பணை யுடுத்த தமிழ்ப்பெருங் கூடல்
வண்பதி புரக்கு மாசி லாமணி
தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட னுய வடிவுகொண் டருளாது
மானிட னுய வடிவுகொண் டருளி
எற்பணி பூணு தெற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர
ஆரூ ரமர்ந்த ஞானசம் பந்த
நிற்புகழ்ந் திறைஞ்சுங் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பற் றிருப்ப ரென்ப
பொருட்டுணி புணர்ந்த புலமை யோரே
இகபர மிரண்டினு மெதிர்நிறை கொளினுந்
தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கொளினும்
முன்னவர் மொழிந்ததற் கன்னிய மாகலின்
விருப்பு வெறுப்புள வாய
கருத்தின ராகவுங் கண்டனம் யாமே. 13

நேரிசைவெண்பா

கண்ணிற் கணியாங் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற் கணியாப் பகர்வரா—லெண்ணுங்காற்
பன்னூலிற் கோக்கப் படுமணியன் றிம்மணிமற்
றிந்நூலிற் கோக்குமணி யென்று. 14

கட்டளைக் கலித்துறை

என்வச மாகநில் லாதநெஞ் சாமிரும் பைக்குழைத்துத்
தன்வச மாக்கொண் டிழுக்கின்ற தாற்றெண்டர் தம்மையருண்
மன்வச மாகச் செயுமாசி லாமணி மாமணிக்குப்
பொன்வச மாகச்செய் காந்தமென் றேசொலப் போந்ததுவே. 15

## நேரிசையாசிரியப்பா

போந்தையங் கண்ணி வேந்துவிற் பொறித்த
மன்பெருங் கிரியின் மென்கரும் பெழுதித்
தேசுலாம் பசும்பொற் சிகரமந் தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச் சிறுக்கிக்
கடாம்பொழி கரடக் களிநல் லியானைப்
படாம்புனைந் தென்னப் பைந்துகில் போர்த்துப்
பிதிர்சுணங் கலர்ந்த கதிர்முலை மடந்தையர்
விட்புலத் தவர்க்குங் கட்புலன் கதுவாச்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பிற்
சுவல்கைத் தாங்குபு மதியணந்து பார்க்கச்
சேணிகந் தோங்கும் யாணர்செய் குன்றத்
தாடகத் தியன்ற சூடகக் கரத்தால்
மாடக்த் திவவியாழ் மருமமீ தணைத்து
மூவகை நிலையத் தேழுசுர நிறீஇக்
கொவ்வைவாய் திறந்து குயிலென மிழற்றுபு
மென்னரம் புகிரான் விரன்முறை தடவிக்
கின்னரம் வியக்குங் கீதம் பாட
நகைநில வெறிக்கு முகமதி காணுஉச்
சந்திர காந்தத்திற் சமைத்தசெய் குன்றம்
மைந்தர்போன் றுருகி மழைக்கணீர் சொரியப்
பல்வளஞ் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை
நல்வளம் பதிவாழ் ஞானசம் பந்த
பாசமா மிருட்கோர் படர்மணி விளக்கெனும்
மாசி லாமணித் தேசிக ராய
சாற்றுவன் கேண்மதி மாற்றமொன் றுளதே
மெய்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார
மொழிதடு மாற வுழுவலன் பலைப்பச்
சத்திநி பாதத் தன்மைவந் தடைந்தோர்க்
கப்பொருள் புரிதற் கதுபொழு தாகலின்
மெய்ப்பொரு ளுணர்த்துதல் வியப்பெனப் படாதே
சொற்றமிழ் விரகன் றுணைக்கண் சாத்த
முற்றுணர் கேள்வியர் பற்பல ராயினுங்
கைசொலக் கேட்குங் கட்செவி மூங்கைக்

குய்வகை புணர்த்த தொருவியப் பாகலின்
அன்னது கடுப்பநின் சந்நிதி விசேடத்
தின்னருள் பெருதவர் யாவரு மிலரென
வியப்புள தாகவு நயப்பதொன் றுளதே
அனையதிங் கென்னென வினவுதி யாலெனிற்
கதலித் தண்டிற் பொதிதழல் கொளீஇப்
பற்று திருப்பினும் பைப்பைய மூட்டுபு
மற்றொரு சூழ்ச்சியிற் பற்றுவித் தாலென
ஒருசிறி தெனினும் பருவமின் றாயினும்
பவவிரு டுரந்தருள் பதியத்
தவமில் பேதையேன் றனக்கருள் வதுவே. 16

நேரிசை வெண்பா

தன்னேரி லாஞான சம்பந்தன் றாளடைந்தார்க்
கென்னே யிருள்வெளியா மென்பரா—லன்னோன்
அருளாத போதுவெளி யாயிருந்த வெல்லாம்
இருளா யிருந்த வெனக்கு. 17

கட்டளைக் கலித்துறை

என்செய லாலொன்று யான்செய்வ தில்லை யெனக்கவமே
புன்செய லாம்வினைப் போகமுண் டாவதென் போதமில்லேன்
தன்செய லாயவெல் லாமாசி லாமணிச் சம்பந்தநின்
நன்செய லாயினு மென்செய லாச்செய்யு நானென்பதே. 18

நேரிசையாசிரியப்பா

நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ
நூன்முறை பயின்ற நுண்மைசா லறிஞ
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்குங் காவியப் புலவ
செவிதொறுஞ் செவிதொறுந் தெள்ளமு தூட்டுபு
கவிஞர்வயி னிரப்புங் கல்விப் பிரசங்க
வெள்ளிடைத் தோன்று துள்ளத் துணர்த்தவுஞ்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவுஞ்
சாயா மும்மலச் சகலரே முய்ய

எம்முருக் கொண்டு மெம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடு மகழ்ந்து
சிற்பர முணர்த்துஞ் சற்குரு ராய
பளிங்கினிற் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட் டயர்தரக்
கொங்குவார் குழலுங் குவளைவாள் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந் தொளிர்தலிற்
சைவலம் படர்ந்து தடங்கய லுகளுஞ்
செய்யபூங் கமலச் செழுமல ரோடையென்
றுடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர்மற்
றம்மெ லோதி யரம்பைய ராதலின்
நீர்நிலை நிற்றிரா னீரவர் தங்களுள்
யார்கொல் யார்கொ லிசைமி னிசைமினென்
றிறும்பூ தெய்தி யிரந்தன ரிசைப்ப
மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்தாங்
கையுற வகற்று மணிமதிற் கமலை
நன்னகர் புரக்கு ஞான தேசிக
ஆசிலா வண்புக ழணிநிலா வெறிக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த
என்பொருட் டாயினு மென்பொருட் டன்றிது
நின்பொருட் டொருபொரு ணிகழ்த்துவன் கேண்மோ
வறிஞ னேம்பிய செறுவொன் றேய்ப்பப்
பருவ நோக்காப் பவந்தொறும் பவந்தொறும்
இருவினைப் போகமு மெற்கொண் டார்த்துபு
மற்றென் னுருக்கொடு முற்றனை யாலினித்
தாகமின் றுகலிற் பாகமின் றெனக்கென
வருளா தொழியினும் பரிபவ நினக்கே
சேய்முகம் பாராள் சினந்தன ளேகினும்
போயெடுத் தாற்றுமத் தாய்மீட் டன்றே
ஆதலி னெனைப்போ லடிக்கடி தோன்றலை
ஈதியா லின்னரு ளின்னண மெனக்கே
சமையந் தீர்ந்த தனிப்பொரு டெரித்தற்
கமையந் தேர்கலை யருளுதி யாயினும்

எண்ணி ராண்டைக் கிலக்கமிட் டிருந்த
அண்ணலங் குமரற் காருயிர் தோற்ற
கடாவிடை யூர்திபாற் கண்டும்
அடாதென மொழிகுரு ரார்கொன்மற் றுணையே. 19

### நேரிசைவெண்பா

ஆரூரே யூர்பே ரருண்மாசி லாமணியென்
றேரூர்பே ரில்லாற் குரைத்தேற்குப்—பாரேறப்
பொய்யென்றான் மெய்யென்றான் பொய்யான பொய்யுடலை
மெய்யென்றான் பொய்யென்றான் மீண்டு. 20

### கட்டளைக் கலித்துறை

மீளா மணிமந் திரமருந் தாற்சென்ம வெவ்விடநோய்
வாளா மணியொன் றினன்மீண்ட வாவம் மணிபிறர்கொண்
டாளா மணியெமை யாட்கொள்சிந் தாமணி யைந்தவித்தோர்
சூளா மணிமெய்ச் சுடர்மாசி லாமணி சூழ்ந்திடினே. 21

### நேரிசையாசிரியப்பா

சூழ்போய் நிவந்த வாழ்கட லுலகத்
தின்னருட் டிறத்தா லிடைமரு தமர்ந்த
பொன்னவிர் கடுக்கைப் புரிசடைப் புங்கவன்
அமையாக் காத லிமையவல் லிக்கு
வழிபடன் முறைமை விழுமிதி னுணர்த்தத்
தானே தன்னைப் பூசனை புரிந்தென
அருத்தியோ டெம்மைநம் முருத்திர கணங்கள்
தெரித்துமற் றிவ்வா றருச்சனை புரிதிரென்
றங்கயற் கண்ணி பங்கில்வீற் றிருந்த
செக்கர் வார்சடைச் சொக்கநா யகனை
ஈரெண் டிறத்துப சாரமும் வாய்ப்பப்
பூசனை புரியுந் தேசிக ராய
மழைக்குலந் தழைப்பத் தழைத்ததிம் பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுட் கிடந்த
முட்புறக் கனிகள் விட்புறக் காண்டலுஞ்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று

கீண்டுபொற் சுளைபல தோண்டுவ தம்ம
முற்பக லொருவர் பொற்குட நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழா மனைத்தும்
வஞ்சகம் பழகு மஞ்சனக் கள்வர்
கண்டுகண் டெடுக்குங் காட்சித் தன்ன
தண்டலை வளைஇத் தடமதி லுடுத்த
தேசுலாங் கமலைத் திருநகர் புரக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த
வாக்கு மனனும் யாக்கையு மொன்றுய்ச்
சொற்றரு கரண மற்றிவை மூன்றும்
நின்புகழ் நவிற்றியு நினைத்துநின் றுணைத்தாள்
அன்புட னிறைஞ்சியு மின்பமுற் றனவால்
அவகர ணங்களே யல்லமற் றம்ம
சிவகர ணங்களாய்த் திரிந்தன வன்றே, அதனுற்
றிரிகர ணங்களென் றுரைசெயு மப்பெயர்
ஒருபொருட் கிளவியெல் லோர்க்கும்
இருபொருட் கிளவியா யிருந்ததின் றெனக்கே. 22

### நேரிசை வெண்பா

எற்கமலஞ் செய்யு மெழின்மாசி லாமணிதன்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
ஊரிற் குறுகினே னேர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின். 23

### கட்டளைக் கலித்துறை

பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்கறுத்தோர்
சின்னம் படைத்த முனிமாசி லாமணிச் சித்தரியாம்
இன்னம் படைத்தவ ரேது பெருரமு திங்கெமக்கென்
றன்னம் படைத்தவர் பெற்ருர் புவன மடங்கலுமே. 24

### நேரிசையாசிரியப்பா

அடங்கா வைம்புல னடங்கினர்க் கம்ம
ஒடுங்கா வைம்புல னுளத்தினு முளவே, அவைதாம்
செவிப்புல னறியா வகத்தொலி யொன்றே
மெய்ப்புல னறியாத் தட்பமற் றென்றே

கட்புல னறியாக் கதிரொளி யொன்றே
நாச்சுவை யறியா நறுஞ்சுவை யொன்றே
மூக்குயிர்த் தறியா முருகுமற் றொன்றே
பேரா வின்பமிப் பெற்றியிற் றிளைக்கும்
ஆரா வின்பமொன் றூர்ந்தனம் யாமே, அதுவே
கரையெறிந் தார்க்கும் பொருபுனற் படுகரிற்
பனிலமீன் றளித்த மணிநிலாப் போர்ப்பத்
தருணவெள் ளெகினந் தன்னகத் தடங்க
அருண முண்டக மகவிதழ் முகிழ்ப்பது
தெண்டிரை யுடுத்த திம்புனன் மடந்தை
வெண்டுகிற் படாஅம் விரித்தனள் போர்த்து
வள்ளவாய்க் கமல மலர்க்கையால் வளைத்துப்
பிள்ளைவெள் ளெகினம் பிடிப்பது கடுக்கும்
காசுலாம் பசும்பொற் கடிமதிற் கமலை
மாசி லாமணி ஞானசம் பந்தனென்
றருந்தவர் துதிப்பவோர் பெரும்பெயர் நிறீஇப்
பரமா னந்தப் பரவையுட் டோன்றிய
இன்பவா ரமுதமவ் வமுதம்
அன்பருக் கெளிதெளி தரிதுவிண் ணவர்க்கே. 25

நேரிசை வெண்பா

விண்மணியாய்க் காண்போர் விழிக்குட் பொலிந்ததுளைக்
கண்மணியாய் நின்றெவையுங் காட்டுமா—லொண்மணிச்சூட்
டம்மா சுணந்த னணிமுடிமேற் கொண்டிருந்த 26
இம்மாசி லாமணிமற் றின்று.

கட்டளைக்கலித்துறை

இன்றோர் வியப்புள தான்மாசி லாமணி யென்றிருப்ப
தொன்றோர் மணிகண் டவர்பல ராலதற் கோர்மருங்காய்
நின்றோர் பலபல பேதங்க ளாச்சொல்வர் நீக்கமறச்
சென்றோர்மற் றிம்மணி செம்மணி யேயென்று செப்புவரே. 27

நேரிசையாசிரியப்பா

ஏழுயர் மும்மதச் சூழிமால் யானை
தடம்புனல் குடைந்து படிந்தெழுந் துழக்கத்

தெண்டிரை சுருட்டுங் குண்டகழ் வாவியிற்
பங்கயத் தவிசிற் பசும்பொற் றுதளொங்
தங்கம் வேறுபட் டரசனம் பொலிதலும்
ஆவலிற் படர்ந்த சேவல்கண் டயிர்த்தநம்
பேடையன் றிதுமல ரோடையு மன்றே
படரும்வெண் டாமரை படர்ந்ததை யன்றிது
கடவுள ரமுதங் கடைந்தபாற் கடலே
காந்துவெங் கனற்கட் களிறுமன் றிதுகடற்
சாய்ந்தெழு மந்தரத் தடங்கிரி யதுவே
போகுவா லுறுப்பும் புழக்கையுந் தைவரு
பாகரோ வாசுகி பற்றும்வா னவரே
பொங்கிவெண் ணிலவு பொழிந்தவெண் டரளமன்
றிங்கிது வங்கதி லெழுந்தவா ரமுதே
கொடிவிடு பாசடைக் குழாமன் றிங்கிதக்
கடலிடைத் தோன்றிய கற்பகா டவியே
சேயிதழ் விரிக்குஞ் செந்தா மரையிதன்
றுயதன் வடிவமா யமர்ந்தமா நிதியே
சங்கமன் றிதுவதன் றனிப்பெயர் நிதியே
செங்கிடை யன்றிது சிந்தா மணியே
யாதலி னமதுபேட் டன்னமு மன்றிதப்
போதிலங் குதித்த பொலங்கொம் பன்றே
என்றுள மருளவோ ரெழினலம் பயக்கும்
மன்றலம் பணைசூழ் மருத வேலிப்
பொன்மதிற் கமலை நன்னகர் புரக்குந்
தேசிக ராய சிற்பர முதல்வ
மாசி லாமணி ஞானசம் பந்த
எனையாட் கொள்ளவந் தெய்தினை யாகலின்
முனியா தொன்றிது மொழிகுவன் கேண்மதி
கற்றன ராயினுங் கல்லா ராயினும்
அற்றனம் யாமென வடைந்தனர் தமையெனிற்
காலம் பாரார் கருத்தினை யளவார்
சீல நோக்கார் திக்குணங் கொள்ளார்
பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே
நன்னெறிப் படரா நலமிலி யாயினுஞ்

செந்நெறிப் படர்ந்தநின் சீர்புனைந் தேத்தலிற்
சத்திநி பாதநின் சந்நிதிப் பட்ட
இத்திறத் தெளிதினி லெய்திய தெனக்கே, அதனால்
சரியையிற் ருழ்க்கலே கிரியையிற் பணிக்கலே
யோகத் துய்க்கலே பாகமு நோக்கலே
நாளையின் றெனவொரு வேளையு நவிற்றிலே
ஈண்டெனக் கருளிதி யிறைவ
பூண்டுகொண் டிருப்பனின் பொன்னடித் துணையே. 28

நேரிசை வெண்பா

பொன்னேயல் லாமற் பொருளோ டடலுயிர்விற்
றென்னே மணியொன் றெவர்கொள்வார்—கொன்னே
குருமாசி லாமணியைக் கொள்வோர்கொள் ளார்முன்
றருவார்மற் றிம்மூன்றுந் தான். 29

கட்டளைக் கலித்துறை.

தருமணிக் கோவைத் தகுஞான சம்பந்தன் றண்கமலக்
குருமணிக் கோவை நிகர்மாசி லாமணி கோத்திடலால்
ஒருமணிக் கோவையிம் மும்மணிக் கோவையொண் சங்குகஞ்சம்
பொருமணிக் கோவைப் பொருளாக்கொள் ளாரிது பூண்டவரே. 30



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
கொலுவிற்றிருக்குங் காட்சி

உ

குருபாதம்

# பண்டார மும்மணிக்கோவை

## ஆராய்ச்சி

### முன்னுரை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் நான்காம் பட்டத்தில் எழுந்தருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள்மீது ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாடிய இனிய செந்தமிழ் நூலாகும் இப்பண்டார மும்மணிக் கோவை என்பது. இது படிக்குந்தோறும் படிக்குந்தோறும் செஞ்சொற் கவியின்பம் சிறப்ப அளிக்கும் சீர்மையுடையது; சித்தாந்த சைவப் பெருநூல்களிற்காணும் நுண்மாண் பொருளை இடையிடையே படிப்போர் சிந்தையில் பதியவுரைக்கும் பண் புடையது; திருவாரூர், மதுரை, தருமபுரம் என்ற இம் முப்பெரும் பதிகளின் இயற்கை யழகு தெரிக்கும் இன்பச் சொல்லோவிய மாவது; இவ்வனைத்திற்கும் தலைமையாக எங்கள் ஞானதேசிகராக இப்போது எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ** சண்முகதேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஞானவள்ளன்மை இவ் வாதீனத்தின் வழி வழியாக வந்து நிலவும் மகாசந்நிதானங் களின் உயர் பண்பென்பதை நிறுவும் பிரமாணநூலாக இலங்குவதென்பது சால்பு.

இனி, பண்டார மும்மணிக்கோவை யென்பதில் மும்மணிக் கோவை என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. மூன்றுவகையான பாக்களால் அந் தாதித் தொடையமையப் பாடுவது. அவை அகவல், வெண்பா,

கட்டளைக்கலித்துறை என மூன்றாகும். இதன் செய்யுட்டொகை முப்பது. இதற்குரிய இலக்கணத்தை இலக்கண விளக்கம் என்னும் நூல்,

> "அகவல் வெண்பா அசையெண் கலித்துறை
> தொகைமுப் பதுபெறச் சொற்றொடர் நிலையில்
> கூறுதல் மும்மணிக் கோவை யாகும்" (பாட். 55)

என்று கூறுகின்றது. இந்நூலின் பாட்டுடைத் தலைவரான ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக மூர்த்திகள் ஆதீன மகாசந்நிதான குருமூர்த்திகளாதலால், அவர்கட்குப் பொதுவாக வழங்கும் பெயரால் இந்நூல் பண்டார மும்மணிக்கோவை யெனப் பெயர் பெறுவதாயிற்று.

## நூல்வரலாறு

பண்டார மும்மணிக்கோவை யென்னும் ஞான பண்டாரத்தை ஆராய்தற்குமுன், அஃதெழுந்த காரணத்தைக் காண்டல்முறையாம். பாண்டியநாட்டுக் கயிலாயபுரத்தில் தோன்றிச் செந்தில் முருகன் திருவருணலம் பெற்றுச் செந்தமிழ்ப் புலமையுஞ் சித்தாந்த சைவப் பேரொழுக்கமுஞ் சிறக்கக் கொண்டு திகழ்ந்து போந்த ஸ்ரீ குமரகுருபரர், சோழநாட்டுத் திருப்பதிகள் பலவற்றையும் தரிசித்து வருபவர், திருவாரூர் போந்து தியாகேச வள்ளலைத் தரிசித்துப் பரவித் திருவாரூர் நான்மணிமாலையைத் தேன்சொரியப் பாடிச் சிந்தை களித்து மகிழ்ந்து உறையும் நாளில், தருமை யாதீன மகாசந்நிதான மாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக சுவாமிகளின் ஞான வண்மையும் அதனை வழங்கும் கொடைமையும் கேள்வியுற்று, அவர்திருமுன் அடைந்து, திருவடிகளைச் சென்னியுற வணங்கி நிற்ப, ஞானபானுவாய் எழுந்தருளியிருந்த மகாசந்நிதானம் திருக்கடைக்கண் சாத்தியருளிச் சீரிய ஞானமணங் கமழும் திருமொழிகள் பகர்ந்து "நீவிர் சென்று காசியாத்திரை செய்து வருக; பின்னர் ஞானோபதேசம் செய்வோம்" என்று அருளாணையிட்டருளினர். அதனை சிரமேற்கொண்டெழுந்த குமரகுருபரர்

"அவ்வண்ணமே செய்து திரும்புங் காறும் அடியேன் உடல் நிற்குமோ" என்று ஐயுற்று மொழிய, அருள்ஞான வாரிதியாகிய மகாசந்நிதானம், "அன்றேல், தில்லையம்பதியில் சின்னாள் இருந்து வருக" எனப் பணித்தருளினர். அதுகேட்டுப் பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கி யின்புற்ற குமரகுருபர அடிகள் அவ்வாறே செய்து போந்தனர். ஞானதேசிகர் அவரை அன்புகனிய வரவேற்று அருள் நிரம்பிய மொழி மொழிந்து சிந்தை தெருளத் திருநோக்கம் செய்தருளினர். அப்பார்வை, குமரகுருபரருடைய மனமொழி மெய்கள் முறையே என்புநெகவுருகி, அமிழ்து பொதி செஞ்சொல் அன்பால் குழற, அடிவீழ்ந்து வணங்கி வழிபடச் செய்தது. அதன் விளைவாய் எழுந்த சாத்திரநூலே இப் பண்டார மும்மணிக்கோவை யாவது.

## நூலின் நோக்கம்

இவ்வரலாற்றால், நூலாசிரியராகிய குமரகுருபர சுவாமிகள் இக்கோவை நூல் பாடியதன் நோக்கம் ஞானதேசிகர்பால் ஞானோபதேசம் பெறுதல் வேண்டுமென்பது இனிது விளங்கும். இதனை,

" ... ... ... ... ஞானசம்பந்தன்
பொன்னடிக் கமலம் சென்னிவைத்து இறைஞ்சுதும்
இருகால் சுமந்த ஒருபெருஞ் சேவகத்து
ஐம்புலக் களிறும் தம்புலத்து இழுப்ப
ஊனிடைப் பிறவிக் கானகத் துழலாது
ஏனைய முத்திநாடு எய்த ஓர்
ஞான வாரணம் நல்குதி யெனவே" *(1)*

என்றும்,

"மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோடு அமர்ந்த ஞானசம்பந்த
ஈண்டு உனைத் தமியனேன் வேண்டுவது யாதெனின்
... ... ... சைவசித்தாந்தத்து

இறவா நிலைமைபெற்று இன்பமார்ந்து இருக்கும்
பிறவா நன்னெறி பெறப்புரிவதுவே" (4)

என்றும்,

"ஞானவா ரமுத பானம தருந்தி
... ... ... ... ...
பரமா னந்தப் பரவையுட் படிந்து
பேரா வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே" (பண். 7)

என்றும்,

"பவவிருள் துறந்து அருள்பதியத்
தவமில் பேதையேன் தனக்கருள்வதுவே" (16)

என்றும்,

"சரியையிற் ருழ்க்கில கிரியையிற் பணிக்கில
யோகத் துய்க்கில பாகமும் நோக்கில
நாளை இன்று என ஒரு வேளையும் நவிற்றில
ஈண்டு எனக்கு அருளுதி இறைவ" (28)

என்றும் வருவனவற்ருல் விளங்கக் காணலாம்.

## ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக ஞானசம்பந்த மூர்த்திகளின் நலம்பாராட்டல்

ஞானேபதேசம் பெறுதலையே நோக்கமாகக் கொண்ட ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், தமக்கு அந்த ஞானத்தை உபதேசித்தருளும் ஞானசாரியராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக குருமூர்த்தியின் குணஞ் செயல்களை வியந்து பாராட்டுகின்ருர். ஞானவேட்கைகொண்டு வரும் பெருந்தகையாகிய குமரகுருபரர், தம்பால் வரும் மாணவர்க்குரிய பக்குவநிலை சத்திநிபாத முதலியவற்றை முற்றவுணர்ந்து அவர் உளங்கொள வுபதேசிக்கும் அருளுரையாற்றல் மகாசந்நிதானத்தின்பால் பெருகியிருத்தலைத் தாம் நேரிற் கண்டு மதிமை சான்ற மருட்கை மீதூர்ந்து செஞ்

சொற் கவிகளால் தேனொழுகப் பாடி நம்மையுந் தம்மோடு கூட்டி அவரை வழிபடச் செய்யுந் திறம் கற்ளுேர்க்கு மிக்க இறும்பூது பயப்பதாகலின், அதனை ஈண்டுச் சிறிது காண்டல் இன்றியமையாதாயிற்று.

ஞானதேசிக மூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தப் பெருமானைக் குமரகுருபரர் தம் மனத்தின்கண் நினைக்கும்போது அவரது அருமைத்தோற்றம் ஞான போனகராகிய எந்தை திருஞானசம்பந்தப் பெருமானது அருள் நிலையை நினைப்பிக்கின்றது. அதனை விடாது பற்றிய அடிகளுடைய உள்ளம், "கைம்மாறற்ற கணக்கில் பேரின்ப, மோன வாழ்வளிக்கும் ஞானதேசிகன்" என்றும், "பேரருட் குரிசில்" என்றும், "அருட்பெருஞ் சைவத் தருங்கல னுப்பண், ஆசற விளங்கும் மாசிலாமணி" என்றும் பாராட்டியும் அமையாது, திருஞானசம்பந்தப் பெருந்தகையின் தோற்றமே தம் உளம் முற்றும் கவ்வி நிற்றலின்,

> "அமண் மாசறுத்த கவுணியர் பெருந்தகை
> பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்து
> உள்ளதன் படிவம் உணர்த்துவ கடுப்ப
> மாநிலத் தமர்ந்த ஞானசம்பந்தன்"

என்று பரவிப் பணிந்தொழுகுகின்றது.

இனி, தருமபுரத்திற் கோயில்கொண் டிருப்பவரும், கமலை ஞானப்பிரகாச தேசிகருக்குச் சீடரும், அத்தேசிகமூர்த்திகளாலேயே 'குருஞானசம்பந்தா'எனச் சிறப்பித்து அழைக்கப் பெற்றவருமான ஸ்ரீ குரு ஞானசம்பந்த தேசிகருக்கு நான்காவது பட்டத்தில் எழுந்தருளி ஞானசம்பந்தர் என்ற சிறப்புப் பெயர் பூண்டு நிற்பதுபற்றி ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை இவ்வாறு கூறினுரென்பர். எனினும் ஞானசம்பந்தர் என்ற பெயர் பூண்டிருத்தலொடு, அப்பெருந்தகையேபோலத் தன் திருவடியுன்னி ஞானம்வேண்டி வந்தடைந்தார்க்கு அத்திரு

வருள்ஞானத்தை வழங்குவது ஒருதலையாதலைக் காண்டலின் அப்பெருந்தகையின் நினைவு தோன்றி நம் குமரகுருபர ருள்ளத்தை இவ்வாறு ஏவல்கொள்வதாயிற்றெனத் தெளிகின்றேம். இக்கருத்தே அடுத்து வரும் பாட்டினும், "மன்வடிவால் வெம்பந்தம் நீக்கும் விமலநீ, மெய்ஞ்ஞான சம்பந்தன் என்பதனுல் தான்" (2) என்பதனுல் வலியுறுவதைக் காணலாம்.

"மாசிலாமணியென வண்பெயர் நிறீஇ, மேன்மையோடமர்ந்த ஞானசம்பந்த" (4), "மாசிலாமணிச் சம்பந்தா" (5) "மாசிலாமணித் தேசிகராய, சம்பந்தப் பெயர்" (7), "மாநிலம் புரக்கும் மாசிலாமணி,ஞானசம்பந்த ஞானதேசிக"(10), "ஆசிலா வண்புக முணிநிலா வெறிக்கும் மாசிலாமணி ஞானசம்பந்த" (19), "மாசிலாமணி ஞானசம்பந்த னென்று அருந்தவர் துதிப்ப ஓர் பெரும் பெயர் நிறீஇ" (25) எனப் பலவிடத்தும் அடிகள் தமது ஞானுசிரியரை மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகர் என்று பாராட்டுகின்றூர். அப்பாராட்டுகளில் முதற்கண் ஞானசம்பந்தர் என்ற சிறப்புப் பெயர் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் திருமேனித் தோற்றத்தையும் செயலையும் நினைப்பித்து மகிழ்வித்ததுபோல, மாசிலாமணி யென்ற இயற்பெயரும் அவருள்ளத்தே தனக்குரிய சொற்பொருளைக்காட்டி மிக்க இன்பம் எய்துவித்துள்ளது.

மாசற மண்ணைப்பெற்ற மணி மாசிலாமணி யெனப்படுதலின், அதனை அனைவரும் முடியிலணிந்து மகிழ்வார்கள். அப்போது அது சூளாமணியாம். அவ்வியைபு தோன்ற, நூலின் தொடக்கத்தே ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை, "எண்டிசைக்கும் சூளாமணி மாசிலாமணி" என்று உரைக்கின்றூர். அம்மணி மகளிர் அணியும் அருங்கலத்தின் நடுவே இருந்து தனது விளக்கத்தால் மேம்படும் இயல்புகண்டு, ஞானமாகிய மங்கைக்குச் சைவமென்பது சீரிய அருங்கலமென்றும், அதன் நடுநாயகமணியாய்த் தம் ஞானதேசிகராகிய மாசிலாமணி தேசிகர் திகழ்கின்றூர் என்றும் கூறுவார், "திருக்கிளர் ஞானத்

திருந்திழைக் கனியாம், அருட்பெருஞ் சைவத் தருங்கல நாப்பண், ஆசற விளங்கும் மாசிலாமணி'' (1) என்று பாடிக் களிக்கின்றார். சிவபரம்பொருள் ஏனை எல்லாக் கடவுளர்க்கும் முடிமணியாய்ப் பாராட்டப்படும் உயர்வற வுயர்ந்த உயர்வு குறித்துக் கடவுள்மணி யெனப்படுவர்; அவரே சகலான்மாக்கள் உய்தற் பொருட்டு ஞானதேசிகராய் எழுந்தருளுவர் என்பது சான்றோர் முடிபு. அப்பரம்பொருளுக்கு மிடற்றில் கடல் விடம் அடைத்த கறையுண்டு. அக்கறை, ஞானதேசிக மூர்த்தியாய் எழுந்தருளுங் காலத்தில் மறைவது இயல்பு. அம்மூர்த்தம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகரின் திருமூர்த்தமாதலை மனதிற்கொண்டு,

> ''சுடர்விடு செங்கதிர்க் கடவுள்மா மணிக்கு
> விளங்கெழில் மிடற்றோர் களங்கமுண் டென்ப, அக்
> காசுலா மலினம் கரந்த காரணத்தால்
> மாசிலாமணி யென வண்பெயர் நிறீஇ
> மேன்மையோடு அமர்ந்த ஞானசம்பந்த''

என்றுரைக்கின்றார். மாசில்லாதமணி கிடைப்பின் மக்கள் அதனைக் கோவைசெய்து மெய்யிற் புனைந்து இன்புறுவர்; இம் மாசிலாமணியை அடியேன் இப்பண்டார மும்மணிக்கோவை யென்னும் செய்யுள் நூலிற் கோத்தணிந்து மகிழ்வேன் என் பாராய்,

> ''கண்ணிற் கனியாங் கதிர் மாசிலாமணியைப்
> பண்ணிற் கனியாப் பகர்வரால்—எண்ணுங்கால்
> பன்னூலிற் கோக்கப்படும் மணியன்று இம்மணி, மற்றும்
> இந் நூலிற் கோக்கும் மணி என்று''

என்றுபாடி பரவுகின்றார். கண்ணிற் கினிய கதிர்விட்டு விளங் கும் மணிகள்பால், அக்கதிரொளியால் புறத்தே செறியும் இருளைக் கெடுக்கும் இயல்பு உண்டு. எங்கள் மாசிலாமணி தேசிகராகிய மாமணி ஞானவொளி கான்று அகத்தே படிந்து கிடக்கும் பாசவிருள் மறுவலும் தொடராவண்ணம் அழித் தொழிக்கும் என்பாராய், ''பாசமாம் இருட்கோர் படர்மணி

விளக்கெனும் மாசிலாமணித் தேசிகராய" (16) என்றோது கின்றார். மாசறக்கழுவிய மணி யொன்றினைக் காண்போர், அதன் வகைகளில் யாதென ஆராய்ந்த பின்பே இன்னதெனத் தெளிவர்; அவ்வாறே எங்கள் மாசிலாமணி தேசிகரைக் காண் போரும் தத்தம் அறிவுநிலைக் கேற்பப் பல வேறு கடவுளருள் வைத்துக் கூறுபவாயினும் முடிவில், "சிவனெனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனியம்மா'' னுகவே கருதுவர் என்பார்,

"இன்றோர் வியப்புளதால் மாசிலாமணி என்றிருப்பது
ஒன்று; ஓர்மணிகண்டவர் பலரால் அதற்கு ஓர் மருங்காய்
நின்றோர் பல பல பேதங்களாச் சொல்வர் நீக்கமறச்
சென்றோர் மற்று இம்மணி செம்மணியே என்று செப்புவரே''

என்று உரைக்கின்றார். செம்மணி மாணிக்கமணியையும் அதன் நிறமே கொண்ட சிவபரம்பொருளையும் குறிக்கும் அமைதி யுடையது.

இனி, ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகரின் இயற் பெயர்க் கண் அமைந்த மணியினை ஏனை மணிகளின் வேறு வைத்துச் சிறப்பித்துரைத்துக் குமரகுருபரர் தம்மனம் குளிர்ப்பெய்து கின்றார். உலகிலுள்ள ஏனைமணிகள் தம்முடைய ஒளிப்பெரு மையால் எல்லாவற்றையும் அடக்கி நிற்குமேயன்றிப் பிற வற்றில் தாம் அடங்கி நிற்பதில்லையாக; பரமாசாரியராகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர், சிவபோதத்தே நிலைபெற நின்று என்னைத் தன்பால் அடக்கியும், யான் ஆன்ம போதத்தால் தலையெடுத்து நிற்குங்கால் எனக்குள் மறைந்தும் நிற்கின்றார் என்ற கருத்து எய்த,

" தான் நின்றெனைத் தனக்குள்ளே யொளிக்கும் என் தன்மை நிற்க
யான் நின்றபோது எனக்குள்ளே ஒளித்திடும் இப்பரிசே
வான் நின்ற சின்மயமா மாசிலாமணி மன்னும் தன்மை
நான் இன்று கண்டனன் காணேன் இதற்கு ஒத்த நன்மணியே''

என்று இயம்புகின்றார். மாசில்மணிகளுள் தலையாய சிந்தாமணி யென்பது நினைவோர் நினைவெல்லைக் குட்பட்ட பொருள்களை

நினைந்த அளவு தரவல்லதாகும். நினைவெல்லைக் கதிதமான சிவஞானப் பெரும்போகத்தை ஞானசிரியராகிய எங்கள் மாசிலாமணி தேசிகர் பெரிதும் வழங்கி என் கண்ணுள் மணியாய் இன்புறுத்துகின்றார் என்றற்கு,

"கடல் பெற்ற தோர்மணி சிந்தித்த நல்கும் கருத்துக்கெட்டா
மிடல் பெற்ற பேரின்பம் நல்கியவா அருள்வேலை பெற்றென்
உடல் பெற்ற கண்மணிக்குண் மணியாகி யொண் கூடல் வைகும்
அடல் பெற்ற ஞானச்சுடர் மாசிலாமணி யானதொன்றே"

என்று பராவுகின்றார். மேலும் உலகிலுள்ள ஏனை மணிகளைப் பெறக் கருதுகிறவர், கருதியும், உடல் கருவி முதலியன கொண்டு நெடுநாள் அரிது முயன்றும் பெறற்குரியர்; எங்கள் ஞானமூர்த்தியாகிய ஸ்ரீ மாசிலாமணியைக் கருவி கரணங்களை யடக்கிச் சும்மா இருந்தவர் எளிதிற் பெறலாம் என்பார்,

"எம் ஆருயிராம் எழில் மாசிலாமணியை
அம்மா பெறுதற்கு அரிதன்றே—சும்மா
இருந்தாரே பெற்றார் மற்று எவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றார் மணி"

என வியப்புத்தோன்ற விளம்புகின்றார். மேலும் உலகினர் முயன்று தேடிப்பெறும் மணிகள், தம்மைக்கொண்ட அவர்க்கு உடைமை யாவதன்றி, அவரைத் தமக்கு ஆளாகக் கொள்ளும் மதுகையுடைய வல்ல; ஞானமூர்த்திகளாகிய ஸ்ரீ மாசிலாமணி தன்னைக் கண்டமாத்திரையே கண்டவர்களை ஆட்கொண்டு பணிகொள்ளும் பெருமையுடைய தென்பார்,

"மணி கொண்டவர்தம் பொருளாவதன்றி அம்மாமணியாம்
அணிகொண்டவரைக் கொண்டு ஆள்வதுண்டே; அருட்கூடல் வைகும்
கணிகொண்ட கொன்றைத் தொடை மாசிலாமணி கண்டவுடன்
பணிகொண்டு தொண்டுங் கொண்டு ஆளும் கொள்வோ மென்று
[பார்க்கு முன்னே"

என்று தம்மையடைந்தாரை ஆட்கொள்ளும் அருணெறியையும் உடன்புணர்த்துரைத்து உவகையூட்டுகிறார். பிறவிடத்தும்

இக்கருத்தை, "அம்மணி பிறர்கொண்டு ஆளாமணி எமை ஆட்கொள் சிந்தாமணி" என்பதனுலும் வற்புறுத்துகின்ருர். பிறமணிகள் மருந்து மந்திரம் என்பவற்ரேடு கூடி உயிர் கட்கு உண்டாகும் நோயை நீக்குவன; நீக்குமிடத்தும் பிற மருந்து மந்திரங்களோடு கூடியே நீக்கவல்லனவாம். ஞானுசிரியராகிய ஸ்ரீ மாசிலாமணி, அம் மூன்ருலும் ஒரு சிறிதும் போக்கமுடியாத பிறவிநோயை எளிதிற் போக்கும் தலைமையுடைய தென்ற கருத்தால், "மீளா மணி மந்திர மருந்தாற் சென்ம வெவ்விடநோய், வாளா மணி யொன்றினல் மீண்டவா" (21) என்று வியந்தோதுகின்ருர். உலகில் மணி வேண்டுவோர் பொன்னென்றே கொடுத்து அதனைப் பெறுவர்; எங்கள் மாசிலாமணியை விரும்புவோர் தம் உடல் பொருள் உயிர் என்ற மூன்றையும் கொடுத்தல் வேண்டும் மென்பார்,

"பொன்னே யல்லாமல் பொருளோடு உடல் உயிர் விற்று
என்னே மணியொன்று எவர் கொள்வார்—கொன்னே
குருமாசிலாமணியைக் கொள்வோர் கொள்ளாமுன்
தருவார் மற்று இம்மூன்றும் தான்"

என்று ஞானுசிரியர்பால் அருள் பெறுதற்குரிய நெறியும் முறையும் சேரக்கூறுகின்ருர்.

ஞானதேசிக மூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள், வேண்டும் அடியார்கட்கு வேண்டுவன வேண்டியாங் களிக்கும் இயல்புகண்டு "சிந்தாமணி" என்றும், ஞானவொளி வழங்கி அறியாமையிருளைப் போக்கு தலால் அவரவரும் தத்தம் முடிமேற்கொண்டு ஏத்தும் முறைமை கண்டு "சூடாமணி" யென்றும், ஒட்டுப் பற்றின்றி உலகைத் துறந்தொழுகும் முனிவர் வணங்கும் தலைமையுடைமை பற்றி "முனிவர் சிகாமணி" யென்றும் உணர்ந்து வழிபடற்குரியர் என நம்மனேர்க்கு உபதேசிப்பாராய்,

"விண்புரக்கும் சிந்தாமணி யென்கோ ? மெய்ச்சுடரால்
மண்புரக்கும் சூளாமணி யென்கோ?—பண்பார்

திரு மாமுனிவர் சிகாமணி யென்கோ? சீர்
தரு மாசிலாமணியைத் தான்"

என்று உரைத்திருக்கின்றார். இம்மாசிலாமணி, சிந்தாமணி யென்பது முதல் பலவகையாகப் பாராட்டிப் பரவப்படும் பண்புடைத்தாதலேயன்றி, இரும்பைக்கவரும் காந்தமணி யென்றற்கும் இயைபுண்டென்பாராய், இரும்பையொத்து என் வசம் எட்டுணையும் நில்லாத என் நெஞ்சினைக் குழைவித்துத் தன்பால் இழுத்து மீளாவகை நிறுத்துகின்றது என்பாராய்,

"என் வசமாக நில்லாத நெஞ்சாம் இரும்பைக் குழைத்துத்
தன்வசமாக் கொண்டு இழுக்கின்றதால் தொண்டர் தம்மை யருள்
மன்வசமாகச்செய்யு மாசிலாமணி மாமணிக்குப்
பொன்வசமாகச்செய் காந்தமென்றே சொல்லப் போந்ததுவே"

என்று புகழ்ந்து மகிழ்கின்றார்.

இவ்வாறு ஞானசம்பந்தர் என்ற சிறப்புப் பெயராலும், மாசிலாமணியென்ற இயற்பெயராலும் தம்முடைய ஞானசிரியர் இயல்புகளைப் பல்வகைச் சுவையும் மெய்ப்பாடும் எய்தப் பாடிப் பரவிய குமரகுருபர சுவாமிகள், அப் பரமாசாரிய மூர்த்திகளின் ஞான நலத்தை, "ஞானேற்பவ மாசிலாமணிச் சம்பந்தா, -தவ மார்,ததியர் உளத்தானே" என்றும், "தான் அவனகிய தன்மை பெற்றான்" என்றும், "தன்னேரிலா ஞானசம்பந்தன் தாள் அடைந்தார்க்கு, இருள் வெளியாம்" என்றும், "நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ, நூன்முறை பயின்ற நுண்மைசா லறிஞ, சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞ, கற்றவர் வியக்கும் காவியப் புலவ" என்றும், சமயப் பூசலைக் கெடுத்துச் சைவத்தின் மாண்பினை நிலைநாட்டும் திறத்தைப் "பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்கறுத்து ஓர், சின்னம் படைத்த முனி மாசிலாமணி" (24) என்றும் குறிக்கின்றார்.

இனி, சிவபரம் பொருள் சகலான்மாக்கள் உய்யும் பொருட்டுக் குருமூர்த்தியாய் எழுந்தருளிப்போந்து உண்மை

ஞானத்தை யுணர்த்துவனென்பது சைவசித்தாந்த நூன்முடிபாகும். ஆன்மாக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என முத்திறப்படுவர். அவருள் முதல்வர் ஆணவமலம் ஒன்றும் பிரளயாகலர் ஆணவம் கன்ம மலங்க ளிரண்டும், சகலர் ஆணவம் கன்மம் மாயையென்ற மும்மலங்களும் உடையரென்றும், விஞ்ஞானகலர்க்கு முதல்வன் உண்ணின்றும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் அருள் புரிவனென்றும், ஏனைச் சகலர்க்கு அவர்போல் அருட்டிருமேனிகொண்டு ஞானகுருவாய் எழுந்தருளி உண்மை ஞானத்தை அருள்செய்வனென்றும் சித்தாந்த மெய்ந்நூல்கள் செப்புகின்றன. இதனல் ஞானேபதேசஞ் செய்யும் ஆசிரியன் சிவபரம்பொருளேயாதல் தெற்றெனத் தெளியப்படும். அங்ஙனமே தெளிந்த சிந்தையினராகிய குமரகுருபர சுவாமிகள் தம் ஞானுசிரியராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த மூர்த்திகளைச் சிவமென்றே தேறிச் செப்புவன பலவும் இனி ஆராயப்படும்.

முதற்கண் ஞானதேசிகன் உயிர்க்கு அருள் புரியும் செயலை,

“செவிதொறுஞ் செவிதொறுந் தெள்ளமுது ஊட்டுபு
கவிஞர்வயின் நிரப்பும் கல்விப் பிரசங்க
வெள்ளிடைத் தோன்ருது உள்ளத்து உணர்த்தவும்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவும்
சாயா மும்மலச் சகலரேம் உய்ய
எம்முருக் கொண்டும் எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடு மகழ்ந்து
சிற்பரம் உணர்த்தும் சற்குரு ராய” (19)

என்பதனல் உணர்த்துகின்ருர்; இதன்கட் குறித்த உள்ளத் துணர்த்துதல், திருக்கண் சாத்தல் என்ற இரண்டும் முறையே விஞ்ஞானகலர் பிரளயாகலர் இருவர்க்கும் என அறிக. தமது ஞானுசிரியரைச் சிவபரம்பொருள் எனத் தெளிந்திருத்தலைப் பிறவிடத்தும் எடுத்தோதுகின்ருர். அதனை நான்முகனும் திருமாலும்,

“அஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட்டு அன்னமும்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற்று ஏனமும்
ஆகுபு தனித்தனி அலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட்டு அம்ம
எம்மனோர் போல இனிது எழுந்தருளிக்
கைம்மாறு அற்ற கணக்கில் பேரின்ப
மோனவாழ்வு அளிக்கும் ஞானதேசிகன்”

எனவும்,

“ ... ... ... மாசிலாமணி
தலைப்படு கலைமதி தாங்காது ஆங்கு அத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிடனுய வடிவுகொண்டு அருளாது
மானிடனுய வடிவுகொண்டு அருளி
எற்பு அணி பூணுது என் பணி பூண்டு
பாரிடம் சூழாது பார் இடம் சூழ்தர
ஆரூர் அமர்ந்த ஞானசம்பந்த” (13)

எனவும் வருவனவற்ருல் நன்குணரலாம்.

“அவமாசு இலா மனத்தார்க்கு ஆருயிராம் ஞானேற்பவ மாசிலாமணிச் சம்பந்தா” (5) என்றும், “எம் ஆருயிராம் எழில் மாசிலாமணியை அம்மா பெறுதற் கரிதன்றே” (8) என்றும் வருவன இந்த ஞானதேசிகமூர்த்திகள் தம் நற்சீடர் அன்பில் தோய்ந்து அவர் தம்முயிர்க்குயிராய் நிறைந்து அருளின்பம் வழங்கும் திறத்தை அறிவிக்கும். இவ்வாறு உயிர்க்குயிராய் நிறைந்திருந்து ஞானம் வழங்கும் மாட்சியினை வேருரு பாட்டின்கண் உழவுத் தொழிலில் வைத்துச் செஞ்சொற் றேமழையொன்று பொழிகின்ருர். அது,

“முற்படு மாயை முதற்கரை நாட்டில்
பற்பல புவனப் பகுதி பற்றி
ஈரிரு கண்ணுற்று எழுதரம் வகுத்த
ஆறேழ் இரட்டி நாருயிரத்த
செயற்படு செய்களின் உயிர்ப்பயிரேற்றி

ஊழ் எனப்பட்ட தாழ்புனற் படுகரில்
தெய்விக முதலாச் செப்பு மும்மதகும்
ஒவ்வொரு மதகாய் உடனுடன் திறந்து
தாகமென்னும் தனிப்பெருங் காலின்
போகமென்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயும் ஐம்பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துடன் அகிதம் எனும் இரண்டு ஊற்றின்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத்தோட
வார்புன லதனை மந்திர முதலா
ஓர் அறுவகைப்படும் ஏரிகள் நிரப்பி
வினைவன வினைய வினைந்தன அறுத்து, ஆங்கு
ஒருகளம் செய்யும் உழவனுகி
மாநிலம் புரக்கும் மாசிலாமணி'' (10)

என்பது. இதன்கண் சுத்தம் அசுத்தம் பிரகிருதி என்ற மூவகை மாயா புவனங்களில் உயிர்கள் நால்வகைத் தோற்றமும், எழுவகைப் பிறப்பும், 'எண்பத்துநான்கு நூறாயிர யோனி வேறுபாடும் உற்று ஊழ்வழியே ஆதி தெய்விகம், ஆதியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் மூவகைத் துன்பமும் எய்தி, ஆசை வாயிலாக வரும் போகம் குறித்து இதம் அகிதம் என்னும் இருவகை வினைகளை யீட்டி, மேன்மேலும் பிறப்பிற்கே ஏதுவாய் நிலவுதலும், மந்திரம் முதலிய ஆறத்துவாக்களாலும் வினையை நெறிப்படுத்திப் பிராரத்தத்தை நுகர்வித்தலும், ஆகாமியத்தை விளைவித்தலும், முடிவில் அவ்வினை விளைவைக் களைந்து சிவஞானப் பெரும்போக வாழ்வில் திளைப்பித்தலும் ஞானதேசிகனுடைய அருட்செயல்கள் என விரித்தோதும் நலம் அறிவு நெறிக்கண் நிற்கும் திருவுடையோர் கண்டு விம்மிதம் கொள்ளும் மேன்மையுற்றிருக்கிறது.

இத்தகைய சிவஞானச் செயலுடைய ஞானதேசிக மூர்த்திகள் வழங்கியருளும் ஞானபோனகத்தை நம் ஸ்ரீ குமரகுருபர அடிகள்,

"பரமானந்தப் பரவையுள் தோன்றிய
இன்பவா ரமுதம் அவ்வமுதம்
அன்பருக்கெளிது எளிது அரிது விண்ணவர்க்கே" (25)

என்று இயம்புகின்றார்.

இங்கே காட்டிய அருட்செயல்களும் ஞானமிர்தமும் ஞான தேசிக மூர்த்திகள் சிவபரம்பொருளே என்பதை நம் அறிவில் பதிவித்தலை நாம் உணர்கின்றோம். அவ்வுணர்வே வடிவாயுற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், சிவபரம்பொருளே ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த மூர்த்திகள் என்று பன்முறை எடுத்தோதியும் அமையாது,

"ஒள்ளொளி பரப்பும் வெள்ளி வேதண்டத்து
ஒருபாற் பொலிந்த மரகதம் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் கடவுள் மாமணிக்கு
விளங்கெழில் மிடற்று ஓர் களங்கமுண்டு என்ப, அக்
காசுலா மலினம் கரந்த காரணத்தால்
மாசிலாமணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோடு அமர்ந்த ஞானசம்பந்த" (4)

என்று நயம்பெருக நவில்கின்றார்.

இஃதிவ்வாறாக, சிவமணங் கமழும் இத்தருமையாதீன மகாசந்நிதான குருமூர்த்திகள் மதுரைச் சொக்கநாதனைத் தம் ஆன்மார்த்த பூசனைப் பரம்பொருளாகக் கொண்டு நாளும் வழிபட்டுவரும் நன்மாண்புடைய ரென்பது உலகறிந்த செய்தி. மேலும், அச் செயற்குரிய சொக்கலிங்கம் இவ்வாதீன ஆதி குருமகாசந்நிதானத்துக்கு ஆலவாய் அண்ணல் தாமே அன்பு சிறந்து அளிக்கப்பெற்றதென்றும், அதனைப் பெற்ற பெரு மகிழ்ச்சியால் அக்குருமகாசந்நிதானம் சொக்கநாதக்கலித் துறையென்னும் நூலைப்பாடி அதன் முதற்பாட்டிலேயே,

"கண்ணுக்கினிய பொருளாகியே என் கரத்தில் வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புதமே யென்ன விஞ்சை இதான்

மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும்படிசெய் மதுராபுரிச் சொக்கநாயகனே"

என்று தாம் சொக்கலிங்கப் பெருமானைப் பெற்ற பேற்றினை வியந்து பரவினரென்றும் இந்த ஆதீன வரலாற்றால் அறிகின்றோம். இவ்வரலாறு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இங்கே எழுந்தருளிய காலத்து அவர்க்கு இனிது உணர்த்தப் பெற்றதோடு, அவர் தாமே நேரிற்கண்டு தம்கண்பெற்ற பயனைப் பெற்றுக் கழிபேரின்பம் உற்றிருக்கின்றார். காணும் காட்சியைக் கண்டாங்குப் பாடும் கவிநலமுடைய அப்பெருமான் இப் பண்டார மும்மணிக்கோவைக்கண் இச்செயலை,

"அங்கயற்கண்ணி பங்கில் வீற்றிருந்த
செக்கர் வார்சடைச் சொக்கநாயகனை
ஈரெண்திறத்து உபசாரமும் வாய்ப்பப்
பூசனை புரியுந் தேசிகராய" (22)

என்று எடுத்தோதுகின்றார். தமக்கு ஞானதேசிக மூர்த்திகளாகக் கொண்ட ஸ்ரீ மாசிலாமணி தேசிகரைச் சிவமெனவே தேறித் திருவருள் ஞானோபதேசம் வேட்டுநின்ற குமரகுருபர அடிகள், மீட்டும் அத்தேசிக மூர்த்தியைச் சொக்கநாயகனை வழிபட்டார் என்பது அவர் தம்மைத்தாமே வழிபட்டார் என்பது பட்டு முன்பின் முரணுவது போலத் தோன்றுவது கண்டு அதற்குத் தக்கதோர் அமைதியும் கூறிவிடுகின்றார். அஃதாவது உருத்திர கணங்களாய அடியவர்கள் தம்மை வழிபடும் திறம் இஃதெனக் காட்டுவது என்பது. இதனை, "அருத்தியோடு எம்மை நம் உருத்திர கணங்கள், தெரித்து மற்று இவ்வாறு அருச்சனைபுரிதிர்" (22) என்பதனால் அறியலாம். மேலும், இதற்கோர் எடுத்துக்காட்டுக் கூறுவாராய், திருவிடைமருதூர்ப் புராணத்தே, உமையம்மையார்க்கு அறிவிப்பது குறித்துப் பரமன்தன்னைத் தான் பூசித்துக் காட்டிய அருட்செய்தியை விதந்து,

"பொன்னவிர் கடுக்கைப் புரிசடைப் புங்கவன்
அமையாக் காதல் இமையவல்லிக்கு

வழிபடல் முறைமை விழுமிதின் உணர்த்தத்
தானே தன்னைப் பூசனை புரிந்தென'' (22)

என்று ஓதுகின்றார்.

### ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிகர் எழுந்தருளும் இடங்கள்

தருமையாதீன மகாசந்நிதான குருமூர்த்திகள் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளையும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் புகழ்ந்தோதுகின்றார்கள். அத்திருப்பதிகள் தருமபுரம், திருவாரூர், மதுரை என்ற மூன்றுமாகும். இதனை,

''தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநகராக அரசு வீற்றிருக்கும்
மாசிலாமணித் தேசிகராய'' (7)

என்பதனால் அறிக. இவற்றுள் தருமையென்பது தற்போதைய தருமபுரமாகும். இச்சிவம் பெருகும் திருநகரம் இன்றுகாறும் தருமபுர ஆதீனத்தின் சிவராஜதானியாகத் திகழ்கின்றது. இதன் சிறப்பை எடுத்தோதப்புகுந்த குமரகுருபரர் மனக்கண்ணில் இந்நகர்மேவும் மருத நிலப்பகுதியின் மாண்பு இனிய காட்சி வழங்குகின்றது. காவிரியின் தென்கரைக்கண் பொருந்திய இந் நகரம் நாற்புறமும் மருதத்தண்பணை சூழ்ந்து நீர்வளம் சிறந்திருக்கிறது. நீர்நிலைகளில் மகளிர் நீர் விளையாட்டயர்கின்றனர். அக்காலை, அவரது தோற்றம் நீரரமகளிரின் சீர்த்த நலத்தை நினைப்பிக்கின்றது. இக்காட்சியை,

''மணிவடம் சுமந்த புணர்முலைக் கொதுங்கி
ஈயா மாக்கள் திமொழி கவர்ந்த
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கரைகொன்று இரங்கும் திரைசெய் நீர்பட்டத்து
மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சிராட்டு அயரும் நீராட்டு அயர்ந்து
புலவியிற் றீர்ந்து கலவியில் திளைக்கும்

நீரரமகளிர் பேரெழில் காட்ட
மருதம் வீற்றிருந்து பெருவளம் சுரக்கும்
தருமையம்பதி" (4)

என்று நாம் கண்டுணரக்காட்டுகின்றார். இனித் திருவாரூரை,

"போங்தையங் கண்ணி வேந்து விற்பொறித்த
மன்பெருங் கிரியின் மென்கரும் பெழுதித்
தேசுலாம் பசும்பொற் சிகர மந்தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச் சிறுக்கிக்
கடாம் பொழி கரடக் களிநல் யானைப்
படாம் புனைந்தென்னப் பைந்துகில் போர்த்துப்
பிதிர் சுணங்கு அலர்ந்த கதிர்முலை மடந்தையர்
விட்புலத்தவர்க்கும் கட்புலங் கதுவாச்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பின்
சுவல்கைத் தாங்குபு மதியணந்து பார்க்கச்
சேணிகங் தோங்கும் யாணர்செய் குன்றத்து
ஆடகத் தியன்ற சூடகக் கரத்தால்
மாடகத் திவவியாழ் மருமமீது அணைத்து
மூவகை நிலையத்து ஏழுசுரம் நீறீஇக்
கொவ்வை வாய் திறந்து குயிலென மிழற்றுபு
மென்னரம்பு உகிரான் விரல்முறை தடவிக்
கின்னரம் வியக்கும் கீதம் பாட
நகை நிலவு எறிக்கும் முகமதி காணாஉச்
சந்திர காந்தத்தின் சமைத்த செய்குன்றம்
மைந்தர் போன்று உருகி மழைக்கண் நீர் சொரியப்
பல்வளம் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை" (16)

என்றும், "பூமலிசததள" என்று தொடங்கும் திருவகவலில்,

"விரிகதிர் பரப்பும் மரகதத் தகட்டில்
சுடர்செய் செம்மணி இடைஇடை பதித்தெனப்
பாசடைப் பரப்பிற் பதுமராகிகள்
சேயிதழ் விரிக்கும் செழுமலர் ஓடையும்
அண்ட கோளகையும் எண் திசாமுகமும்
கோட்டுடைத் தடக்கை நீட்டி அளங்தென்னச்

சேட்பட நிவந்த செண்பகா டவியும்
கால்கிளர் விசும்பிற் கற்பகா டவிக்கு
வேலியிட்டன்ன வியன் மணிப் புரிசையும்
மருங்குசூழ் கிடந்த வண்தமிழ்க் கமலை" (1)

என்றும், 'நான்மறைக் கிழவ' என்றுதொடங்கும் அகவலில்

"பளிங்கினிற் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட்டு அயர்தரக்
கொங்குவார் குழலும் குவளை வாள் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந்து ஒளிர்தலின்
சைவலம் படர்ந்து தடங்கயல் உகளும்
செய்ய பூங்கமலச் செழுமல ரோடையென்று
ஆடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர் மற்று
அம்மெல் ஓதி அரம்பைய ராதலின்
நீர்நிலை நிற்றிரால்; நீரவர் தங்களுள்
யார்கொல் யார்கொல் இசைமின் இசைமின் என்று
இறும்பூ தெய்தி இரந்தனர் இசைப்ப
மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்தாங்கு
ஐயுற வகற்றும் அணிமதிட் கமலை" (19)

என்றும், "சூழ்போய் நிவந்த" என்னும் திருவகவலில்,

"மழைக்குலம் தழைப்பத் தழைத்த திம்பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுட் கிடந்த
முட்புறக் கனிகள் விட்புறக் காண்டலும்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று
கிண்டு பொற்சுளை பல தோண்டுவது அம்ம
முற்பகல் ஒருவர் பொற்குடம் நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழாம் அனைத்தும்
வஞ்சகம் பழகும் அஞ்சனக் கள்வர்
கண்டு கண்டு எடுக்கும் காட்சித் தன்ன
தண்டலை வளைஇத் தடமதில் உடுத்த
தேசுலாம் கமலைத் திருநகர்" (22)

என்றும்,

'அடங்காவைம்புலன்' என்று தொடங்கும் திருவகவலில்,

"கரையெறிந்து ஆர்க்கும் பெரும்புனற் படுகரில்
பணிலம் ஈன்றளித்த மணிநிலாப் போர்ப்பத்
தருணவெள் ளெகினம் தன்னகத்து அடங்க
அருணமுண்டகம் அகவிதழ் முகிழ்ப்பது
தெண்டிரை உடுத்த திம்புனல் மடந்தை
வெண்துகிற் படாஅம் விரித்தனள் போர்த்து
வள்ளவாய்க் கமல மலர்க்கையால் வளைத்துப்
பிள்ளை வெள்ளெகினம் பிடிப்பது கடுக்கும்
காசுலாம் பசும்பொற் கடிமதிற் கமலை" (25)

என்றும், "ஏழுயர் மும்மத" என்று தொடங்கும் திருவகவலில்,

"ஏழுயர் மும்மதச் சூழிமால் யானை
தடம்புனல் குடைந்து படிந்தெழுந்து உழக்கத்
தெண்டிரை சுருட்டும் குண்டகழ் வாவியில்
பங்கயத் தவிசில் பசும்பொன் தாது அளைந்து
அங்கம் வேறுபட்டு அரசனம் பொலிதலும்
ஆவலின் படர்ந்த சேவல் கண்டயிர்த்துநம்
பேடையன்று, இது மலரோடையு மன்றே;
படரும் வெண்டாமரை படர்ந்ததை யன்று, இது
கடவுளர் அமுதம் கடைந்த பாற்கடலே;
காந்து வெங்கனற் கண் களிறு மன்று, இது கடல்
சாய்ந்தெழு மந்தரத் தடங்கிரியதுவே;
போகுவால் உறுப்பும் புழைக்கையும் தைவரு
பாகரோ வாசுகி பற்றும் வானவரே;
பொங்கி வெண்ணிலவு பொழிந்த வெண்தரளம் அன்று,
இங்கிது அங்கு அதில் எழுந்த ஆரமுதே;
கொடிவிடு பாசடைக் குழாமன்று, இங்கிது அக்
கடலிடைத் தோன்றிய கற்பகாடவியே;
சேயிதழ் விரிக்கும் செந்தாமரை இது அன்று,
ஆயதன் வடிவமாய் அமர்ந்த மாநிதியே;
சங்கம் அன்று இது, அதன் தனிப்பெயர் நிதியே;
செங்கிடை அன்று, இது சிந்தாமணியே;
ஆதலின் நமது பேட்டன்னமும் அன்று, இது அப்

போதில் அங்கு உதித்த பொலங்கொம்பன்றே
என்று உளம்மருள ஓர் எழில்நலம் பயக்கும்
மன்றல் அம் பணைசூழ் மருதவேலிப்
பொன்மதிற் கமலை நன்னகர்'' (28)

என்றும் பன்முறையும் சிறப்பித்தோதுகின்றார்.

இங்கே காட்டிய பாடற்பகுதிகள் முறையே தருமபுரம் திருவாரூர் என்ற இரு நகரங்களில் இயற்கை நலத்தை எடுத்துக் காட்டி நம்மை இன்புறுத்துந் திறத்தைப் பிறிதோரிடத்தில் ஆராய்ந்து காண்பாம். ஈண்டைக்குப் பொருளாவது ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக ஞானசம்பந்த சுவாமிகள் சிறப்பித்துக் கூறும் சீர்மையேயாகும். "தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்'' என்றவிடத்து இறுதிக்கண் வைத்தோதிய கூடல்மா நகரத்தை ஸ்ரீ குமரகுருபர அடிகள், "பந்தணைதவிரா'' என்று தொடங்கும் திருவகவலில் பாராட்டிப் பாடுகிறார். கூடல் நகரை அடிகள் நினைக்கும்போதே, அவர் மனம் அங்கே பரமன் நன் பாட்டுப் புலவனாய் எழுந்தருளி ஆராய்ந்த "ஒண்டீந் தமிழின் துறைவாய் நுழைந்து'' உலவாப் பேரின்பத்தில் மூழ்கி மகிழ்வு மிகுமாறு தோன்ற,

"பந்தணை தவிராச் சிந்தனை விகர்ப்பப்
பாயிருள் பரந்த மாயிரும் பொழிலில்
கொளற்குரி மாந்தர்க்கு அளித்தல் செய்யாது
அரும்பூண் சுமந்த அறிவிலாளரின்
சுரும்பு ஊண்வெறுத்த துதைமலர் வேங்கை
தன்மருங்குறீஇப் பொன்மலர் பிலிற்ற
இலையறப் பூத்த துதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புல னேக்கார் கட்புலன் கடுப்ப
இமையா வறுங்கண் இமைத்த பைங்கூந்தல்
பசுந்தார் மஞ்ஞை அசைந்தமர் தோற்றம்
பொன்துணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண்டுண்ணு நறுமலர் தூற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்

கவளங் கொள்ளாத் தவளமால் களிற்றின்
கண்பல படைத்த கார்முகில் வண்ணத்து
இந்திரன் பொலியும் எழில்நலம் காட்டும்
தண்பணையுடுத்த தமிழ்ப் பெருங் கூடல்" (13)

என்று சிறப்பித்துப் பாடுகின்றார். இத்தருமையம்பதியில் எழுந்தருளித் திருவருட் செங்கோலாட்சிபுரியும் மகாசந்நிதான குருமூர்த்திகட்குத் தருமபுரமேயன்றித் திருவாரூரும் கூடற் பதியும் தாம் எழுந்தருளுந் திருநகரங்களாக இருப்ப, தருமையும் கூடலும் போலாது திருவாரூரை மட்டில் அடிகள் பன்முறை இந்நூற்கண் சிறப்பித் தோதியது, அத்திருவாரூர், இவ்வாதீனத்தின் ஆதிகுருமகாசந்நிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகட்கு ஞானோபதேசம் செய்தருளிய ஸ்ரீலஸ்ரீ கமலைஞானப்பிரகாச சுவாமிகள் வீற்றிருந்த திருப்பதி யாதலானும் அத்திருப்பதியே ஆதீன மகாசந்நிதானம் ஞானோபதேசம் பெற்ற இடமாதலானும் ஆம். மேலும், "தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும், திருநகராக அரசுவீற்றிருக்கும் மாசிலாமணித் தேசிகராய்" என்ற விடத்து, கமலையெனத் திருவாரூரை நடுவண்வைத்தோதியது "மேதினிக் காதல் மங்கை யிதயகமலமாம், மாதொர் பாகனுர் ஆரூர் மலர்ந்ததால்" (திருமலை. 35) எனச் சேக்கிழார் பெருமான் தெரித்தோத அதனைத் தாமும் மேற்கொண்டு, திருவாரூர் நான்மணிமாலைக் கண், பரமன் கோயில்கொண்டருளும் அத்திருவாரூர் பூமகட்கு இதயகமலமென்று எடுத்தோதும் கருத்தினராதலினுலென்றும் கொள்ளலாம்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தம் ஞானசிரியர்பால்

செய்துகொள்ளும் விண்ணப்பங்கள்

இந்த அரிய செந்தமிழ் நூற்கண் பல பாட்டுக்களில் அடிகளார் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக ஞானசம்பந்த மூர்த்திகளை முன்னிலைப்படுத்தியே பரவியிருப்பதை இந்நூல் இனிது எடுத்துக்காட்டுகின்றது. அவ்வாறு பரவுமிடத்து அவர்

வாளா முன்னிலைப் பரவலாகவே மொழிந்தொழியாது பரவுந்தோறும் பல வேண்டுகோளைப் பணித்து செய்துகொள்கின்றார். அவையனைத்தும், ஞானப்பேற்றின்கண் அவர்தம் உள்ளத்தெழுந்த வேட்கை மிகுதியைப் புலப்படுத்துவன வெனினும், ஞானம் வேட்கும் நற்சீடனொருவன் அதனைவேட்டுப் பெறுதற்கு அடிப்படையாக வேண்டியிருக்கும் உண்மை நூலறிவும் இவ்வண்ண மிருத்தல்வேண்டு மென்பதனையும் நாமெல்லாம் நன்குணரக் காட்டுகின்றன.

இனி, இவ்வேண்டுகோள்கள் சித்தாந்த சைவ செந்நெறிக்கண் நிற்றற்குரிய மனவொருமை வேண்டலும், மெய்யுணர்வு வேண்டலுமென இருகூற்றுள் அடங்குகின்றன. முதற்கட்கூறிய மனவொருமை வேண்டுமிடத்து அவர் சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பினைத் தெரியத்தேர்ந்து பலவகையானும் வகுத்துரைக்கின்றார்.

"மணிவடஞ் சுமந்த" என்று தொடங்கும் திருவகவற்கண் அடிகள் தாம் சித்தாந்த சைவச் செந்நெறிக்கண் நின்று பெறும் பேரின்பப் பெருவாழ்வெய்த வேண்டுமென்பார்,

"ஈண்டுனைத் தமியனேன் வேண்டுவது யாதெனின்
அந்நிய மென்றும் அநந்நிய மென்றும்
இந்நிலை இரண்டும் எய்திற் றென்றும்
பல்வேறு உரைக்குநர் சொல்வழிப் படாது
திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தத்து
இறவா நிலைமைபெற்று இன்பமார்ந் திருக்கும்
பிறவா நல் நெறி பெறப்புரிவதுவே" (4)

என்று கூறுகின்றார். இறைவனுக்கும் உயிர்கட்கும் உரிய இயைபைப் பல்வேறு சமயத்தவர் பலவேறு கூறுவர். மாத்துவர் இவ்வியைபு பேதம் (அந்நியம்) என்பர்; மாயாவாதிகள் அபேதம் என்பர்; பாஞ்சராத்திரிகள் பேதாபேதம் என்று கூறுவர். இக் கூற்றுக்களைத் தாம் உடன்படாமை தோன்ற, அடிகள்

"அந்நியமென்றும் அநந்நியமென்றும், இந்நிலையிரண்டும் எய்திற்றென்றும், பல்வேறு உரைக்குநர் சொல்வழிப்படாது" என்று உரைக்கின்றார். இறவாநிலைமையாவது பொருளால் இரண்டாகியிருந்தும் வேறறக்கலந்து நிற்பதாகிய அத்துவிதநிலைமை. இதனை யெய்தினோர் மீண்டும் பிறத்தல் இன்மையின் "பிறவா நன்னெறி பெறப்புரிக" என்று வேண்டுகின்றார்.

இவ்வாறு 'பிறவா நன்னெறி வேண்டினவர், "அது பெறுவது அரிது; மீட்டும் பிறத்தற்குரியை" என்று ஞானதேசிகர் அருளிப்பாடு உண்டாகுமாயின், அப்பிறப்புகுறித்துத் தம் கருத்து இதுவென வுரைக்கலுற்று, உயர்பிறப்புக்களாகிய இந்திரன், பிரமன், திருமால் என்ற பிறவிகளைத் தமக்கு வேண்டாவென்கின்றார். இதற்கு அவர்காட்டும் ஏதுவாவது, 'அவைதாம், ஆரா இன்பமென்று அரும்பெயர் பெறினும், வாரா வல்வினை வருவிக்கும்மே' என்பது. முடிவில் அவர்வேண்டுவது,

" ... ... ... வழுத்தும் நின்
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமுது ஆர்ந்து தெருக்கடை எறிந்த
பரிகலம் மாந்தி இப்பவக்கடல் உழக்கும்
வரனுடை ஞமலியாகி நின்
அருளையும் அயராது அவதரிப்பதுவே" (4)

என்று இசைக்கின்றார். இவ்வாறு நாய்ப்பிறவி மேற்கொண்டு அடியவர் உண்டொழித்த மிச்சிலையுண்டு வாழ்தலும் திருவருள் வாழ்வாய்ச் சித்தாந்த சைவச் செந்நெறியாதலின், இதனாலும் அடிகள் சைவசித்தாந்தச் சார்புபெறவே விரும்பி வேண்டுதலை அறிகின்றோம்.

இவ்வேண்டுகோளையே "முற்படுமாயை" என்ற திருவகவலில் வேறுவாய்பாட்டால் ஓதுகின்றார். அங்ஙனம் ஓதுமிடத்து, சைவசித்தாந்தச் செந்நெறியைத் தெளிந்து மேற்

கொண்டொழுகுதல் அருமைப்பாடுடைத்து; அதனல் அவ் வொழுக்கமுடையோர் சிலரேயாவர் என்பார்,

"ஒரும் வேதாந்தம் என்று உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே" (10)

என்று உரைக்கின்ருர். வேதாந்தத்தை உச்சியென்றது, வேதத்தை மரமாக உருவகம் செய்கின்ருராதலின். அதனை இவ்வகவற்கண்ணே,

"* குடிலை யென்னும் தடவயல் நாப்பண்
அருள் வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதவம் வளர்த்தனை" (10)

என்று ஓதுவது காண்க. வேதமாகிய மரத்தின் உச்சியிற் பழுத்த கனியைப் பிழிந்து வடித்துத் தெளியக்கொண்ட சாரம் சைவசித்தாந்தம் என்றது. "வேதாந்தத் தெளிவாம் சைவசித் தாந்தத் திறன்" (சிவப். 7) என்பதை நினைப்பிக்கின்றது. வேதம் நான்மறை; அந்தம் உபநிடதங்கள்; அருங்கனி ஆகமங்கள்; அவற்றுள் பூருவபக்கமும் சித்தாந்தமும் விரவிக் கிடத்தலின், பூருவபக்கத்தை விலக்கிச் சித்தாந்தப் பகுதியை மட்டில் கோடல் வேண்டியிருத்தல் பற்றி, "அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவ சித்தாந்தத் தேன்" என்று அருள் கின்ருர்.

ஒருகால், அடியேன் இச்சைவ சித்தாந்தப் பேற்றுக்கு உரியனல்லனென வொதுக்கப்படினும், அடியேன் வேறு நெறிக்கண் ஒதுங்கேன் என்பார், "யான் அவர் நன்னிலை பெறுதற்கு அங்கியனுயினும், அன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய, தீம்புனலமுதம் ஆர்ந்தனன் அதனல், வேம்பெனக்

---

* குடிலை—சுத்தமாயை.

கொண்டனன் விண்ணவ ரமுதே'' என்று தமக்கு அந்தச் சைவ சித்தாந்தத்தின்பாலுள்ள அயராவேட்கையினை யறிவிக் கின்றார்.

இனி, இச்சித்தாந்த செந்நெறிக்கண் நின்று பெறும் மெய்யுணர்வினைத் தமக்கு அருள் செய்யுமாறு ஸ்ரீ குமரகுருபர அடிகள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக மூர்த்திகளைப் பல பாட்டுக்களில் விண்ணப்பிக்கின்றார். ''பூமலி சததள'' என்று தொடங்குவதான முதற்பாட்டிலேயே,

'' ... ... ஞானசம்பந்தன்
பொன்னடிக்கமலம் சென்னி வைத்து இறைஞ்சுதும்
இருகால் சுமந்த ஒருபெருஞ் சேவகத்து
ஐம்புலக் களிறும் தம்புலத்து இழுப்ப
ஊனிடைப் பிறவிக் கானகத்து உழலாது
ஏனைய முத்திநாடு எய்த ஓர்
ஞான வாரணம் நல்குதி யெனவே'' (1)

என்று தமக்கு உண்மை ஞானத்தை உபகரிக்குமாறு வேண்டு கின்றார். உண்மை ஞானத்தாலல்லது ஒருவற்கு உய்தியில்லை என்றற்கு, ''ஏனைய முத்தி நாடு எய்த, ஓர் ஞானவாரணம் நல்குதி'' என்கின்றார். அந்த ஞானம் இல்வழி, உயிர் ஐம் புலன்கட்கும் அடிமையாகி அவற்றிற்கு உரிய பொருளும் வினையும் ஈட்டிப் பிறப்பு இறப்புக்களால் வருந்தும் என்று துணிந்துரைப்பாராய் ''ஐம்புலக்களிறும் தம்புலத்து இழுப்ப, ஊனிடைப் பிறவிக் கானகத்து உழலாது'' என்றார்.

உயிர்கள் முன்னைப் பிறவிகளில் முயன்ற சரியையாதி தவப்பயனால் தீவிரதரபக்குவ முற்றபோது சத்திநிபாதம் நிகழ, பரமன் அருளே திருமேனியாகவுடைய குருமூர்த்தியாய் எழுந் தருளி உண்மை ஞானத்தை யுணர்த்தியருள்வன்; தீவிரதர சத்திநிபாத நிகழாதவழி, உண்மை ஞானம் கைகூடாதென்பது நூன்முடிபு. இதனை ஆதரவாகக்கொண்டு, நம் குமரகுருபர சுவாமிகள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிக மூர்த்தியை வணங்கி

"அருட்டிருமேனியையுடைய பரமகுருமூர்த்திகளாகிய தேவரீர் திருமுன் அடியேன் வந்து தரிசித்து நிற்கும் பேறுபெற்றமையின் அடியேனுக்குச் சத்திநிபாத மெய்தியிருப்பது இனிது விளங்கும்; ஆதலால் அடியேனுக்கு ஞானேபதேசம் செய்தல் வேண்டும்" என்று வேண்டுவாராய்,

"செந்நெறிப் படர்ந்த நின்சீர் புனைந்தேத்தலின்,
சத்திநிபாத நின் சந்நிதிப்பட்ட
இத்திறத்து எளிதினில் எய்தியது எனக்கே; அதனால்,
சரியையில் தாழ்க்கலை; கிரியையில் பணிக்கலை;
யோகத் துய்க்கலை; பாகமும் நோக்கலை;
நாளை இன்று என ஒருவேளையும் நவிற்றலை;
ஈண்டெனக்கு அருளுதி இறைவ
பூண்டுகொண்டிருப்பன் நின் பொன்னடித் துணையே" (28)

என்று வேண்டுகின்றார். இவ்வாறு ஞானப் பேற்றுக்குத் தீவிரதர சத்திநிபாதம் நிகழ்தல் வேண்டுமென்ற கருத்தைப் பிறாண்டும், "சத்திநிபாதத் தன்மை வந்தடைந்தோர்க்கு, அப்பொருள் புரிதற்கு அது பொழுதாகலின், மெய்ப் பொருள் உணர்த்துதல் வியப்பெனப் படாதே" (16) என்று வற்புறுத்துகின்றார்.

இனி, "ஞானதேசிகமூர்த்தி பக்குவமில்லார்க்கு உண்மை ஞானத்தை யுபதேசித்தல் குற்றமாதல் பற்றி அடியேனுக்கு அவ்வுபதேசத்தைச் செய்கின்றிலிராயின், அச்செய்யாமையும் குற்றமேயாம்" என்று நகுநயந் தோன்றக் கூறுவார் அடிகள், "தாகமின்றாகலிற் பாகமின்று எனக்கென, அருளாது ஒழியினும் பரிபவம் நினக்கே" (19) என்றும், நீ உபதேசிக்கும் ஞானம் சமயாதீதப் பழம்பொருளாதலின் அதனை வழங்கற்குக் காலம் நோக்கவேண்டா என்பார், "சமையந் தீர்ந்த தனிப்பொருள் தெரித்தற்கு, அமையம் தேர்கலை அருளுதி" (19) என்றும் வேண்டுகின்றார்.

இதுகாறும் கூறியவாற்ருல், உண்மை ஞானத்தின்பால் உலவா வேட்கை மேலிட்டுப் பல்வகையாலும் விண்ணப்பித்து நிற்கும் குமரகுருபரவடிகள், அந்த ஞானத்தின் பயனுக, தம்முடைய பசுகரணங்கள் பதிகரணங்களாய்த் திரிந்தமை கண்டு வியந்து,

"வாக்கும் மனனும் யாக்கையும் ஒன்ருச்
சொற்றரு கரண மற்றிவை மூன்றும்
நின்புகழ் நவிற்றியும் நினைத்தும்நின் துளைத்தாள்
அன்புடன் இறைஞ்சியும் இன்ப முற்றனவால்,
அவகரணங்களே யல்ல, மற்று, அம்ம
சிவகரணங்களாய்த் திரிந்தன வன்றே" (22)

என்று ஓதுகின்ருர். முடிவில் தாம் தம் ஞானதேசிக மூர்த்திபால் உபதேசிக்கப்பெற்ற ஞானனுபவத்தை,

"அடங்கா வைம்புலன் அடங்கினர்க்கு அம்ம
ஒடுங்கா ஐம்புலன் உளத்தினும் உளவே; அவைதாம்,
செவிப்புலன் அறியா அகத்தொலி ஒன்றே;
மெய்ப்புலன் அறியாத் தட்பம் மற்ருென்றே;
கட்புலன் அறியாக் கதிரொளி ஒன்றே;
நாச்சுவை அறியா நறுஞ்சுவை ஒன்றே;
மூக்குயிர்த்து அறியா முருகு மற்று ஒன்றே;
பேரா இன்பம் இப்பெற்றியின் திளைக்கும்
ஆராஇன்பம் ஒன்று ஆர்ந்தனம் யாமே, அதுவே,
... ... ... ...
பரமானந்தப் பரவையுள் தோன்றிய
இன்பவா ரமுதம்; அவ் வமுதம்
அன்பருக் கெளிது எளிது, அரிது விண்ணவர்க்கே" (25)

என்று விரித்தோதுகின்ருர். இதன் விளைவாகத் தமக்கு உண்டாகிய தெளிவினை,

"தன்னேரிலா ஞானசம்பந்தன் தாளடைந்தார்க்கு
என்னே இருள் வெளியாம் என்பரால்—அன்னேன்
அருளாதபோது வெளியாய் இருந்த எல்லாம்
இருளாய் இருந்த எனக்கு" (17)

என்று அடிகள் தெரிவிக்கின்றார்கள். இத்தெளிவால் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணிதேசிகராய ஞானமூர்த்தியின் திருவருள் பெற்றோர் உலகவாழ்வில் விருப்பும் வெறுப்புமின்றி ஒருதன்மையராக இருப்பர் என்பார்,

"ஆரூர் அமர்ந்த ஞானசம்பந்த
நின் புகழ்ந்து இறைஞ்சும் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பு அற்றிருப்பர் என்ப
பொருள் துணிபு உணர்ந்த புலமையோரே" (13)

என்று கூறுகின்றார்.

இவ்வாறு, உண்மை ஞானத்தின்கண் தீராவேட்கையுற்று, ஞானமூர்த்திகளான ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள்பால் பல்வகையானும் வேண்டிப் பரவும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், ஓரிடத்தே தம்மைப் பெண்ணாகக் குறிப்புருவகம் செய்து, ஞானதேசிக மூர்த்தியைத் தலைவனாக நிறுத்தி, அவரைக் கூடிப்பெறும் இன்பமே சிவானுபவமாக இன்பச்சுவை கனியக் கூறுகின்றார். இதுபற்றியே இப் பகுதியை மேலே கூறாது ஈண்டுக் கூறிக் காட்டுகின்றோம்.

"உயர்ந்தோன் தலைவன் ஒத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினும் இழிபெனப் படாதே
ஆதலின் யாம் உனைக் காதலித்தனமால்
காதலின் எமை அருட்கைப் பிடித்தருளி
ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருள் அறை திறந்த பெருவெளி மண்டபத்து
உயர் நாதாந்தத் திருமல ரமளியில்
புளகம் மெய் போர்ப்ப மொழி தடுமாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞான வாரமுத பானமது அருந்தி
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமானந்தப் பரவையுள் படிந்து
பேரா இயற்கை பெற்றினிது இருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே" (7)

என்பது. ''மிக்கோ னுயினும் கடிவரை யின்றே'' (களவு. 2) என்று ஆசிரியர் தொல்காப்பியனர் உரைத்ததுகொண்டு, ஈண்டு அடிகள் ''இழிந்தோட் புணரினும் இழிபெனப் படாதே'' என்கின்றார். அம்மிக்காரொடு கூடற்கு, கூடும் இருவர்பாலும் ஒத்த காதல் உளதாவது இன்றியமையாதாகலின், ''யாமுனைக் காதலித்தனமால்'' என்றும், ''காதலின் எமை அருட்கைப் பிடித்தருளி'' என்றும், அக்கூட்டம் சிறப்பது குறித்துக் காம பானம் பண்ணுதல் முறையாதலின், ''ஞானவாரமுத பானமது அருந்தி'' என்றும், களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களும் பிறவு மின்றி உயிர் நிரதிசய இன்பத்ததாயே நிற்றலின், வீட்டினைப் ''பேரா இயற்கை'' என்றும் கூறினர்.

### சைவசித்தாந்தக் கருத்துக்கள்

இதுகாறும் கூறியவாற்றால் வைதிக சமய நெறிகள் பலவற்றுள்ளும் சித்தாந்த சைவச் செந்நெறியினையே ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் விரும்பிப்பேணும் மேலோர் என்பது இனிது விளங்கும். ''ஓரும் வேதாந்த மென்று உச்சியிற் பழுத்த, ஆராவின்ப வருங்கனி பிழிந்து, சாரங்கொண்ட சைவ சித்தாந்தத் தேன்'' என்றும், ''திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தத்து இறவா நிலைமை'' என்றும் ஓதுவனவும் பிறவுமே அவரது உட்கோளைத் தெற்றெனத் தெரிவித்தலின் வேறு கூறல் மிகையாமாயினும், இப்பண்டார மும்மணிக்கோவைக்கண் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல காணப்படுதலால் அவற்றை ஒரளவு தொகுத்து ஆராய்தல் முறையாகும். அவை சித்தாந்த சைவச் செந்நெறியின் செம்மைப் பண்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களு மாவனவாம்.

இச்சைவ நன்னெறிக்கண் பதி பசு பாசம் என்ற மூன்றும் நித்த மென்றும், அநாதி யென்றும் கூறுப. இம்மூன்றும் நான்மறை நவின்ற நற்பொருள் என்பர். இதனை அடிகளே ''நான்மறை நவின்ற நற்பொருள் இவையென, மோனவா

சகத்தான் முப்பொருள் நவிற்றுபு, நன்னலம் புரியும் ஞானப் பிரகாசன்'' (1) என்று கூறுகின்றார். இவற்றுள் பதியாவான் பசுவாகிய ஆன்மாக்களைப்போல நித்தமும் அநாதியுமாதல் பற்றி ஸ்ரீ குமரகுருபர அடிகள், பசுவுக்கும் பதிக்குமுள்ள ஒத்த இயல்புகளை, "ஒன்றே தன்மை'' என்று தொடங்கும் திருவகவலில் வடித்துக் கூறலுற்று,

"ஒன்றே தன்மை உனக்கும் மற்று எமக்கும்;
அன்று என மொழியினும் ஆம் எனப்படுமே;
அங்ஙனம் கூறியது எங்ஙனம் பிற? எனில்,
எஞ்ஞான்று உளை, உளம் அஞ்ஞான்று யாமே;
அழியா நிலைமையை, அனையம் யாமே;
வியாபகம் நினக்குளது, யாமும் அஃது உளமே
அறிவெனப் பெயரிய பெயரினை, அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே;
இச்சா ஞானக் கிரியை என்றிசைக்கும்
சத்திகள் உளை, உளது அத்திறம் எமக்கே;
இந்நிலை முழுவதூஉம் எமக்கும் உண்டாகலின்
அந்நியம் அலம் நினக்கு, அநநியம் யாமே'' (7)

என்று விளக்குகின்றார். இதன்கண் யாம் என்றது உயிர் களையும், முன்னிலைப்படுத்தியது பரமபதியினையும் என அறிக.

இவ்வாறு பதியும் பசுவும் முழுதும் ஒத்த இயல்பின போலக் கூறினராயினும், பசுவும் பதிப்பொருளேயாம் எனத் துணியலாகாது; பதிப்பொருள் பசுவினும் உயர்ந்தது; ஈண்டுக் காட்டிய ஒப்புமை ஒருபுடை யொப்புமையே யென்பார் "உன் னுடன் எம்மையும் ஒப்பெனப்படுத்து, முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில, முழுவதும் ஒவ்வாதொழியினும் ஒழிக'' என்று தெருட்டுகின்றார். இவ்வொவ்வாமையினை ஆசிரியர் அருணந்தி சிவாசாரியார், "சிவன் சீவன் என்றிரண்டும் சித்து, ஒன்றும் என்னில், சிவன் அருட்சித்து, இவன் அருளைச் சேரும் சித்து, அவன் தான் பவம், கேடு, புத்தி முத்தி பண்ணும் சித்து, அவற்றிற் படியும் சித்து, அறிவிக்கப்

திருப்பணிகள்:— இவர்கள் அருளாட்சியேற்ற காலம் எங்கும் பணநெருக்கடி ஏற்பட்டநேரம். நாட்டில் வெள்ளச் சேதம் புயற்கொடுமை இவற்றால் சரியான விளைவுகள் இல்லை. அவ்விதமிருந்தும் செலவுகளை ஒருவாறு திட்டப்படுத்தி, வருவாயிலிருந்தே நடைமுதல் செலவுகளுஞ் செய்துகொண்டு கொஞ்சங் கொஞ்சமாகப் பொருளை மீதப்படுத்தி அவசியமான திருப்பணிகள் பலவும் செய்துள்ளார்கள்.

1. ஆதீன மடாலயம்:— மடாலய முகப்பு சிற்பத்திறம் செறிந்த இடமாக, உறுதியின் உறையுளாக, அழகின் அடைக்கலத்தானமாக ஆக்கப்பெற்றது. கருங்கற்பணியாக முன்மண்டபம் போட்டுச் சித்திரத்தூண்கள் நிறுத்தி அவைகளில் குதிரைக்கால், யாளக்கால் அமைத்து அழகுபடுத்தப் பெற்றன. இம்முகப்பின் வடபகுதியிலே புலவர்பெருமக்கள் புத்தகருபமாகப் பொருந்தி அணியணியாக அழகுசெய்கின்றனர். அதாவது அறிவுக்களஞ்சியமாகிய புத்தகநிலையம் இருக்கிறது. மடத்தின் முன்கட்டும் இருபுறமும் குறடுவிட்டு மேடைகட்டப் பெற்றது. அதில் ஒவ்வொரு மதியிலும் ஞானசம்பந்த ஞான ஞாயிறு உதித்துக்கொண்டிருக்கிறது. அதன் பதிப்பகம் இப்போது அங்கு இருக்கிறது.

2. பந்திக்கட்டு:— சுகாதார முறைக்கேற்ப வெளிச்சமும் காற்றுந் தவழ கலியாண கூடவேலையாகத் தூக்கிக் கட்டப் பெற்றுள்ளது. கீழே தரை செப்பனிடப் பெற்று யானையடிச் சதுரக்கல் பரப்பித் தளவரிசை செய்யப் பெற்றிருக்கிறது.

3. பண்டாரக்கட்டு:— தரைக்கும் தூண்களுக்கும் ஒளிச் சிமிட்டிபூசி அழகும் ஒளியும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாதன என்பதை யுணர்த்தி நிற்கச் செய்யப்பெற்றுள்ளது.

4. பூசைமடம், ஒடுக்கம்:— மிகச் சிலமாயிருந்தது. அதனை முழுமையும் இடித்துக் காற்று வெளிச்சமுதலிய எல்லாவசதிகளும் அமைய நவீன முறையில் கட்டப்பெற்றுள்ளது.

## தருமபுரம் ஆதீன மடாலயம்



1. முகப்பு



2. முகப்புப் பந்தலலங்காரம்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி கோயில்



1. மரவாகனங்கள்



2. வெள்ளிவாகனங்களும் எடுப்பிடிகளும்

5. நிர்வாகஸ்தலம்:— ஏற்கனவே இருந்தது மிகப்பழமை யானது. அதனை இடித்து எடுத்துவிட்டுப் புதுவசதிகள் பொருந்த நன்கு கட்டப்பெற்றுள்ளது.

6. சரக்கறை:— இதுவும் ஏற்றமுறையில் திருந்திய அமைப் புடன் இயற்றப்பெற்றுள்ளது.

7. இருமுகப்புகள்:— மடத்தின் வடக்கு முகப்பு தெற்கு முகப்பாகிய இரண்டும் நன்றாக எடுத்துக் கட்டி வர்ணம் தீட்டப்பெற்றுத் தெற்கு முகப்பிற்குச் சம்பந்தர் நிலையம் என்றும், வடக்கு முகப்பிற்கு அப்பர் நிலையம் என்றும் பெயர் சூட்டப் பெற்றன. வடக்கு முகப்புக்கு வெளியில் விருந்தினர்களை வர வேற்க விருந்தினர் மாளிகை கட்டப்பெற்று வருகிறது. அம் மாளிகையில் வடக்கு முகப்பைச் சேர இருக்கும்பகுதிக்கு சாந்த நிலையம் என்றும், அதனை ஒட்டிக் கிழக்கிலிருக்கும் பகுதிக்கு மெய்கண்டான் நிலையம் என்றும் பெயரிடப்பெற்றுள்ளன. இது, வருவோர் மெய்கண்டான் திருவருளால் சாந்த நிலையையடைந்து அப்பரடிகளைப்போல அருந் தொண்டர்களாகிச் சொக்கலிங்கச் சிவத் திருவருள் பெற்றுச் சிவஞானச்சேயாக விளங்க வேண்டும் பெருங்கருணைத்திறத்தைக் காட்டி நிற்கின்றது.

8. நான்கு திருவீதிகள்:— வீதிகளுக்கு அழகு வீடுகளிருத்தல். வீடுகளும் அழகுடனிருத்தல். ஆதலால் நான்கு வீதிகளிலும், மடத்துக் காரியஸ்தர்கள் குடியிருக்க, வீடுகள் பல கட்டப் பெற்றுள்ளன. மின்சார விளக்குகளும் போடப்பட்டுள்ளன.

9. குருபக்தி:— முன்னிருந்த 23-வது பட்டத்துக் குரு மூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியர் களின் ஞாபகார்த்தமாக, வடக்குவீதி ஓரமாக காவிரிக்குப் போகும் வழியாகிய திருமஞ்சன வீதியில் ஒரு அழகிய வளைவு கட்டப் பெற்றுள்ளது.

10. சித்திவிநாயகர் ஆலயம்:— இவ்வாலயம் புதுப்பணி யாகச் சித்திர சிற்பம் செறியச் செய்யப்பெற்றது. கும்பா பிஷேகமும் இயற்றுவிக்கப்பெற்றது.

11. பிறஆலயங்கள்:— மடத்தை யடுத்துள்ள இரு ஆலயங் களுக்கும் வேண்டிய திருப்பணிகள் செய்யப்பெற்றுள்ளன.

12. குளங்கள்:— மடத்தின் முன்புறமுள்ள திருத்தொண்டர் குளம், தேரடிக் குளம், சச்சிதானந்த விநாயகர் திருக்குளம் இவைகளைச் சுத்தம்செய்து சேறுவாரி படித்துறைகள் கட்டப் பெற்றன. அவ்வப்போது தண்ணீர் சுத்தமாகப் பாதுகாக்க ஏற்பாடுகள் இயற்றப்பெற்றுள்ளது.

13. கற்சாலையிலிருந்துவரும் கிளைப்பாதையை நேர்ப்பாதை யாகச் செப்பனிடப்பெறுகிறது. பாதையின் இருபுறங்களிலும் அழகிய வளைவுச்சுவர் ஏற்படுத்திக் கண்கவர் வனப்பினதாகச் செய்யப்பெற்றுள்ளது.

தேரடிகள் தூக்கிக் கட்டப்பெற்றுள்ளது.

14. இவ்வாறே ஆதீனத்தைச்சார்ந்த வெளியூர் மடங்களும் திருப்பணி செய்யப்பெற்றுப் பல சீர்திருத்தங்கள் வழங்கப் பெற்றன. திருநின்றியூரில் கிட்டங்கிக் கட்டிடம் ஒன்று கட்டி வைக்கப்பெற்றுள்ளது.

ஆலயங்கள்:—

1. தருமபுரம் ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயம்:— இதன் வருமானம் மிகக்குறைந்தது. இதன் வருவாயைக்கொண்டு இதன் நிர் வாகத்தை நடத்துவதே சிரமமானது. ஆகையால் இதற்கு வேண்டிய பணிகள்யாவும், ஆதீன மடாலய நிதியிலிருந்தே

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான



ஸ்ரீ தருமபுரீஸ்வரசுவாமி ஆலயம், தருமபுரம்.



ஸ்ரீ சித்திவிநாயகர் ஆலயம், தருமபுரம்.

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான
திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி கோயில்



உள்தோற்றம்

மாயவரம் வள்ளலார் கோயில்



ஸ்ரீ வதான்யேசுவர சுவாமி கோயில் உள்தோற்றம்

செய்யப்பெறுகின்றன. இதன் கோபுரம் மிகச்சிலமாக இருந்ததை இடித்து மொட்டைக் கோபுரமாகக் கட்டப்பெற்றது. அழகிய பல திருவுருவங்களைச் சுற்றிலும் அமைத்து அழகுபடுத்தப் பெற்றுள்ளது. திருமதில் முழுமையும் சிமிண்டு பூசிக் கருங்கல் வேலைப்பாடு காட்டப்பெற்றுள்ளது. சந்நிதிவிநாயகர் ஆலயமும் அப்படியே.

2. மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமி கோயில்:— இராஜகோபுரம் திருமாளிகைப்பத்தி மண்டபம் முதலியன மிகச் சிலமாக இருந்தன. அவற்றை இடித்து எடுத்துவிட்டு மொட்டைக் கோபுரமாகக்கட்டி இருபக்கங்களிலும் ஒட்டு மண்டபங்களும் கட்டித் திருத்தம் செய்யப்பெற்றுள்ளன. வெளிச்சுவற்றின் சுண்ணும்பு சுரண்டப்பெற்று வெள்ளையும் வைக்கப்பெற்றது.

3. கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி கோயில்:— வெளித்திருமதில்களுக்குச் சிமிட்டி பூசப்பெற்றது. முன்கோபுரம் கட்டப்பெற்றது. பிராகாரங்களுக்குப் புதிதாகத் தளவரிசை போடப்பெற்றது. மண்டபங்கள் முழுமையும் கொத்தி வெள்ளைவைக்கப் பெற்றது. சந்நிதியில் காற்று வெளிச்சத்திற்காக இருஜன்னல்கள் வைக்கப்பெற்றுள்ளன. கோயிலின் தென்புறம் உள்ள சிக்குருவி தீர்த்தம் சேறுவாரித் திருப்பணி செய்யப் பெற்றுள்ளது. மடைப்பள்ளியும் திருத்தப் பெற்றுள்ளது. கோபுரவாயிலிலும் உள்ளும் திருப்பாடல்கள் வரையப் பெற்றுள்ளன.

4. மாயூரம் வள்ளலார் கோயில் ஸ்ரீ வதான்யேசுவர சுவாமி கோயில்:— முன்புறத்து மண்டபங்கள் அடைசலாக இருந்தன. அவை இடித்துச் சுத்தம் செய்யப்பெற்றன. மேலத் திருமாளிகைப்பத்தி மண்டபம் பூராவும் புதிதாகக் கட்டப்பெற்றன. மற்ற மண்டபங்கள் சுரண்டி வெள்ளைத்தீர்வை வைக்கப் பெற்றன. சுவாமி கோயில் மண்டபங்களும் அங்ஙனமே. சரக்கறையும் தேவஸ்தான ஆபீஸும் வைப்பதற்கு ஒட்டுக்

கட்டிடம் ஒன்று புதிதாக கட்டப்பெற்றது. நந்தவனத்திற்கு வெளிச்சுவர் கட்டப்பெற்றது. சுவாமிகோவில் அர்த்தமண்டபத்தில் வெளிச்சமில்லாதிருந்தமையால் வௌவால்கள் அடைந்தன. அம்மண்டபத்தில் ஜன்னல்வைத்துக் கட்டப்பெற்றதும் வௌவால்களும் பறந்துபோய்விட்டன.

5. குறுக்கை ஸ்ரீ வீரேட்சுவரசுவாமி கோயில்:— உள் மண்டபம் பூராவும் தளங்கொத்திக் கல்பாப்பி வெள்ளைவைக்கப் பெற்றது. சுவாமி சந்நிதியில் உள்ள வௌவால்நத்தி மண்டபம் இருபுறமும் தூக்கி வேலைசெய்து வெளிச்சம்வரக் கண்ணாடிகள் வைத்தும், ஜன்னல்வைத்தும் கட்டப்பெற்றுள்ளன. அக்கினி மூலையில், திருமடைப்பள்ளி ஒட்டுக் கட்டிடமாகப் புதிதாக வசதிகளுடன் கட்டப்பெற்றது. இரண்டாம் கோபுரத்தின் வாயில் குறுகலாகவும், உயரமின்றியும் இருந்தது. அதனை இடித்து உயரமாகவும் அகலமாகவும் செய்ய வேலை நடந்து வருகிறது. கோயிலின் தென்மேற்கு மூலையில் தேவஸ்தானக் கச்சேரியும், நெற்களஞ்சியமும் வைக்க ஒருகட்டிடம் கட்டப் பெற்றுள்ளது.

6. தலைஞாயிறு ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவரசுவாமி கோயில்:—வெளிமதில் புதிதாகக்கட்டிச் சிமிண்டு பூசப்பெற்றது. அம்மையார் சந்நிதியில் ஒருபெரிய ஜன்னல் போடப்பெற்றது. சுவாமி சந்நிதியிலும் அடைசலாகவும் நெருக்கமாகவும் இருந்த மண்டபத்தைத் தூக்கி வேலை செய்யப்பெற்றது. ஜன்னல்கள் வைத்துக் கட்டப்பெற்றன. தளவரிசை போடப்பெற்றது. மடைப்பள்ளி சீர்திருத்தப்பெற்றது. தூண்கள் மண்டபங்கள் வெள்ளைவைக்கப்பெற்றன.

7. புள்ளிருக்கு வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி கோயில்:— இந்தக்கோயில் ஒரு பிரபல காணிக்கை க்ஷேத்திரம். இங்கு இறைவன் வினைதீர்த்த பெருமானாக விளங்குகிறார். அம்மை தையல்நாயகி மயல்தீர்க்கும் மருந்தாக இருக்

தருமபுரம் ஆதீனத்துக்குச் சொந்தமான



வைத்தீஸ்வரன்கோயில் (வேளூர்) ஐந்து கோபுர தரிசனம்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான

வேளூர் தேவஸ்தானம்



புதிதாகக்கட்டப்பட்ட கடைகள்



புதிதாகக்கட்டப்படும் திருமதில் (இதன்உயரம் 21 அடி.)

கிருர். இளையபிள்ளை முருகன் செல்வமுத்துக்குமாரராக, வேண்டியன தரும் விண்ணவர்தலைவராக விளங்குகிருர். இங்கு முடிப் பிரார்த்தனைக்காக வருபவர்கள் பலர். முடி செலுத்து வதற்கு ஏற்ற இடவசதியில்லாதிருந்தது. அதற்காகப் புதிய கட்டிடம் கட்டப்பெற்றது. அதன் பக்கத்தில் உள்ள கோதண்ட தீர்த்தத்தையும் செப்பனிட்டு ஸ்நானவசதி யளிக்கப்பெற்றுள் ளது. இந்த தேவஸ்தானத்தில் யானை ஒன்று வைத்துப் பராமரிக்கப்படுகிறது. அது இருப்பதற்காக ஒரு ஒட்டுக் கட்டிடம் கட்டப்பெற்றது. சுவாமி சந்நிதி, தட்டஞ்சுற்றி மண்டபம் இரண்டும் மிகப்பள்ளமாகப் போய்விட்டது. அதனை உயர்த்திக் குறடுகளுக்கு கான்கிரீட்போட்டு உறுதிப்படுத்தித் தளவரிசையும் செய்யப்பெற்றது. கிலமாக இருந்த இடங்களைத் திருத்திப் பாவுகல்போட்டும், (Ferro) கான்கிரீட் வேலைசெய்தும் உறுதிப்படுத்தப் பட்டுள்ளன. இரண்டு பக்கங்களிலும், புதிதாக ஜன்னல்கள்போட்டு வசதிசெய்யப்பெற்றன. மண்டபம் பூராவும் ஒழுங்குபடுத்திப் பூசப்பெற்றது. இந்த மண்டபத்தில் தான் வழிபாட்டிற்காக வரும் ஆயிரக்கணக்கான மக்கள் தங்கி வருகிருர்கள். இந்த மண்டத்திற்கு "சண்முகவிலாசப் பிரசார சபா மண்டபம்" எனப்பெயர். இம்மண்டபத்துச் சுற்றுச் சுவர்களில் தலத்தேவாரங்கள், அருட்பாடல்கள் எல்லாம் எழுதப்பெற்று அருட்டமிழ் ஆலயமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. கோவிலில் நடைபெறும் சமயப்பிரசங்கங்கள் யாவும் இங்கேயே நிகழ்த்தப்பெறும். தெற்கு வெளித்திருமதில் இடிந்துபோய் விட்டது. இப்போது அம்மதில் அடியில் கருங்கல் வரிவிட்டு வானளாவக் கட்டப்பெற்றுள்ளது. இன்னும் கோவிலில் அடைசலாகவும், இருளடைந்தும் இருந்த இடங்கள் தக்க முறையில் சீர்திருத்தம் செய்யப்பெற்று வருகின்றன. ஆஸ்தான மண்டபத்தின் பின்புறம் உள்ள மண்டபம் காற்றும் வெளிச் சமும் தந்து சீர்பெறுத்தப் பெற்றுள்ளது. ஆடிப்பூர அம்மன் சந்நிதி, தையனுயகி கோயிலின் கீழ்புறம், ஸ்ரீ செல்வமுத்துக் குமாரசாமி சந்நிதி இவைகளில் தளவரிசை ஒட்டுக் கற்களாகப் போடப்பட்டிருந்தவைகளை எடுத்துவிட்டுப் பெரிய கருங்கற்கள் பாவிச் சீர் பெறுத்தப் பெற்றுள்ளன. அம்மன்

சந்நிதியிலுள்ள சித்தாமிர்தத் தீர்த்தத்தை இறைத்துச் சேறு வாரி, படித்துறைகளையும் செப்பனிட்டுச் சீர் செய்யப்பெற்றது. அதன் சுற்றுப்பக்கங்களுக்குக் 'கான்கிரீட்' போட்டுத் தளவரிசை செய்யப்பெற்றது. அதன் ஒருபகுதி அகலப்படுத்தப் பெற்றது. கட்டளைமடம் வெகுசிலமாக இருந்ததை இடித்து விட்டுப் புதிதாகக் கட்ட அஸ்திவாரம் போடப்பெற்றுள்ளது. கோவில் பூராவும் மின்சாரவிளக்குகள் போடப்பட்டன. நந்தவனத்திற்குத் தண்ணீரிறைக்க ஒரு மின்சாரக்குழாய் இயந்திரமமைக்கப்பெற்றது. கோவிலைச் சேர்ந்த சில கடைக் கட்டிடங்களை இடித்தெடுத்துவிட்டுப் புதிதாக வசதியாகக்கட்டிக்கொடுக்கப் பெற்றன. உற்சவமூர்த்திகள் எழுந்தருளியுள்ள இடங்களும், பரிவட்டங்கள் காயவைக்கும் இடங்களும், உண்டியல்மேடையும் பந்தோபஸ்திற்காகவும், பரிசுத்தத்திற்காகவும் இரும்புக் கம்பிகள் போட்டு அடைக்கப்பட்டன. சுவர்களுக்குச் சந்து பதித்தும், வெண்சாந்து பூசியும், சுறண்டிச் சிமிட்டுவைத்தும், சீர்திருத்தங்கள் செய்விக்கப்பெற்றன. யாத்ரீகர்களுடைய வசதியை முன்னிட்டு, சீகாழி — வைத்தீஸ்வரன் கோவில் கற்சாலையிலுள்ள குளத்தைச் சேறுவாரிச் சுத்தம் செய்விக்கப் பெற்றது.

மற்றும், ஸ்ரீவள்ளிநாயகியாருக்குக் கல்லிழைத்த கிரீடம் ஒன்றும், வெள்ளிஸ்நானவேதி ஒன்றும், சோமாஸ்கந்தருக்கு வெள்ளிப் பார்வைத்தகடும், ஆறுமுகக் கடவுளுக்குக் கவசமும் செய்துவைக்கப் பெற்றுள்ளன.

மருவத்தூரில் ஆதித்திராவிடர்களுக்கென ஒரு கிணறு தோண்டி மேடை முதலியனவும் கட்டித்தரப்பெற்றது.

8. *சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி கோயில்:—* கோயில் திருமாளிகைப்பத்தி மிகக்கிலமாக இருந்ததை இடித்தெடுத்து விட்டுப் புதிதாகக் கட்டக்கூடியவைகள் கட்டப்பெற்றன. கொடுங்கையாளங்கள் சீர்செய்யப்பெற்றன. ஸ்ரீ சட்டைநாத

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான



(வேளூர்) வைத்தீஸ்வரன்கோயில் மேல்தளம்



சீகாழி திருத்தோணிமலை

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தைச் சேர்ந்த



ஸ்ரீ அக்னீசுவர சுவாமி கோவில்

புதுப்பிக்கப்பட்டு சமீபத்தில் கும்பாபிஷேம் நடைபெற்றது.



தேவஸ்தானம் ஆபீஸ்

சுவாமி பலிபீடத்தைச் சுற்றிலும், அடைப்புப் போடப்பெற்றது. ஸ்ரீ சோமாஸ்கந்தர் சந்நிதியும் அப்படியே. திருமாளிகைப்பத்தி தளம்பூராவும் கொத்தி வெள்ளை வைக்கப்பெற்றது. சுவாமி கோயில் வடக்குத் திருமதில் மிகப்பழுதாக இருந்தது. அதனைப் பிரித்துவிட்டுப் புதிதாகக் கட்டிமுடிக்கப் பெற்றது. திருஞான சம்பந்தருடைய எழுந்தருளுருவம் இருந்தருளுமிடத்தைத் தனிக் கோவிலாகக் கட்டத் திட்டம்போட்டு வேலை நடைபெறுகிறது. பிரமபுரீசர் கோயில் சந்நிதியில் நடராஜர் சபையிருக்கும் இடத்தில், புதுமாதிரியான சன்னல்கள் வைத்துக் கட்டப் பெற்றன. சபைக்குமுன் கருங்கல் தளவரிசை போடப்பெற்றது. அறுபத்துமூவர் சன்னதியிலும் கருங்கல் செப்பனிட்டுப் பரப்பப் பட்டது. மேற்குத் திருமதில் வடபகுதியும் வடக்குத் திருமதில் மேல் பகுதியும் பூராவும் கருங்கல்வரி விடப்பெற்று உயரமாகக் கட்டத் தொடங்கப்பெற்று முடிவுறுஞ் சமயத்திலிருக்கிறது. மேலவீதியிலிருந்த பைரவர் கோயிலைத் திருத்திக் கட்டிச் சமீபத்தில் கும்பாபிஷேகமும் செய்விக்கப்பெற்றது. அக்கினி புரீசர் ஆலயமும் அங்ஙனமே. பிடாரி கீழவீதியிலுள்ள சந்நிதி விநாயகராலயம் புதுப்பிக்கப்பட்டது. பிடாரிகோயிலுக்குத் தளவரிசை போடப்பெற்றது. தேவஸ்தான கச்சேரி வைக்க அழகான சிறியகட்டிடம் கோவிலுக்குள்ளேயே கட்டப் பெற்றுள்ளது. தெற்குவீதியில் யாத்ரீகர்கள் வந்து தங்க ஒரு சிறுவிடுதி கட்டப்பெற்றது. கீழ ராஜகோபுரம் சிலமாகி இடிந்து விழுந்துவிட்டது. அதை இப்பொழுது கட்ட அஸ்திவாரம் போடப்பட்டுள்ளது. அம்மன் சந்நிதியிலுள்ள பிரமதீர்த்தம் சேறுவாரிச் சுத்தஞ் செய்யப்பெற்றதோடு தண்ணீர் எக்காலத்திலும் வந்து பாய வருகால் வடிகால் வசதி களும் செய்யப்பெற்றுள்ளன. உற்சவமூர்த்திகள் எழுந்தருள மகாமண்டபத்தில் குறடுகட்டி, இரும்புக்கம்பி யடைப்பும் இடப் பெற்றது. சுவாமிகோயில் மலை இவற்றுள் தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாடல்கள் வரையப் பெற்றுள்ளன. மின்சார விளக்குகள் போடப்பெற்றுள்ளன. கோயிலின் மேற்புறமுள்ள தோட்டத்திற்கு வெளிச்சுவர் எடுக்கப்பெற்றது. அங்கும், சிங்காரத் தோட்டத்திலுமாகச் சுமார் ஆயிரம் தென்னைகள்

வரை போடப்பெற்றுப் பயிராகி வருகின்றன. திருக்கோயிலுக்கென்று ஒரு நாகமாலை செய்துவைக்கப் பெற்றுள்ளது.

9. **ஆச்சாபுரம் ஸ்ரீ சிவலோகத் தியாகராஜ சுவாமி கோயில்:**— சுவாமி சந்நிதி மகாமண்டபத்தில் மேற்பாவுகற்கள் உடைந்துபோயிருந்தனவற்றை எடுத்துப் புதுக்கற்கள் போடப் பெற்றன. மண்டபங்கள் வேலை செய்யப்பெற்றன. சபைக்குப் பக்கத்தில் ஒருபந்தோபஸ்து அறை கட்டப்பெற்றது. சுவாமி கோயில் பிராகாரம் முழுதும், சிமிட்டிக்கல் போட்டுத் தளவரிசை செய்யப்பெற்றது. சுவர்கள்யாவும் சுரண்டி வெள்ளை பதியப் பெற்றன. மேலப்பிராகாரத்தில் நந்தவனத்திற்குச் சுற்றுச் சுவர் கட்டி வளர்ச்சி செய்விக்கப் பெற்று வருகிறது. அம்மையார் கோயில் ராஜகோபுரம் மிகச் சிலமாக இருந்ததால் அதனை அப்புறப்படுத்திவிட்டுக் கோபுரவேலை காட்டிக் கட்டப் பெற்றுள்ளது. கோயிலில் திருப்பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. திருஞான சம்பந்தர் கோயில் முழுமையும், திருமதில் முழுமையும், பழுதுபார்த்துச் சிமிட்டி பூசப்பெற்றது. திருக்குளமும் பாய்கால் வடிகால் கட்டிச் சுத்தமாகவைக்கப்பெற்று வருகிறது.

10. **விளநகர் ஸ்ரீ துறைகாட்டும் வள்ளலார் கோயில்:**— அம்மன் சந்நிதி வழிதிறந்துவிடப்பெற்றது. தெற்குவீதியிலும் தெற்கு மதிலிலும் ஒவ்வொரு வளைவு போட்டு இருபுறமும் சுவர் கட்டி விடப்பட்டது. நந்தவனங்களுக்குச் சுற்றுச்சுவர் எடுக்கப்பட்டன. வெளிமண்டபங்கள் கொத்தி வெள்ளை வைக்கப் பட்டன. சுவாமி கோயிலில் பள்ளியறைக்கு எதிரே ஜன்னல் வைத்துக் கம்பிவலை யடைத்துக் காற்றும் வெளிச்சமும் உலவ வேலை செய்யப் பெற்றது. தேவாரப் பதிகங்கள் எழுதப் பெற்றுள்ளன.

11. **பரசலூர் ஸ்ரீ வீரட்டேசுவர சுவாமி கோயில்:**— உள் மதில்கள் அளறு அடித்ததைச் சுரண்டி அழகாகச் சிமிட்டி பூசப்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான



திருவையாற்றில் அப்பருக்கு கயிலைக் காட்சி அளித்த தென்கயிலாயம்



விளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார் கோயில் முன்தோற்றம்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான
திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி கோயில்



தேவஸ்தானம் கச்சேரி



நூற்றுக்கால்மண்டபம்

பெற்றது. வீடு ஒன்று கட்டப்பெற்றது. மற்றொரு வீடு கட்ட ஏற்பாடாகி வருகிறது.

12. திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி கோயில்:— சுவாமி சந்நிதியில் மேலைக் கோபுரத்தையொட்டி வழிபடுவோர் வசதிக்காக ஒருதகரக் கொட்டகை போடப்பெற்றது. தள வரிசையாக கான்கிரீட் செய்து கல்வரிசை சிறப்பெற்றுள்ளது. நூற்றுக்கால் மண்டபத்தில் வௌவால்கள் மிகுந்திருந்தன. அம்மண்டபத்தின் நாற்புறமும் சிலமாகவிருந்த வௌவால் நத்திகளை இடித்துவிட்டு இடையிடையே கருங்கல் பாவுகள் பரப்பி ஒட்டுமண்டபமாக வேலை செய்யப்பெற்றது. சுவாமிகள் எழுந்தருளியாகும் ஆஸ்தானமண்டப மேடைக்கு மேலே கல்யாணகூடமாகத் தூக்கி வேலை செய்யப்பெற்றது. மிகவும் எடுப்பாகவும் சுவாமிவைத்து அலங்காரம் பண்ணத் தனித்த அழகுடையதாகவும் ஆக்கப்பெற்றது. கோயில் மேற்றளம் முழுமையும் கொத்தி வெள்ளை பூசப்பெற்றது. உள்பக்கம் பூராவும் பூசப்பெற்று வருகிறது. இரும்பு ஜன்னல்கள் வைத்துக் கட்டப்பட்டிருக்கின்றன. கோயிலின் வடபுறத்தில் உள்ள நந்தவனம் காடாகவும் கரடுமுரடாகவும் இருந்தது. அதனை அழித்து மேடுபள்ளங்களை நிரவிப் புஷ்பச்செடிகள் போட்டு இப்போது நன்மணங் கமழும் நந்தவனமாகச் செய்யப்பெற்றுள்ளது. கீழ ராஜகோபுரமாகிய முனீஸ்வரன் கோபுரம் சிலமாக இருந்தது. அதனைச் செம்மைப்படுத்தி, வர்ணம்தீட்டி, செப்புக்கலசங்கள் வைத்துக் கும்பாபிஷேகமும் செய்விக்கப்பெற்றது. இந்த ராஜகோபுரத்திற்கும், சுவாமிசந்நிதி கட்டைக் கோபுரத்திற்கும் பெரிய மரக்கதவுகள் செய்து போடப்பட்டன. இரண்டாங் கோபுரத்திற்கு இரும்புக்கம்பிக் கதவு செய்யப்பெற்றது. இரண்டாம் பிராகாரம் வடக்கு மேற்குத் திருமதில்களில் பெரும்பாகம் இடிந்துவிட்டதால் அதனை எடுத்துப் புதிதாகக் கட்டிச் சிமிட்டும் பூசப்பெற்றது. தேவஸ்தானம் கச்சேரி, நெற்களஞ்சியம், பரிமார்த்தறை இவைகள் முழுமையும் சீர் திருத்தப் பெற்றுப் புதியகாட்சியும், காற்றும் வழங்கச் செய்யப்

பெற்றன. மேற்றளத்தைக் கொத்தி வெள்ளை திட்டப் பெற்றதோடு கைப்பிடிச் சுவர்கள் வைத்தும் கட்டப்பெற்றுள்ளன. சுற்றுச் சுவர்களும், தரையும் சிமிண்டு பூசப்பட்டது. திருக்கோயில் களில் அங்கங்கு உரிய திருப்பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. கட்டைக் கோபுரவாசல் தரை கருங்கல் தளவரிசை யிடப் பட்டது. அதில் துவார பாலகர் திருவுருவங்கள் சிறந்த சுதை யமைப்பாகத் தோற்றுவிக்கப்பட்டன. கால சம்ஹாரமூர்த்தி எழுந்தருளியுள்ள இடத்து அர்த்தமண்டபம் முழுமையும் வர்ணம் வைக்கப்பெற்று அழகுபடுத்தப் பட்டது. சுவாமி சந்நிதியில் தரிசனார்த்திகளின் சௌகர்யத்திற்காக எல்லோரும் சுவாமி தரிசனம்செய்ய இருபக்கங்களிலும் இரும்புக் கைப்பிடிக் கம்பிகள் போடப்பட்டன. இயமதருமன் இருக்கும் இடத்தைத் தனிக் கோயிலாகக் கட்டிக் கம்பிஅடைப்பு போடப்பட்டிருக் கிறது. பந்தோபஸ்து அறைகள் திருத்தி யமைக்கப் பெற்று உறுதியாக்கப்பெற்றன. கோயில் சிப்பந்திகள் குடியிருப்புக் காகச் சுவாமி சந்நிதியிலும், மேலவீதியிலுமாக இரு வீடுகள் புதிதாகக் கட்டப்பெற்றன. சந்நிதியில் இலவமரங்கள் வைத்துப் பயிராக்கப் பெறுகின்றன. மற்றும் பல சில்லரைத் திருப்பணி கள் நடைபெறுகின்றன. மின்சார விளக்குகளால் கோயில் அலங்கரிக்கப் பெற்றுள்ளது. கோயிலுக்குச் சொந்தமான மணற்பாங்கான நிலங்களில் சுமார் பதினாயிரத்திற்கு மேல் பனங்கொட்டைகள் போட்டுப் பயிராக்கப் பெறுகின்றன. புதிதாக வீடுகளும், கட்டிடங்களும் வாங்கப்பெற்றுள்ளன.

13. திருத் தருமபுரம் (காரைக்கால்) ஸ்ரீ யாழ்மூரிநாத சுவாமி கோயில்:— திருமாளிகைப்பத்தி மண்டபங்கள் உள்ளும் புறமும் வேலை செய்யப்பெற்றன. தளவரிசை யிடப்பெற்றன. சுவர்கள் சிமிட்டி பதியப்பெற்றன. அம்மையார் சந்நிதியில் ஒரு கொட்டகை அமைக்கப்பெற்றது.

14. பேரளம் ஸ்ரீ சுயம்புநாத சுவாமி கோயில்:— ஆஸ் தான மண்டபம் தளம், சுவாமி உட்கோயில் தளங்கள் இவைகள்

கொத்திப் பழுதுபார்த்து வெள்ளி பதியப்பெற்றுள்ளன. சுவாமி சந்நிதியிலுள்ள மண்டபம், அம்மன் பிராகாரம் முதலியன சீரியமுறையிற் செப்பனிடப்பெற்றன. நெற்றிக்கண் தூண்களும், சுவர்களும் பூசப்பெற்றன. மணிமண்டபம் கட்டப் பெற்றது. முன்மண்டபத்தில் தேவஸ்தான காரியாலயம் வைக்கச் சுத்தம்செய்து இரும்புக்கம்பிக் கதவுகள் போட்டுப் பாதுகாப்பிட மாக்கப்பட்டன. சுவாமி சந்நிதியிலுள்ள பழைய மண்டபம் கிலமாயிருந்ததால் இடித்துவிட்டுக் கல்யாண மண்டபமாகத் தூக்கி வேலைசெய்து ஜன்னல்களும் போடப்பெற்றன. அதன் முன்கோபுரவாயில் அகலப்படுத்தி உயர்த்திக் கட்டப்பெற்றது. சந்நிதி மிகப் பார்வையாகவும், வெளிச்சமாகவும் இருப்பது பலராலும் பாராட்டப் பெறுகின்றது. சுவாமிகோவிற் சுவர்கள் முழுதுமே பூச்சுவேலையாற் பொலிவடைந்துள்ளது. சுவாமி யிருக்குமிடத்திலும் சரியாக வெளிச்சம் வராததால் வெளவால் கள் விட்டகலாமல் இருந்தன. வடபக்கத்தில் வாசலும் கதவும் இட்டு வெளிச்சம்வரச் செய்யப்பெற்றது. இதனல் வெளவால் துன்பம் இப்போது இல்லை. சுற்றுக் கோயில்களிலும் கருப்பக் கிருகத்தில் சுவாமிகளுக்குமேல் மச்சுப்பலகை போடப்பட்டது. சுவாமி கோயில் வடக்குப் பிராகாரத்தில் கிணறு கட்டி, கைப்பிடிச்சுவர், மேடை முதலியன அமைக்கப்பட்டன. கோயில்முழுதுமே தளவரிசைகள் புதிதாகப் போடப்பெற்றன. இப்போது இராஜகோபுரம் வாசல் அகலப்படுத்தி, உயரமாகவும் திருத்தமாகவும் கட்டப்படுகிறது. வர்ண வேலைகள் நடந்து வருகின்றன. கோயிலின் வடபுறமுள்ள சுவற்றிற்குச் சுவர் எழுப்பிச் சிமிட்டி பூசப்பெற்றிருக்கிறது. சந்நிதியிலுள்ள திருக்குளம் வெட்டிச் சுத்தம் செய்யப்பெற்றது. கோயில்கள் பூராவும் மின்சாரவிளக்குகள் போடப்பெற்றுள்ளன. அங்கங்கு தென்னைமரங்கள் புதிதாகவைத்து வளர்க்கப் பெறுகின்றன.

15. திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானம் இராஜாங்கக் கட்டளை:— கட்டளைமடம் பழையதாகவும், வசதி யாகவும் இல்லை. அதற்கு வசதியான கட்டிடம்கட்ட வேலை ஆரம்பித்து நடந்து வருகிறது.

16. திருக்குவளை ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயில்:—சுவாமி சந்நிதியில் கருங்கல் தளவரிசை போட்டும், அம்மன் சந்நிதியில் கப்பிபோட்டுச் சிமிண்டுதளவரிசை செய்தும் தூய்மையுறுத்தப் பெற்றது. மணிமண்டபம் அளறு அடித்து மிகக்கிலமாகி இருந்தது. அதனைச் செப்பனிட்டுச் சிமிட்டி பூசப்பெற்றது. மடைப்பள்ளிக்கு ஜன்னல்கள், புகைபோக்கிகள் அமைத்துத் திருத்திக் கட்டப்பெற்றன. திருமாளிகைப்பத்தி மண்டபம் முழுமையும் இருபக்கமும் எழில்பெறச் சிமிட்டி பூசப்பெற்றது. கட்டளைமடம் சிலமாகிவிட்டது. அதனை யிடித்துவிட்டுப் புதிதாகவே சீரியமுறையில் சிறந்த மாடிக்கட்டிடம் ஒன்று கட்டப்பெற்றது.

17. மாயவரம் ஸ்ரீ காசிவிசுவநாத சுவாமி கோயில்:—இக் கோயில் மிக மிகப் பழமையானது. மிகச் சொற்பமான வருமானமுள்ளது. வருமானம் நாட்பூசைக்கே போதுமானதாக இராது. இந்நிலையில் நகரத்தெரு உயர்ந்து, கோயில் மட்டம் தாழ்ந்திருந்தது. அதனால் தெருத்தண்ணீர் கோயிலில் நுழைந்து விடக்கூடியதாக விருந்தது. ஆதலால் கோயில் மட்டத்தை யுயர்த்திப் புதியகருங்கல் திருப்பணியாக ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் கைங்கர்யமாகத் திருப்பணி நடந்து வருகிறது.

18. குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவர சுவாமி கோயில்:—சுவாமி கோயில் உட்பிராகாரம் மிகப் பள்ளமாகத் தண்ணீர் தேங்கி வந்தது. அதைக் கப்பி போட்டு உயர்த்திக் கருங்கல் தளவரிசை போடப்பெற்றது. பிராகாரத்தில் கிணறு ஒன்று புதிதாகக் கட்டப்பெற்றது. திருமாளிகைப்பத்தி மண்டபங்கள் மேற்புறம், உட்புறம், சுற்றுச்சுவர்கள் இருபக்கம் எல்லாம் சிமெண்டுபூசிச் செப்பனிடப் பெற்றது. சுவாமி கோயிலில் ஈசானபாகத்தில் ஒரு மடைப்பள்ளி புதிதாகக் கட்டப்பெற்றது. இராஜகோபுரம் யாளவரிவரை பழுதுபார்க்கப் பெற்றது. கோபுரவாயில் தளவரிசை போடப்பெற்றது. சந்நிதியின் வடபுற

தருமபுர ஆதீனம் 24-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
சொந்தச் செலவில் திருப்பணி செய்துவரும் இவ்வாதீனத்துக்குச் சொந்தமான
மாயவரம் ஸ்ரீ காசி விஸ்வநாத சுவாமிகோயில்



**1. தரைப்படம்**



**2. கோவில்தோற்றம் (Plan)**

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான



குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி கோயில்



திருக்கற்குடிமாமலை

மாக ஒருவீடுகட்டி அதற்குச் சுற்றுச்சுவர் வளைவுச்சுவர் போடப் பெற்றிருக்கிறது. அவ்வீட்டில் இப்பொழுது கோவில் காரியஸ்தர் குடியிருந்து வருகிறார். மின்சார விளக்குகள் போடப்பட்டுள்ளன. வாகனங்கள் வர்ணம் பூசப்பெற்று அழகுபடுத்தப் பெற்றுள்ளன. வடக்குத் திருமதிலில் இடிந்த ஒருபகுதி திருத்தியமைக்கப்பெற்றது. தெற்கு வெளிச்சுற்று மதிலில் இராஜகோபுரம் வரை புதிப்பித்துக் கட்டப்பட்டிருக்கிறது.

19. **மாயூரம் குமரகட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில்:—** இக்கோயிலைச் சார்ந்த மீனாக்ஷி சுந்தரேசுவரர் ஆலயத்தைப் புதுப்பித்துக்கட்டி வர்ணம் வைத்திருக்கிறது. மகா கும்பாபிஷேகமும் இயற்றுவிக்கப் பெற்றது. தேவஸ்தானம் கச்சேரி, சுவர்முதலியன சிமெண்டு பூசப்பெற்றிருக்கின்றன. திருப்பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. கோயில் இரண்டாம் கோபுரத்தையடுத்து வடபால்உள்ள கட்டிடத்தின் வடபக்கம் மண்டபம் பழுதானநிலையில் இருந்ததை இடித்தெடுக்கப் பெற்றது. புதிதாக ஒட்டுமண்டபமாகக் கட்டப் பெற்றது. மின்சார விளக்குகள் அமைக்கப்பட்டன. வாகனங்கள் செப்பஞ் செய்யப்பெற்றன. தேர்நிலை வேலை செய்யப்பெற்று விளங்குகிறது. சுவாமிக்கு வெள்ளியில் கவசங்கள் செய்துவைக்கப் பெற்றதோடு வெள்ளி வாகனங்களும் செய்யப் பெற்றுள்ளன. கல்லிழைத்த நெற்றிப்பட்டம் வாங்கி வைக்கப்பெற்றது. பரிவட்ட அறையும் கட்டப்பட்டுள்ளது.

20. **திருவிடைமருதூர் பிச்சைக் கட்டளை:—** கட்டளைக்கும், களஞ்சியத்திற்கும் வசதியான கட்டிடம் கட்டப்பெற்றது. கச்சேரிக்காகச் சன்னிதியில் ஒருவீடு வாங்கப்பெற்றது.

21. **திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேசுர சுவாமி கோயில்:—** கட்டைக்கோபுரத்தில் சிலமாக இருந்த பகுதிகளை இடித்துப் புதிதாகக்கட்டி வர்ணம்வைத்து அழகு செய்யப் பெற்றது. சுவாமி

கோவில் அம்மன் கோவில் தளம் முழுமையும் சுரண்டி வெள்ளை யிட்டப்பெற்றது. திருமாளிகைப்பத்தி மண்டபமும் மேற்றளம் வேலை செய்யப்பெற்றது. சுவாமி கர்ப்பக்கிருக விமானத்தில் செடி முளைத்திருந்தது. உச்சியிற் கலசமும் இல்லாதிருந்தது. அவை களையெல்லாம் களைந்து வர்ணம்தீட்டி செம்பினியன்ற கலசத்தைச் சீர்பெற அமைத்துக் கும்பாபிஷேகமும் செய்விக்கப்பட்டது. சுவாமி கோவிலில் அர்த்நார்த்த மண்டபத்தில் ஒரே இருளா யிருந்தமையால் வெளவால் தொந்திரவு மிகுந்திருந்தது. அதை நீக்க அம்மண்டபத்தில் ஜன்னல்கள் போட்டு வெளிச்சம் வரச் செய்யப்பெற்றது. அர்த்தமண்டப மகா மண்டபங்களைத் தூக்கிக் கல்யாணகூடமாக வேலைசெய்ததால் வெளிச்சமும் காற்றும் வரப் புதிய அழகு பொருந்துவதாயிற்று. உள்திருச்சுற்று மட்டம் உயர்த்தப் பெற்றுக் கப்பிபோட்டுக் கருங்கல் தளவரிசை போடப்பெற்றது. சுவாமிகோயில் அம்மன்கோயில் இவற்றின் உள்ளிருந்த பல இடமடைக்கும் பகுதிகளை யகற்றித் தரை யெல்லாம் கருங்கல் தளவரிசை போடப்பட்டது. ஜலதாரை மட்டம் உயர்த்திக் கட்டப்பெற்றது. சோமாஸ்கந்தர் எழுந்தருளி யுள்ள மண்டபத்துப்படிகள் திருத்தி யமைக்கப் பெற்றன. மேலைக்கோபுரம் வெடிப்பேற்பட்டு அபாய நிலையில் இருந்தது. அதனை அகற்றி மொட்டைக் கோபுரமாக வேலைசெய்யப் பெற்றுள்ளது. மடைப்பள்ளி திருத்தி எல்லா வசதிகளும் அமைய ஆக்கப்பெற்றது. கட்டளை மடத்திற்கு எதிரில் தோட்டத்திற்குச் சுற்றுச் சுவர் கட்டப்பெற்றது. திருவிடை மருதூர், திருபுவனம் கற்சாலையிலுள்ள குளம் செப்பனிடப் பெற்றது. கும்பகோணம் பாதையிலுள்ள ஒரு குளம் நன்றாக வெட்டப்பெற்றுப் பாய்கால் கட்டப்பெற்று விளங்குகிறது. திருக் கோயிலுக்கு மஞ்சங்களும், வெள்ளிப்படிச்சட்டம் ஒன்றும் செய்துவைக்கப் பெற்றுள்ளன. பவுன் காசுமாலை ஒன்று வாங்கி வைக்கப்பெற்றிருக்கிறது. கீழராஜகோபுரத்திலிருந்து கட்டைக்கோபுரம்வரை தரைமட்டத்தை யுயர்த்தி, கற்றளவரிசை செய்யப்பெற்றிருக்கிறது. வெளிப்பிராகாரம் தென்புறம் மேல் புறம் நந்தவனத்திற்கு சுற்றுச்சுவர் எடுத்துப் பூச்சுவேலையும் முடிக்கப்பெற்றது. நந்தவனம் வளமுடையதாக, வனப்புடைய

# தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி கோவில்



(A)



(B)

திருப்பணி செய்தபோது எடுக்கப்பட்டது





கும்பாபிஷேகத்தன்று எடுக்கப்பட்டது

(A) இரண்டாங்கோபுரம்

(B) கர்ப்பக்கிரகம்

## தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோவில்



1. ரிஷபாரூடர் (பழங்கால ஓவியம்)



2. நந்தவனம்






3. குங்கிலியக்கலயர் சரித்திரம் கல்லில் செதுக்கப் பட்டிருப்பது

நாக வைக்கப்பெற்றுள்ளது. திருவாபரண அறையும் திருத்திப் பலப்படுத்தப் பெற்றுள்ளது. சரபேசர் ஆலய ஜலதாரை திருத்தியமைத்து உற்சவர் ஆலயமும் புதுப்பிக்கப்பட்டது.

22. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுர சுவாமி கோயில்:—இங்குள்ள நாககன்னிகை தீர்த்தம் திருத்தியமைக்கப் பெற்றது. படித்துறைகள் சீர்திருத்தப் பெற்றுள்ளன. சுற்றுத் திருமதில் முழுமையும் சுரண்டிச் சிமெண்டு பூசப்பெற்றது. திருமாளிகைப்பத்தி மண்டபங்கள் யாவும் புதுப்பிக்கப்பெற்றன உள் ஆஸ்தானமண்டபத்தில் பெருங்கருங்கல் தளவரிசை போடப் பெற்றிருக்கிறது. சந்நிதிகளில் இரும்புக்கம்பிக் கதவுகள் போடப் பெற்றன. தேவஸ்தான காரியாலயம், களஞ்சியம் இவைகள் மிகப் பழமையாக இருந்தன. சிலமாகவும் இருந்தன. அதனை இடித்துப் புதிய கட்டிடவேலை நடந்து வருகிறது. அறுபத்துமூவர் எழுந் தருளியுள்ள இடத்தில், பின்புறம் சுவற்றில் நாயன்மார்கள் திருவுருவம் நல்ல வர்ணச்சித்திரங்களாகத் தீட்டப் பெற்றுத் திரு நாமங்களும் எழுதப்பெற்றுள்ளன. நந்தவனத்திற்குச் சுற்றுச் சுவர் அமைத்துப் புதிய செடிகளும் பதியம்போட்டுப் பண்பாகப் பரிபாலிக்கப்பெற்று வருகின்றன. தேர்நிலைகள் முழுமையும் புதுப்பித்துச் செப்பஞ் செய்யப்பெற்றன. பவுன்காசு மாலை ஒன்றும், கல்லிழைத்த பதக்கங்கள் முதலினவும் வாங்கப் பெற்றன. கட்டளைமடம் மிக அழகாகக் கட்டப்பெற்றிருக்கிறது. இரண்டு வீடுகள் வாங்கப் பெற்றுள்ளன.

23. திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீஸ்வர சுவாமி கோயில்:— தீர்த்தமாகிய சூரிய புஷ்கரணியின் சுற்றுச் சுவர்கள் திருத்திச் சிமிட்டி பூசிச் செப்பனிடப் பெற்றன. தக்ஷிண கயிலாயத்தின் முன்கோபுரம், குடவரை சுற்றியுள்ள திருமாளிகைப் பத்தி மண் டபங்கள் இவைகளிலுள்ள வேர்கள் பிரித்தெடுத்துத் திரும்பக் கட்டி கருங்கல் சந்து கீறிச் சுண்ணும்பு பதியப்பட்டன. பூச வேண்டிய இடங்களிற் சுண்ணும்பு பூசப்பெற்றது. மேலைக் கோபுரம் கருங்கல் தளவரிசை போடப்பெற்றது. வட கயிலாயத்

தில் சுற்றுச்சுவர் எடுத்துச் சுத்தம் செய்யப் பெற்றது. சுவாமி சந்நிதி கட்டைக் கோபுர வாயிலும் கருங்கல் தளவரிசை போடப் பட்டது. கோபுர வாயில் இருபுறமும் அறைகள் கட்டித் தள வாடங்கள், வாரைகள் வைக்க வசதி செய்யப்பெற்றன. ஆஸ்தான மண்டபத்தின் தென்பாகத்திலிருந்த இடமடைத்த பொருள்களை எடுத்துவிட்டுச் சைவசமயப் பிரசங்க சபைக்கு மேடை கட்டி வைக்கப் பெற்றது. இந்த மண்டபத்தில் சைவ நீதி களும், பொன்னுரைகளும் பொறிக்கப் பெற்றன. கோவில் உட் பிராகாரம் திருமாளிகைப்பத்தி மண்டபங்கள் திருத்தப்பெற்றுக் கொடுங்கை யாளங்களும் சீரியமுறையில் அமைத்துக் கைப்பிடி கட்டி வேலை செய்யப்பெற்றுள்ளன. திருமாளிகைப் பத்தி மண்ட பத்துள்ள பழங்கால் சித்திரங்கள் புதுக்கப்பெற்றுக் கண் கவரும் வனப்பினவாக வர்ணம் வைக்கப்பெற்றுள்ளன. திருமாளிகைப் பத்தி மேற்றளத்துக்குச்செல்ல ஒரு படிக்கட்டும் கட்டப்பெற் றுள்ளது. பிராகாரம் தளவரிசை இடப்பட்டது. தீர்த்தத்தின் மேற்புரத்தில் ஆட்கொண்டார் சந்நிதி போகும்வரை இருபுற மும் குறடுகட்டிவிடப் பெற்றிருக்கிறது. தென்கயிலாய தோட் டச்சுவர் பூசப்பெற்றது. கோவில் பூராவும் மின்சார விளக்குகள் போடப்பெற்றன. வட கயிலாயத்துக்குத் தென்புறம் சுவர்கட்டிப் பூசியும், அப்பக்கமுள்ள ஜலதாரைகளைச் செப்பனிட்டும், மண்டபம் பழுதுபார்த்தும் வெள்ளை வைக்கப் பெற்றது. சுவாமிகோவில் வெளிப்பிராகாரத்தில் தேவஸ்தான நிர்வாக காரியாலயம் வைக்க ஒருகட்டிடம் வேலை செய்யப் படுகிறது. இரதங்கள் வைக்கத் தகரக்கொட்டகை போடப்பெற்றுப் பெருங்கதவுகள் போடப்பெற்றுள்ளன. கதவுகள் வளைவுதகரத் தாலானவை. காவிரிக்கரை பூசப்படித்துறையில் மண்டபங்கள் சுவர்கள் கிலமாயிருந்தன. அவைதிருத்திப் புதுப்பிக்கப்பெற்றன. அங்கு ஒரு மடைப்பள்ளி திருத்திக் கட்டப்பெற்றது. திருக் கோயிலுக்கு வெள்ளிப் படிச்சட்டம் செய்துவைக்கப் பெற்றது. கிழக்கு வெளித்திருச்சுற்றில் ஒரு நீருறிஞ்சி வைக்கப்பட்டிருக் கிறது. தேர்நிலைகள் முழுமையும் சிமிட்டி பூசப்பெற்றுள்ளது. யாத்திரிகர்கள் வசதிக்குச் சுவாமிசந்நிதியில் வழிகாட்டிகள் வைக் கப்பெற்றன. சுமார் (3000) மூவாயிரம் தென்னைகள் வரை

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான



கற்குடி உஜ்ஜீவனநாதசுவாமி கோயில்



மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரர் ஆலயம்



திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரர் ஆலயம்
உள்தோற்றம்

பயிர் செய்யப் பெறுகின்றன. வீடுகள் வாங்கப் பட்டன. கட்டளைமடம் திருத்திக் கட்டப்பெற்றது. கடைகள் புதுப்பிக்கப்பெறுகின்றன. அம்மையார் கோவில் திருப்பணி முடிந்து கும்பாபிஷேகம் நடத்தப் பெற்றது.

24. திருக்கற்குடி ஸ்ரீ உஜ்ஜீவநாதசுவாமி கோயில்:— திருமதில்கள் கோட்டைச் சுவர்களை ஒப்பக் கட்டப்பெற்றிருக்கின்றன. திருக்குளம் கீழ்க்கரையில் [Ferro] கான்கிரீட் சுவர் எழுப்பியும், தெற்குக் கரையில் இருந்த கற்களைப் பிரித்தடுக்கியும் தூய்மைசெய்யப் பெற்றது. அங்கு 250 தென்னம் பிள்ளைகள் வரை வைத்துப் பயிராக்கப் பெறுகின்றன. கோவில் தளம் பூராவும் சுத்தப்படுத்தி வெள்ளை வைத்தும், மடப்பள்ளி திருத்தி அமைத்தும், உட்கோவில்கள் வரிசை பிரித்து ஒழுங்குபடுத்தி போட்டும்;நெற்றிக்கண்,தூண்,சுவர் முதலியன பூசியும் திருப்பணி செய்விக்கப்பெற்றது. ஆபீஸ் கட்டப்பெற்றது. படிகள் பழுது பார்க்கப்பட்டன. கீழ் மண்டபம் மேல்பூச்சு, கீழ்த்தளவரிசை பக்கத்துச்சவர் பிரித்து அடுக்கி பூச்சுசெய்தல் முதலான காரியங்கள் செய்து வரப்படுகின்றன.

25. திருச்சிராப்பள்ளி - மலைக்கோட்டை மௌனமடம் கட்டளை:— காவிரிக் கரையிலுள்ள சமாதித் தோட்டத்திற்கு முள்வேலி போடப்பட்டது. மௌனமடத்திலும் அதனைச் சார்ந்த சத்திரத்திலும் அளறுஅடித்த பகுதிகளில்சிமிட்டி பூசப்பெற்றது. மடத்திலுள்ள சுப்பிரமணிய சுவாமிகோவிலைப் பழுதுபார்த்து வர்ணம் வைக்கப்பெற்றுக் கும்பாபிஷேகமும் நடத்தப்பெற்றது. ஸகஸ்திரலிங்கக் கோயில் புதுப்பிக்கப்பெற்றது.

26. திருமுல்லைவாசல் ஸ்ரீ முல்லைவனநாத சுவாமி கோயில்:— தீர்த்தக்கிணறு பழுதுபட்டிருந்ததைப் பிரித்துக் கட்டி மேடையும் கட்டப்பட்டது. பல சில்லரைத் திருப்பணிகளும் செய்யப்பெற்றன. புதிதாக வீடுகட்டப்பெற்றது.

சமயப் பணிகள்:-

1. *சமயப் பிரசாரம்:—* சைவசமயக் கொள்கைகள் மக்களிடையே நிலைநிற்கப்பிரசாரங்கள் இன்றியமையாதனவாதலின் ஆதீன மடாலயத்திலும், எல்லாத் தேவஸ்தானங்களிலும் கூட்டம் கூடும் நாட்களில் பல முறையும் நல்லறிஞர்களைக் கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்துவிக்கப் பெறுகின்றன.

ஆதீனத்திலேயே சமயப்பிரச்சாரகர் நியமிக்கப்பெற்றிருக்கின்றார். அவரது நாட்பணி சொக்கலிங்கமூர்த்திகள் சந்நிதியில் புராண படனம் செய்வது. சிறப்புப்பணி தேவாலயங்களுக்குப் போய்ச் சொற்பொழிவு செய்வது. ஆதீனத் தொடர்பில்லாத பிற தேவஸ்தானங்களுக்கும் அவ்வப்போது போய்வர அனுமதியளிக்கப்பெற்றிருக்கிறது. திருச்சியில் நடந்த சைவசித்தாந்த சமாஜம், பழநி திருப்புகழ் மகாநாடு, திருநாரையூர் திருமுறை மகாநாடு, ஆகிய இவற்றிலும் பிரசாரகர் மகாசன்னிதானத்தின் உத்திரவுப்படி கலந்துகொண்டு, பணிபுரிந்தனர்.

மகாநாடுகளுக்கு உதவி

1. மெய்கண்ட சாத்திர மகாநாடு திருநெல்வேலி:— இம்மகாநாட்டில் சிறந்த கட்டுரையாளருக்குப் பரிசு வழங்க உதவிநிதியளிக்கப் பெற்றது. அக்கட்டுரைகளை வாங்கி அச்சிட்டு வழங்கவும் ஏற்பாடாகி வருகிறது.

2. சைவசித்தாந்த மகா சமாஜம் சென்னை:— ஆண்டுகள்தோறும் நடைபெறும் சமாஜநிகழ்ச்சிகளுக்குப் பிரதிநிதிகள் அனுப்பி நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளச் செய்யப் பெறுகின்றது. 1941ல் திருச்சிராமலை மலைக்கோட்டையில் நடந்த மகாநாட்டிற்கு உதவிநிதி யளிக்கப்பெற்றது. 1942ல் டிஸம்பர் மாதத்தில் சீகாழியில் நடந்த மகாநாட்டிற்கு உதவிநிதி யளிக்கப் பெற்றதோடு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திறப்புரையும், ஆசியுரையும் அருளினார்கள். அவைகள் அச்சிடப்பெற்று

## தருமபுர ஆதீன மடாலயத்தில் நடந்த
## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு



29—8—41

1. *தலைவர்.—* சென்னிமலை, காசிவாசி
**சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்**



30—8—41

2. *தலைவர்:—* சென்னை இந்துசமய அறநிலையக்கழக உறுப்பினர்,
இராவ்பகதூர், திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் B.A., B.L.,

யாவருக்கும் வழங்கப்பெற்றன. இந்த நிகழ்ச்சிகளில் உடனிருந்துதவ மலைக்கோட்டை ஸ்ரீ மௌன, சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அனுப்பப்பட்டார்கள். ஆதீன ஓதுவா மூர்த்திகளும், ஆதீனப் பாடசாலை மாணவர்களும் இன்னிசைக் கருவிகளுடன் திருமுறைப் பாராயணம் செய்ய அனுப்பப் பெற்றார்கள்.

3. பழனி திருப்புகழ் மகாநாடு:—பழனி தேவஸ்தானச் சார்பில் நடந்த திருப்புகழ் மகாநாட்டில் முன்னேற்பாடுகள் செய்ய ஸ்ரீ மௌன, சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளை அனுப்பிக் கவனிக்கச் செய்யப்பட்டது. ஓதுவாமூர்த்திகளும் சைவப் பிரசாரகரும் அனுப்பப்பெற்றனர்.

4. திருநாரையூர் திருமுறை மகாநாடு:— திருநாரையூர் மகா கும்பாபிஷேக காலத்தில் நடைபெற்ற திருமுறை மகா நாட்டிற்கு ஸ்ரீ மௌன, சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளும், ஆதீனப் பாடசாலை மாணவர்களும் ஓதுவா மூர்த்திகளும் அனுப்பப் பெற்றார்கள். அவ்வவர்களும் நிகழ்ச்சிகளிற் கலந்து கொண்டு பணிபுரிந்தனர்.

## சித்தாந்த மகாநாடு. திருமுறைத் திருநாள்

1941ம் ஆண்டு மெய்கண்டான் மகாநாடு நடத்தப்பெற்றது. மகாநாட்டுத் தொடக்கம் ஆவணிமூலத் திருநாளை யொட்டித் தொடங்கியது. மூன்று நாட்கள் நடைபெற்றன. சிவஞான போத சூத்திரங்களைத் தனித் தனியாகப் புலவர் பெருமக்களை ஆராய்ந்து வரச்செய்து கட்டுரை வழங்கவும் சொற்பெருக்கு ஆற்றவும் ஏற்பாடு செய்யப்பெற்றது. மூன்று நாளும் மூன்று தலைவர்கள் இருந்தார்கள். அந் நிகழ்ச்சிகளின் சுருக்கம் தனியாக அச்சிடப் பெற்றுள்ளது. இம்மகாநாட்டோடு சேர்த்து ஒருநாள் திருமுறை விழாவும் நடைபெற்றது. பன்னிரண்டு திருமுறைகளிலும் வல்லாரைக்கொண்டு சொற்பெருக்கு நிகழ்த்து

விக்கப் பெற்றதோடு இரவு நன்கு அலங்கரிக்கப்பெற்ற வெள்ளி இரதத்தில் திருமுறைகளை எழுந்தருளப்பண்ணித் திருமுறைப் பாராயணத்துடன் திருவீதியுலா நடைபெற்றது.

1942ம் ஆண்டு ஆவணி மூலத்திருநாளன்றும் சமயப் பிரசாரங்களும், திருமுறை விழாவும் நடத்துவிக்கப் பெற்றன.

## கும்பாபிஷேகப் பணிகள்

பல கோவில்களிலும் கும்பாபிஷேகத்திற்கு உதவிநிதி முதலியன அளித்து ஆதரிப்பதுண்டு. அவற்றுள் சிறப்பாக

1. திருச்செந்தூர் செந்திலாண்டவன் கோவில் கும்பாபிஷேகத்திற்கு நிதியளிக்கப்பெற்றது.

2. திருநாரையூர் கும்பாபிஷேகத்தில் திருமுறைகளைத் தமிழ்நாடும் சிறப்பாகச் சைவ உலகமும் பெற்றுய்யக் காரணமாயிருந்த அத்தலத்தில் சந்தானசாரியார், சேக்கிழார் இவர்கள் திருவுருவம் இருக்கவேண்டிய இன்றியமையாமையை உளத்துக்கொண்டு திருவுருவங்கள் செய்விக்கப்பெற்றன. அவர்கள் எழுந்தருளக் கருங்கல் மண்டபம் கட்டப்பெற்றது. கும்பாபிஷேகமும் செய்விக்கப்பெற்றது.

சேந்தன்குடி ஸ்ரீ துர்க்காபரமேஸ்வரி அம்மன்:— கோயிலுக்கு உதவிநிதி யளித்துத் திருப்பணி நிறைவேற்றி அஷ்டபந்தன மருந்து முதலியன அளித்துக் கும்பாபிஷேகமும் சிறப்பாக நடத்தச் செய்யப்பெற்றது.

## பிறபணிகள்

1. 1940ம் ஆண்டில் திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயில் பெரிய தேரும், பிறதேர்களும் இழுக்கப்பட வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. அப்போது ஆதீனத்திலிருந்து 4000 ஆட்களையும், தக்க காரியஸ்தர்களையும் அனுப்பிவைக்கப் பெற்றது. பெருமழையும் புயற்காற்றும் உண்டாகிப் பல கஷ்டங்கள் நேர்ந்தும் தேர் நிலைசேர்த்து வைக்கப்பெற்றது.

விடாமுயற்சியோடு இழுத்துவைத்த ஆட்களின் சேவையைப் பாராட்டி அவ்வளவு பேருக்கும் சந்தனம், தாம்பூலம், ஆடை ஆகிய யாவும் வழங்கப்பெற்றன.

### சிவஞான சித்தியார் பாடவகுப்பு

1943ம் ஆண்டு குருபூசை விழாவை யொட்டி சித்தியார் பாடவகுப்பு ஆறுநாட்கள் நடத்தப்பெற்றது. பழனி சிவாகம வித்தியாசாலை ஆசிரியர் சிவஸ்ரீ காசிவாசி ஈசான சிவாசாரியார் அவர்களைக்கொண்டு நடத்துவிக்கப்பெற்றது. ஆண்பெண் இருபாலாருமாக 20க்கு மேற்பட்ட தேர்ந்த வித்துவான்கள் கலந்துகொண்டு, பாடங்கேட்டுப் பயன் எய்தினர். அவரவர்களுக்கு உண்டி உறையுள் முதலிய வசதிகள் செய்து, வந்துபோக வழிச் செலவும் தரப்பெற்றது.

### கலைப்பணியும்—கல்விப்பணியும்

இக்குருமகாசந்நிதானம் அருளாட்சி ஏற்றது முதலாக இந்நாள்காறும் நாற்பத்தொன்று நூல்கள் ஆதீன வெளியீடாக வெளிவந்துள்ளன. அவற்றின் பெயரும் குறிப்பும் பட்டியலிற் காணலாம்.

### ஆதீனத்திலிருந்து உதவிநிதிபெற்று வெளிவந்த நூல்கள்:—

1 யசுர்வேதம்:— இது வடமொழி கிருஷ்ணயஜுர் வேதத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு. வேத உபநிஷத் மொழிபெயர்ப்பாசிரியர் பம்பாய் திரு. M. R. ஜம்புநாதன் அவர்களால் மொழிபெயர்க்கப்பெற்றது.

2 தமிழ்ச் சுருக்கெழுத்துத் தற்போதினி:— இதுவரை தமிழ் விரிவுரைகளை விரைவிற் படிஎடுப்பதற்குத் தக்க முறையில்லாதிருந்தமை மொழிக்குப் பெருங் குறையாக இருந்தது. அதனை நீக்க ஆங்கில அறிஞர் ‘பிட்மென்’ (Pitman) முறையைஒட்டித் தஞ்சை திரு. P. G. சுப்பிரமணிய அய்யர் அவர்களால் ஆக்கப்பெற்றது.

3. திருவதிகைத் தலமான்மியம்:—அட்டவிரட்டத்துள் ஒன்ருன இத்தல புராணத்தை வசன வடிவமாக ஆக்கப்பெற்றது. இது நெல்லிக்குப்பம் திரு. பாலசுந்தர நயினர் அவர்களால் எழுதப் பெற்றது. கும்பாபிஷேக காலத்தில் வெளியிடப்பெற்றது.

4. ஒளியும்—ஒலியும்:— தமிழ் மொழிக்குப் பொருளாராய்ச்சி நூல்களும் மிகத்தேவை. ஆதலின் இந்நூல் அண்ணமலைப் பல்கலைக்கழக ஆசிரியர் திரு. R. K. விஸ்வநாத அய்யரால் எழுதப் பெற்றது.

ஆதீனத்திற்குப் பதிப்புரிமை வாங்கிய நூல்கள்

1. மெய்கண்ட நூல்கள் உரைநடை:— மெய்கண்ட நூல்கள் பதினன்கினையும் எளிய முறையில் இளைஞரும் இனிது கற்க திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L., அவர்களால் எழுதப்பெற்றது. காஞ்சிபுரம் மெய்கண்டான் கழகத்தாரால் வெளியிடப்பெற்றபோது அதற்கு உதவிநிதி யளிக்கப்பெற்றது. அதன் பதிப்புரிமையை தற்போது வாங்கப்பெற்றிருக்கிறது. திருத்தமாக வெளியிடவும் ஏற்பாடாகி வருகிறது.

2. சைவசித்தாந்த நூல்கள்:- காலஞ்சென்ற நீதிமன்றத் தலைவர் (District Munsif) J. M. நல்லசாமிப்பிள்ளை, B. A., B. L., அவர்கள் எழுதி வெளியிட்ட நூல்கள் யாவும் ஆதினத்தில் பதிப் புரிமை வாங்கப்பெற்றுள்ளன. அவைகளைத் திருத்திய முறை யில் வெளியிட ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

3. சிவப்பிரகாசம்:— சைவ சாத்திரங்கள் பதினன்கனுள் இந்நூலை ஆங்கிலம் கற்ருேரும் படித்துணர அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, M. A., M. L., அவர்களைக்கொண்டு மொழிபெயர்க்கச் செய்து பதிப்புரிமையும் பெறப்பட்டிருக்கிறது.

## தருமபுர ஆதீன மடாலயம்



1. ஞானசம்பந்தம் பதிப்பகம்



2. பண்டாரக்கட்டு

திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்:— கோவை சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களால் விரிவுரை எழுதப்பட்டு வெளிவருகிறது. செலவு பூராவும் இவ்வாதீனத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது, அதனை முடித்து இந்நிகழ்ச்சி இரண்டாம் நாளில் அரங்கேற்ற ஏற்பாடாகியிருக்கிறது.

## ஆகம தானம்

பௌஷ்கர விருத்தி, கிரியாதீபிகை, சிவாக்கிர பாஷ்யம், அகோரசிவாசாரியார் பத்ததி நிர்மலமணிதேசிகர் வியாக்கியானம் முதலியனவற்றைச் சூரியனூர்கோவில் ஆதீனம் இலக்கணம் ஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களிடம் வாங்கித் தகுதியுடையோருக்கு வழங்கிவரப்பெறுகின்றன.

## ஞானசம்பந்தம்

இவ்வாதீனத்திலிருந்து ஒவ்வொரு ஆங்கில மாதம் பத்தாந் தேதியில் ஒரு திங்கள் வெளியீடு வெளிவருகின்றது. இதற்குச் சந்தா மிகக்குறைந்தது. ஆண்டு ஒன்றுக்கு அஞ்சற்கூலியுள்பட ரூபா 1—8—0. அதற்கு இதழாசிரியர் ஒடுக்கம், ஸ்ரீ சிவகுருநாதத் தம்பிரான் சுவாமிகள். ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்ல அறிஞர்களால் கட்டுரை வழங்கப்பெறுகின்றது. கட்டுரைகள் யாவும் சமய சாத்திரங்களும், திருமுறைகளும் பற்றியனவாகவே இருக்கும்.

## பதிப்பகம்

கலைப்பணிகள் கவினுற நடைபெற, விரைவில் விருப்பம் போல நடைபெற பதிப்பகம் ஒன்று மிகத் தேவையாயிற்று. அப்போது "ஞானசம்பந்தம்" என்னும் திருப்பெயராலேயே ஒரு பதிப்பகம் நிறுவப்பெற்றது. அதில் ஆதீனத் தொடர்பான நூல்கள் பலவும் முறையாக அச்சிடப்பெற்று வருகின்றன. மற்றும், நிர்வாக சம்பந்தமானவைகளும் அச்சிடப் பெறுகின்றன.

பாடசாலைகள்

தேவாரப் பாடசாலை:- சைவச் சிறுவர்களுக்குத் தெய்வத் திருமுறைகள் பயிலுவிக்க இக்கல்விச்சாலை நிறுவப்பெற்றது. பயிலும் மாணவர்களுக்கு உண்டி, உடை, உறையுள் முதலியன யாவும் அளிக்கப்பெறுகின்றன.

சிறுவர்களுக்குத் தமிழ், ஆங்கிலம், வடமொழி, சைவ சித்தாந்த சாத்திர ஆரம்பப் பாடம், கலாசாலைக்கேற்ற ஆரம்பப் பாடம் ஆகிய இவைகள் பயிற்றுவிக்கப் பெறுகின்றன. இவற்றிற்குத் தனித்தனி ஆசிரியர்கள் நியமிக்கப் பெற்றுள்ளனர். மாதத்தேர்வு, ஆண்டுத்தேர்வுகளும் நடைபெறுகின்றன. ஆவணி மூலத்திருநாளை யொட்டி நடத்தப்பெறும் விழாவில் ஆண்டுத் தேர்வு நடத்தப்பெற்று, தேர்ந்த மாணவர்களுக்குப் பரிசு தகுதிக்கேற்ப வழங்கப்பெறுகிறது.

ஆதீனக் கோயில்களில் நடைபெறும் திருவிழாக் காலங்களில் மாணவர்கள் தேவார பாராயணம் செய்துவருகிறார்கள். மற்றும் அங்கங்கு நடைபெறும் மகாநாடுகளுக்கும் அனுப்பப் பெறுகின்றனர். ஆதீன சம்பந்தமில்லாத பிற கோவில் களிலும் விரும்பினால் அனுப்பப்படுகின்றனர்.

வேத சிவாகம பாடசாலை:—ஆதீனக் கோவில்களிலும் பிறவற்றிலும் பூசனைபுரியும் ஆதிசைவச் சிறுவர்களுக்குச் சரியான கல்வி பயில்விக்க இப்பாடசாலை நிறுவப்பெற்றது. முன்னர்க் குறித்த எல்லா வசதிகளும் இவர்களுக்கும் அளிக்கப்பெறுகின்றன.

வேதம், சிவாகமம், திருமுறை, தமிழ், ஆங்கிலம், உயர்தர ஆரம்பப் பாடசாலைப் படிப்புகள் யாவும் இவர்களுக்குப் பாடத் திட்டமாக அமைக்கப்பெற்றுள்ளன. முற்கூறிய தேர்வுகள் இவர்களுக்கும் உண்டு. தேர்ந்தார்க்குப் பரிசு வகைகளும் அளிக்கப்பெறுகின்றன.

மேற்கண்ட இரண்டு பாடசாலைகளையும் ஆதீன மடாலயத்திற்கு வரும் பிரமுகர்கள் பலரும் பார்வையிட்டுத் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தந்து போகின்றனர்.

ஆரம்ப பாடசாலை:- கிராமத்திலுள்ள எல்லாச் சிறுவர்களும் கல்வி பயில அரசாங்க உதவிபெற்ற ஆரம்பப்பாடசாலை நடத்தப் பெற்று வருகிறது. இரு ஆசிரியர்கள் வேலைசெய்து வருகின்றனர். 5-வது வகுப்பு வரை இருக்கிறது. இதற்கென இவ்வூர் தருமபுரீசுவரர் ஆலயத்தின் வடபால் பள்ளிக்கூட அமைப்பிற்கேற்ற வசதிகளுடன் தனிக்கட்டிடம் அமைக்கப் பெற்றுள்ளது.

உபகாரச் சம்பளம்:- உயர்தரப்பள்ளி, கலாசாலை இவைகளிற் படிக்கும் ஏழை மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிக்கப் பெறுகின்றது. புத்தகங்களும் வாங்கி வழங்கப்பெறுகின்றன. இத்தகைய வசதிகள் தொழிற்கல்வி பயில்வோர்க்கும் வழங்கப் பெற்று வருகிறது. உயர்தரக் கல்விச்சாலைகளிலும், கல்லூரிகளிலும் முதன்மையாகத்தேர்ந்த மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கவும் உதவி செய்யப் பெறுகின்றது.

அண்மையிலுள்ள பள்ளி மாணவ மாணவிகள் ஆதீன மடாலயத்தையும், புத்தகசாலை, பதிப்பகம், தோட்டம் ஆகியவைகளையும் பார்க்க வருவார்கள், அவ்வப்போது அவர்களுக்கு ஊக்கம் அளிப்பதற்காகச் சிற்றுண்டிகள் அளிக்கப்பெறும்.

திருப்பதி கீழ்த்திசைப் பல்கலைக் கழகத்தில் நடந்த கீழ்த்திசை மொழி மகாநாட்டிற்கு நிதி அளித்துப் பெரும்பாலும் தமிழ்ப்பிரிவுக்குப் பயன்பெற உதவப்பெற்றது. தமிழிசை வளர்ச்சி இயக்கத்திற்கு ரூபா 10000 அளிக்கப் பெற்றுள்ளது. சென்னைத் தமிழ்ச்சங்கத்திற்கு பெருநிதி அளித்துச் சங்கத்தின் போஷகர்களாகவும் மகாசந்நிதானம் அவர்கள் அமர்ந்துள்ளார்கள். இச் சங்கச் சார்பில் நடத்தவிருக்கும் கல்லூரியின்

சைவசித்தாந்த வகுப்பிற்கு ஆகும் செலவை ஆதீனத்திலிருந்து கொடுப்பதாக வாக்களிக்கப் பெற்றிருக்கிறது.

**நூல்நிலையம்:-** அறிவுக் கருவூலங்கள் நூல் நிலையங்களே. முன்னோர்களாகிய புலவர் பெருமக்களைப் பின்னோர் அறிவில் எழுந்தருளச் செய்வது நூல்நிலையங்களே. சமய அரண்; சாத்திரக் கோட்டை; அறிவுச் செல்வம்; நாகரீக விளைபுலம் அனைத்தும் நூல்நிலையங்களே என்பதைத் திருவுளத்துக்கொண்டு ஆதீன மடாலயத்தில் ஒரு பெரிய நூல் நிலையம் அமைக்கப் பெற்றுள்ளது. அதில் சமயத் தொடர்புடைய நூல்களும், சாத்திரம் மொழித் தொடர்புடைய நூல்களும் உள்ளன. இலக்கண இலக்கியங்கள் இலங்குகின்றன. ஆங்கிலம், தமிழ், வடமொழி, தெலுங்கு முதலிய மொழிகளில் சுமார் 7000 புத்தகங்கள் இருக்கின்றன. மடாலயத்தின் முகப்பை நன்கு விளக்குவது இந் நூல் நிலையம். புத்தகப்பட்டி தயாராகி வருகிறது. மடத்திற்கு வரும் எல்லாப் பெருமக்களுள்ளத்தையும் இந் நிலையம் தன் வசமாக்குகிறது. அதன் அறிகுறியாக அவர்கள் "தென்னிந்தியாவில் உள்ள சிறந்த நூல்நிலயங்களில் இதுவும் ஒன்றெனவும், அமைப்புமுறை மிக அழகானதென்றும், சமயத்திற்கு இன்றியமையாத புத்தகங்கள் இருக்கின்றன" என்றும் புகழுரை வழங்கிச் செல்கின்றனர். இத்தகைய பணிகள் எல்லாம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் ஆட்சியேற்ற பின்னர் விரிவு செய்யப்பட்டனவே.

**பிறநூல்நிலையங்கள்:—** ஆதீனத்துக்குச் சொந்தமான ஏனைய தேவஸ்தானங்கள் பலவற்றிலும் நூல்நிலையங்கள் வைக்கப்பெற்றுள்ளன. மடாலய நூல்நிலையத்திற்கு அடுத்தபடியாகப் புள்ளிருக்குவேளூர் நூல்நிலையம் சிறப்பளிப்பது. அங்கு வேதம், ஆகமம், சாத்திரம் ஆகிய எல்லா வகைகளிலும் சிறந்த நூல்கள் உள்ளன. இன்னும் சேகரிக்கப் பெறுகின்றன.

சீகாழி, திருவையாறு, திருப்பனந்தாள், திருபுவனம், குத்தாலம், ஆச்சாபுரம், குறுக்கை, திருக்கடவூர், பேரளம், திருக்

தருமபுர ஆதீன மடாலயத்தில்



1. புத்தக நிலையம்



2. பதினாறொடுக்கம்



3. தந்தப்பல்லக்கில் பழங்கால ஓவியம்



4. சம்பந்தர் நிலையம்

கோவிலி (திருக்குவளை) இந்தக் கோவில்களிலும் திருமுறை முதலிய இன்றியமையாத நூல்கள் வாங்கிவைக்கப்பெற்றுள் ளன. எல்லா நூல்நிலையங்களிலும் புதுப்புத்தகங்கள் வாங்கிச் சேர்ப்பது மட்டுமன்றிப் பழைய அருமையான புத்தகங்களும், ஏடுகளும், கையெழுத்துப் பிரதிகளும் சேர்க்க முயற்சி எடுத்துக் கொள்ளப்பெறுகிறது.

தஞ்சை சரபோஜி சரஸ்வதி மகால் நூல்நிலையம் சீர்திருந்த உதவிநிதி யளித்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் போஷகர்களாக இருக்கவும் சம்மதித்துள்ளார்கள். திருத்த வேலைகள் பல நடைபெற்றுவருகின்றன.




## பொதுப்பணி

மாணவர்கள் பந்தய விளையாட்டுக்களுக்குப் பதக்கங்களும் (Medals), கேடயங்களும் (Shields) பரிசளிக்கப்படுகின்றன. கும்பகோணம் குஷ்டநிவாரண சங்கத்திற்குப் பொருளுதவி செய்யப்பெற்றது. தஞ்சை ஜில்லா விவசாய சங்கத்திற்கு உதவிநிதி யளிப்பதோடு போஷகர்களாகவும் இருக்க இசைவு தரப்பெற்றது. கும்பகோணம் விவசாயப் பொருட்காட்சிக்கு நிதியளிக்கப்பெற்றது. திருக்கடவூர், சீகாழி முதலிய தலங்களில் உற்சவகாலங்களில் விவசாயப் பொருட்காட்சிச்சாலை அமைக்க உதவி யளிக்கப்பெறுகிறது. மாயவரம், தரங்கம்பாடி கற்பாதை யிலிருந்து தருமபுரம்வரும் சாலை வளைவாக இருந்ததால், நேர்வழியொன்று புதிதாகச் செய்து வாய்க்காலுக்கு ஒருபாலமும் கட்டப்பெற்றது. தருமபுரம் நான்குவீதிகளிலும் மின்சாரவிளக்குகள் அமைக்கப்பெற்றன. வீதிகள் அவ்வப் போது செப்பனிடப் பெற்றுச் சுத்தஞ் செய்யப்பெறுகின்றன. முடிகொண்டானில் பொதுஜன வசதிக்காக ஒருகுளம் வெட்ட காரியஸ்தர்சகிதம் ஆட்கள் அனுப்பப்பெற்றார்கள். ஏழைகளுக்கு அவ்வப்போதும் அன்னவஸ்திர முதலியன அளிக்கப் பெறு கின்றன. திருவையாற்றில் நடக்கும் தியாகையர் உத்சவத்திற்கு

உதவிநிதி யளிக்கப்பெறுகிறது. அன்றியும், திருவையாறு பூசப் படித்துறையை அங்குள்ள மடைப்பள்ளியுடன் அந்தக் காலத்தில் விடப்படுகிறது. சாலை ஓரத்திலுள்ள தேவஸ்தானத் திருக் குளங்களை வெட்டிச் சுத்தஞ் செய்யப்பெற்று வருகிறது. யுத்தத்தினல் உணவுப்பொருள் விலை யேறியதற்காக ஏழைகளுக்கு குறைந்தவிலையில் உணவுப்பொருள் வழங்கநஷ்ட ஈட்டுதவியாக தஞ்சை கலெக்டர் அவர்களிடம் பெருந்தொகை கொடுக்கப்பட்டது. குவெட்டா பூகம்பம், வெள்ளக்கஷ்டம், பஞ்சம் போன்ற பெருந்துன்பங்களுக்கு அவ்வப்போதும் உதவி நிதி யளிக்கப்பெற்றுவருகிறது. பெரிய தேவஸ்தானங்களில் யாத்திரிகர் வசதிக்காக யாத்ராமார்க்கப் படங்கள் மாட்டப்பெற்றுள்ளன. ஏழைமக்களுக்கு அன்னம் அளிக்குங்காலத்தில் ஆதித்திராவிடர்கள் வந்து கலந்துகொள்ளுவதில்லை. அவர்களுக்கு ஒருநாள் விருந்தொன்று நடத்தப்பெற்றது. அன்று எண்ணெய் முழுக்குடன் அன்னம் அளிக்கப்பெற்றது. கோடைக்காலங்களில் 'அளவில்சனம் செலவொழிய வழிக்கரையில்' தண்ணீர்ப் பந்தல் வைக்கப்பெறுவது வழக்கம். பொதுஜனங்கள் மிக நடமாடும் இடங்களில் கிணறு, நீருறிஞ்சி முதலியவைகள் வைக்கப் பெற்றுள்ளன. வெள்ளத்தாலும், வெந்தணலாலும் வீடிழந்து தவிக்கும் ஏழைகளுக்கு வீடுகட்ட உபகரணங்கள் உதவப்பெறுகின்றன. கருவுயிர்ப்பார்க்குக் கஸ்தூரி வாங்கி வைத்து வழங்கப்பெறுகிறது. மன்னம் பந்தலில் அண்மையில் நடந்த சாரணர் பயிற்சிக்கு எல்லாவசதிகளும் இயற்றித் தரப்பெற்றன. பட்டவிளாகம், மருவத்தூர் போன்ற கிராமங்களில் ஆதித் திராவிடச்சேரிகளில் குடிதண்ணீர் வசதிக்குக் கிணறுகட்டி மேடையமைத்துக் கொடுக்கப் பெற்றுள்ளன.

போர்முயற்சிக்கு உதவி:- இந்தியப் பாதுகாப்புக் கடனில் ரூபாய் ஐம்பதினயிரத்து ஒருநூறு வட்டியில்லாக்கடனுக வழங்கப்பெற்று ரூபாய் ஐம்பதினயிரத்துக்குமேல் சென்னை கவர்னர் உதவி நிதிக்கு அளிக்கப்பெற்றது. அவ்வப்போதும் யுத்தநிதிக்காக நடத்தப்பெறும் லாட்டரிகள், நாடகங்கள், கச்சேரிகள் போன்றவைகளுக்கும் பெருநிதி அளிக்கப்பெற்று வருகின்றன. செஞ்

## Madras Governor's War Fund.

---

**This Certificate** is issued

to HIS HOLINESS SRI LA SRI SHANMUGA DESIKA GNANASAMBANDA PANDARASANNADHI OF DHARMAPURAM MUTT in grateful acknowledgment of a total subscription of more than **Five Thousand Rupees,** that is, Rupees 20,201/- during the first year of the **Madras Governor's War Fund.**

Madras,
November 3rd 1941.

Arthur Hope
President and
Governor of Madras.

யுத்தநிதிக்கு உதவி
சென்னை
மேன்மை தங்கிய கவர்னரவர்களின் பாராட்டு

சிறுவைச் சங்கத்தினருக்கு உதவித்தொகை அளிக்கப்பெற்றது. அருப்புகள் வசதிக்காகவும் நிதியளிக்கப்பெற்றது. மடாலய, தேவஸ்தான சிப்பந்திகள் முதல் உதவிப்பயிற்சி பெறச் செய்திருக்கிறது. எல்லா ஸ்தாபனங்களிலும் பொதுஜனங்கள் பதுங்குமிடம், சாமான்கள் பதுக்குமிடம் முதலியன கட்டி வைக்கப்பெற்றுள்ளன. மணல் மூட்டைகள், மண்வாளிகள், நெருப்பணைக்க Stirrup pump முதலியவைகள் தயாராகவைக்கப் பெற்றுள்ளன.

பிரார்த்தனை:— போரில் நேசநாட்டினர் வெல்லவேண்டும் என்று ஆதின மடாலயத்திலும், தேவஸ்தானங்களிலும் அவ்வப் போதும் சிறப்பான பூசைகள், அர்ச்சனைகள் முதலியவை நடத்தப்பெறும். வேளூரில் 100 நாட்களுக்குத் துர்க்கா திரிசதி, சகஸ்ரநாமார்ச்சனைகள் நடத்தப்பெற்றன. அவ்வக்காலங்களில் ஏழைமக்களுக்கு அன்னம் அளிக்கப்பெறும்.

வெற்றி விளக்கம்:— நமது நேச நாட்டினர் வடஆப்பிரிக்கப் போரில் வெற்றிபெற்றதைக் குறித்து எல்லா ஸ்தாபனங்களிலும் வெற்றிநாள் கொண்டாடப்பெற்றது. அன்று எல்லா இடங் களிலும் சிறப்பாக அபிஷேக ஆராதனைகள் நடத்தப் பெற்றன. அன்றும் ஏழைகளுக்கு அன்னம் அளிக்கப்பெற்றது.

ஆதினமடத்தில், மாயவரம் நகரத்தில் இராஜன்தோட்டத் தில் நடந்த கொண்டாட்டங்களில் சுமார் 3000 க்கு மேற்பட்ட மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன. ஏராளமான ஏழைகளுக்கு அன்னம் அளிக்கப்பெற்றது.

சிறப்பு நிகழ்ச்சிகள்.

1934-ல் திருப்பனந்தாள் அருணசடேசர் ஆலயம் அஷ்ட பந்தன கும்பாபிஷேகம் நடத்துவிக்கப்பெற்றது.

தருமபுரம் மேலவீதி ஸ்ரீ சித்திவிநாயகராலயம் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் நடத்துவிக்கப்பெற்றது.

1937ல் திருநள்ளாற்றிற்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் எழுந்தருளியிருந்த காலத்து நெடுங்காடு நகர சபையார் வேண்டுகோட் கிணங்க அவ்வூருக்கு விஜயம் செய்து நகர சபையார் வரவேற்பளிக்கப் பெற்றுக்கொண்டு பட்டணப் பிரவேசமாக எழுந்தருளினர்கள்.

திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி கோயில் திருப்பணியை உ. ரா. மெ. சுப. சேவு. சேவுகஞ் செட்டியார் அவர்கள் தொடங்கினர்கள். அவர்கள் குமாரர் திரு. மெய்யப்பச் செட்டியார் அவர்களால் பூர்த்தி செய்யப்பெற்று 2—5—1937ல் மகாகும்பாபிஷேகம் சிறப்புற நடத்திவைக்கப் பெற்றது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு அடியார்கள் புடைசூழ எழுந்தருளி, எல்லா ஏற்பாடுகளும் சரிவர முடியும் வண்ணம் செய்வித்தார்கள். அங்கு, செட்டியார் அவர்களால் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு விசேஷ வழிபாடுகள் செய்விக்கப் பெற்றன. மாகேசுவரபூசைகள் நடத்து விக்கப்பெற்றன. பட்டணப்பிரவேசம் மிகச் சிறப்பாக நடத்தி வைக்கப் பெற்றது.

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி கோயில் கீழராஜகோபுரம் திருப்பணி செய்விக்கப்பெற்று 1940ளு மார்ச்சு மாதத்தில் மகாகும்பாபிஷேகமும் நடத்துவிக்கப்பெற்றது.

28—8—40-ல் திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேசுவர சுவாமி கோயில் கர்ப்பக்கிருகம், இரண்டாம் கோபுரம், முதலியன திருப்பணி செய்விக்கப்பெற்று அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகமும் நடத்துவிக்கப்பெற்றது.

1942-ல் வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி கோயில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடத்தப்பெற்றது.

## VISIT TO A MUTT

Yesterday afternoon, H. E. the Governor of French India, visited the Mutt of His Holiness Shanmuka Desika Gnanasambanda Pandarasannadhi Swamigal at Dharmapuram in British India near Karikkal.

Welcoming, His Holiness said that the Mutt's connections with French India was from time immemorial and its interest in the prosperity of the French possessions was unquestionable. The Thirunalar Devasthanam was one of the Adhinam Devasthanams, which though originally under the exclusive control and management of the Adhinam, was for some time past administered by a Committee presided over by the Mutt's nominee, the members being nominated by the Goyernor. A request was made to place the temple under the complete control of the Mutt. The Governor was presented with a shawl.

His Excellency, while thanking His Holiness for the reception stated that he would duly consider the suggestion. Light refreshments were served.

The Hindu, 6—2—1939.

தருமபுர ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதிகள் ஆதீன நிர்வாகத்திற்குட்பட்ட திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வரர் கோயில் பழுது பார்த்து புதுப்பிக்கப்பட்டு வருகிறது.

சுதேசமித்திரன், 15—8—1939.

## தியாகராஜசுவாமி மகாரதம் நிலைசேர்ந்தது

7-ந்தேதி காலை வடம்பிடிக்கப்பட்டு மேலவீதியில் நின்ற மகாரதம் வியாழனன்று பிற்பகல் அதைவிட்டுப் புறப்பட்டு வடக்குவீதி மேல்கோடியில் நின்று ஒருதினம் தாமதமேற்பட்டது. நேற்று பிற்பகல் வடம்பிடிக்கப்பட்டு இன்று காலை 11மணிக்கு நிலைசேர்ந்தது. தேர்நிலைசேரவேண்டிய விஷயத்தில் உள்ளூர் வர்த்தகர்கள் இரண்டு தினங்களாகக் கடைகளைக்கட்டித் தீவிர

மாகக் கலந்துகொண்டார்கள். நிலைசேர்ந்தவுடனே ஸர் ஆர். எஸ். சர்மாவுக்கும், எக்ஸிகியூடிவ் ஆபீசர் ஸ்ரீமான் நாராயணன் நம்பியாருக்கும் ஏராளமான மாலைகள் பொதுஜனங்களால் போடப்பட்டன. ஸர் சர்மா அடியில் வருமாறு பேசினர். 'இடைவிடாது மழைபெய்தும், எதிர்பாராத பல விபத்துக்கள் ஏற்படுவதுபோல் காணப்பட்டும், எவ்விதச் சேதமும் உயிர்ச்சேதமும் இல்லாமல் தேர் நிலை சேர்ந்ததற்குச் சந்தோஷமடைவதுடன் சுமார் 7 தினங்களாகத் தங்கள் வேலைகளைக்கூடக் கவனியாது ஆட்களை வைத்துக்கொண்டு தேரை நிலைக்குக் கொண்டுவரத் தீவிரமுயற்சி செய்துவந்த தருமபுரவாதீனகர்த்தரையும், அவர்கள் பிரதிநிதிகளையும், இதர ஜில்லா மிராசுதார்களையும் நாம் பாராட்ட வேண்டும்'.

சுதேசமித்திரன், 26—5—1939.

### Founder's Anniversary at Dharmapuram Mutt

His Holiness the Pandarasannathi of the Dharmapuram Mutt to-day celebrated the Founder's Anniversary in the presence of a large gathering of disciples and admirers. The Hon. Mr. S. Ramanathan, Minister for Public Information, who arrived here yesterday evening had audience with His Holiness.

To-night the Pandarasannathi will be taken in procession in a gorgeous palanquin through the town.

The Mail, 10—6—1939.

### IMPETUS TO TAMIL LITERATURE

#### Dr. Rajan Opens Free Classes.

Dr. Rajan opened yesterday the Thayumanavar Free Tamil Class intended for the study of Tamil and Saivite philosophy in the hundred pillared mantapam, Rock Temple (Trichy).

Mr. M. S. Thayyappa Pillai, Secretary for the Trichy District Board, who was in charge of the study classes, presented an address to the Minister explaining the nature of the work to be undertaken and asked the Minister's permission to conduct the classes in the mantapam of the temple and allow the temple to incur some incidental charges also in that connection.

Dr. Rajan congratulated the Dharmapuram Athinam for their great interest and enthusiasm in the spread of ancient Tamil lore and expressed his gratification that they should have come forward to do the primary duty for which such charitable institutions were founded in the past. At the present time when a set of persons denied the existence of God and went about preaching their doctrines among the people claiming to be Tamilians, the Athinam was rendering a great service by arranging periodical lectures by Tamil scholars so that the public might benefit by the study of great Tamil works and Tamil literature. The whole of the Tamil country was strewn with temples and there was no village or town without a temple. Tamil saints and savants had sung the glory of the Lord in beautiful language and had enriched Tamil literature. If devotion and knowledge could be increased as a result of the study in those classes, and students were turned out to be able to sing the praise of the Lord so as to inspire devotion, the classes would give a fresh impetus to tamil language and literature. He hoped that such useful classes would spring up everywhere in Tamil Nad and render useful service in the spread of knowledge.

Pandit M. Natesa Mudaliar, spoke on "Pathu Pattu" after which Dewan Bahadur, T. M. Narayanasami Pillai proposed a vote of thanks.

The Hindu Madras, 23—6—1939.

தருமபுர ஆதீனம் பண்டார சன்னதிகள் குருபூஜை நடத்தியபொழுது புதுச்சேரி கவர்னர், அவர் குடும்பத்தினர்,

மற்றும் சிப்பந்திகள் அதற்குச் சென்றிருந்தனர். அச்சமயம் அவர்களுக்கு ஒரு வரவேற்பு நடத்தப்பட்டது. பிரஞ்சு பிரதேசத்தில் இந்த ஆதீனமடத்திற்குச் சொந்தமான நிலம் இருக்கின்றது.

சுதேசமித்திரன் வாரப் பதிப்பு, 25—6—1939.

**RENOVATION:-** One of the gopurams, dating back to Chola times, of Sri Kampahareswaraswami of Thirubuvanam has recently been renovated by His Holiness Sri-la-Sri Shanmuka Desika Gnana Sambhanda Pandara Sannadhigal of Dharmapuram Adhinam Mutt.

The Mail, 19—10—39.

தருமபுர ஆதீன மகாசன்னிதானம் பல ஹரிஜனங்களுக்கு ஸ்நானம் செய்ய எண்ணெய் கொடுத்து சிறந்த முறையில் அன்னதானம் செய்வித்தார்கள் எனத்தெரிகிறது.

யதார்த்தவசனி, 22-10-39.

## MASS FEEDING AT DHARMAPURAM

Some of the thousands of Harijans who had a free meal at Dharmapuram, South India. This was made possible by the benevolence of the Head of Dharmapuram Adeenam Mutt, one of the biggest religious institutions of the Hindus in South India.

The Illustrated Weekly, 5—11—1939.

இம் மாதம் குடி நூலின் முகப்பில் வெளியிட்டிருக்கும் படம் தஞ்சை ஜில்லா தருமபுரம் ஆதீனத்தில் 14—10—39ல் ஹரிஜன சகோதர சகோதரிகளுக்கு விருந்தளிக்கப்பட்டபோது எடுக்கப்பட்டதாகும். விருந்தில் கலந்துகொண்ட ஹரிஜனங்கள் எல்லோருக்கும் எண்ணெய் ஸ்நானம் செய்விக்கப்பட்டது.

தருமபுரம் மடாதிபதிகளவர்கள் எப்போதும் சதருநித்துவ தல்லாமல் தமது ஏவலின் கீழுள்ள அனைவரையும் சதரே

உடுத்தச்செய்கிருர். இங்கு இரண்டாயிரம் ரூபாய்க்கு கதர்க் கூப்பன் வாங்கினுர்கள்.

குடி அரசு, 15—12—1939.

## கதர் ஆடை தானம்

## தருமபுர ஆதீன கர்த்தர் தயாளம்

மாயவரம் அருகில் உள்ள தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்த ஆதீன கர்த்தர்களான ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞான சம்பந்த பண்டார சந்நிதி இவ்வருஷம் ரூ. 2000-க்கு மேற்பட்ட கதர் ஆடைகளை வாங்கியும் இதைத்தவிர கதர் கூபன்களை வாங்கியும் ஏராளமானவர்களுக்கும், மடத்தின் உத்தியோகஸ்தர் களுக்கும் சென்ற தீபாவளியில் வழங்கினுர்கள். இதுபோன்ற ஆதரவு தேசத்திற்கு விசேஷ பலம்அளிக்கும் என்று இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடுவது அவசியமாகும்.

சுதேசமித்திரன், 21—12—1939.

## தஞ்சை ஜில்லா வெள்ளக் கஷ்ட நிவாரண நிதி

## தருமபுர ஆதீன கர்த்தர் நன்கொடை

சமீபத்தில் பெய்த அபாரமான மழையின் காரணமாக தஞ்சை ஜில்லாவில் முக்கியமாக பரம ஏழைகளுக்குத்தான் அதிகக் கஷ்டம் ஏற்பட்டதென்று நேயர்கள் அறிவார்கள். தஞ்சை ஜில்லா கலெக்டர் ஸ்ரீமான் சி. கே. விஜயராகவன் ஐ. சி. எஸ்., தருமபுர ஆதீன கர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதி அவர்களைத் தரிசித்து ஏழை களின் கஷ்ட நிவாரண நிதிக்கு நன்கொடை அளிக்கவேண்டிக் கொண்டார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் தாராளமாக நன்கொடை அளித்தார்கள்.

சுதேசமித்திரன், 29—12—1939.

தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான திருபுவன க்ஷேத்திரத்திற்கு ஷை ஆதீனகர்த்தாவர்கள் விஜயஞ்செய்து கோயிலின் மேற்கேயும் ரோட்டின் தென்புறத்திலுள்ள திருக்குளத்தை திருப்பணி செய்ய கட்டளை பிறப்பித்துள்ளார்கள். இது பொதுஜனங்களுக்கும் பாட்டைசாரிகளுக்கும் மிக்க பயனளிப்பதாகும்.

*யதார்த்தவசனி,* 5—1—1940.

CENTRAL FLOOD RELIEF COMMITTEE, TANJORE, 1939.

* * *

8. Our special thanks are due to the following bodies and individuals for substantial contributions:—

"Madras Provincial Co-operative Bank, Ltd., Madras; Tanjore District Distress Relief Committee; The Red Cross Society and the Pandarasannadhi of Dharmapuram Mutt".

* * *

12—3—1940.

**கதர் ஆடை தானம்**

**தருமபுர ஆதீன கர்த்தர் தயாளம்**

மாயவரம் அருகில் உள்ள தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த ஆதீன கர்த்தர்களான ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதி இவ்வருஷம் ரூ. 2000-க்கு மேற்பட்ட கதர் ஆடைகளை வாங்கியும் இதைத்தவிர கதர் கூபன்களை வாங்கியும் ஏராளமானவர்களுக்கும் மடத்தின் உத்தியோகஸ்தர்களுக்கும் சென்ற தீபாவளியில் வழங்கினார்கள். இதுபோன்ற ஆதரவு தேசத்திற்கு விசேஷ பலம் அளிக்கும் என்று இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடுவது அவசியமாகும்.

*இந்து நேசன்,* 30—3—1940.

வைத்தீஸ்வரன் கோயில் பங்குனி உத்திரம்

ஸ்ரீ வாலாம்பிகா சமேத முத்துக்குமார சுவாமியின் பங்குனி உத்திர உற்சவமும், திருத்தேர் முடிந்து தீர்த்தவாரியும்

24-3-1940 சிறப்புற நடந்து உற்சவம் முடிவுற்றது. இவ்வாண்டு தருமபுரம் மகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்தபண்டாரசந்நிதியவர்கள் புள்ளிருக்கு வேளூருக்கு விஜயம் செய்து உற்சவாதிகளைச் சிறப்புடன் நடப்பிக்கச் செய்துவருவதும் சீகாழி சட்டநாதஸ்வாமி தேவஸ்தானத்தைச் சேர்ந்த ப்ரும்ம புரீஸ்வரரது தேவாலயத்தை ஜீர்ணோத்தாரணஞ் செய்வித்து அழகுபெறச்செய்து வருவதும் குறிப்பிடத்தக்கவை.

சுதேசமித்திரன், 30—3—1940.

### யாத்ரிகர்களுக்கு 20000 ரூபாயில் மண்டபம்

திருப்புள்ளிருக்கு வேளூர் திவ்விய க்ஷேத்திரத்தில் சென்ற ஜனவரி 18-ம்தேதி முதலாக நடந்துவந்த மாபெருந் திவ்விய உற்சவம் சென்றவாரம் 26-ந்தேதியோடு நிர்விக்னமாய் பூர்த்தியாகி சிறப்பாக முடிவுற்றது. சென்னை மகாணத்தின் பலபாகங்களினின்றும் ஏராளமான யாத்திரீகர்கள் இவ்வருடம் விசேஷமாகவந்து ஸ்ரீவாலாம்பிகா சமேத ஸ்ரீவைத்திநாதசுவாமி ஸ்ரீசெல்வ முத்துக்குமரசுவாமி முதலிய மூர்த்திகளை திவ்விய அலங்கார சேவைகளில் சேவித்து கிருதார்த்தர்களாயினர். இந்த உற்சவத்தை முன்னிட்டு யாத்திரீகர்கள் வசதியாகத் தங்கும் பொருட்டு ரூ. 20,000 (இருபதினாயிரம் ரூபாய் செலவில்) மிக்க அழகியதோர் மண்டபத்தை தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசந்நிதி அவர்கள் கட்டுவிக்கச் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் உற்சவம் முடிவுறும்வரை இத்தலத்தில் எழுந்தருளி இருந்துவிட்டுச் சென்ற 24-ம்தேதி தருமபுரம் ஆஸ்தானத்திற்கு எழுந்தருளினார்கள். இவ்வருஷம் எவ்வருஷத்தையும்விட உற்சவம் சிறப்பாக நடத்திவைத்தார்கள்.

சுதேசமித்திரன், 30—3—1940.

### A CROWN FOR A GODDESS

Costing thousands of rupees this crown ("Kreetam") of diamonds and other precious stones was specially made for the goddess Shri Valli Ammai at Vaideeswarankoil (South India) by

His Holiness the Pandara Sannadhi Swamigal of the Dharmapuram Adhinam Mutt, Tanjore District, during the grand annual Brahma Uthsawam (festival) this year.

The Illustrated Weekly, 7—4—1940.

### திருமுலைப்பால் உற்சவம்

மறுமுலைப்பால் நீக்கும் திருமுலைப்பாலின் மகிமையை விளக்கும் இக்காழிமா க்ஷேத்திரத்தில் உற்சவம் 13-4-40 பகல் ஒரு மணிக்கு வெகு விமரிசையாய் நடந்தேறியது. வெள்ளிப்பல்லக்கில் திருஞானசம்பந்தர் திருக்குளக் கீழ்க்கரையில் எழுந்தருளியதும், அம்பிகை பொற்கிண்ணத்தில் ஞானப்பாலைக் குழைத்தூட்டிய ஐதிகச் சிறப்புப்படி முறையாக நடத்தப்பட்டபடியால், பக்தர்கள் மனம் பரவசமாகியது. தருமபுர ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னிதிகள் தாமே விஜயஞ்செய்து உற்சவத்தை தகைபெற நடத்திவைத்தனர். இரவு வழக்கம் போல் பொற்றாளம் பெற்ற சம்பந்தர் திருத்தாளமுடையார் கோயிலினின்றும் புஷ்பவிமானத்தில் எழுந்தருளி பஞ்சமூர்த்திகளுடன் வீதிவலம் வந்தார்.

சுதேசமித்திரன், 15-4-40.

### FOUNDER'S DAY OF DHARMAPURAM MUTT.

Founder's Day of Sri Dharmapuram Mutt was celebrated yesterday with great solemnity by His Holiness Sri-la-Sri Shanmuka Desika Gnana Sambandha Pandara Sannidhi, the present head of the Mutt and 24th in the holly line of succession from the founder.

There was poor feeding for three days from May 26 and on May 28, silver coins were distributed to the poor. The Pandara Sannidhi was taken in a gold palanquin in brilliant torch-light procession headed by two caprisoned elephants. Leading Nadhaswara Vidwans entertained the huge concourse of devotees who had gathered to have a dharsan of His Holiness.

A party of French Officers of Karikal, including the Administrator, the Government Doctor, the Police Commissioner and two Assistant-Judges and the Advocate-General came here last night and greeted the Pandara Sannidhi. The Government Doctor's wife was one of the party.

The Mail, 30-5-40.

### திருப்பதி மகாநாட்டுக்கு நன்கொடைகள்

### பண்டார சன்னதிகளின் பொருளுதவி

அகில இந்திய கீழ்த்திசைக்கலை மகாநாட்டின் காரியதரிசி ஸ்ரீ மான் கே. வி. ரங்கஸ்வாமி அய்யங்கார் அறிவிப்பதாவது:—

மேற்படி மகாநாட்டிற்காகத் தருமபுரம் பண்டார சன்னதி ரூ. 1000- நன்கொடை அளித்திருக்கின்றார்.

இந்துநேசன், 8—6—40.

### பத்தாவது இந்தியக்கலை மகாநாடு திருப்பதி, தமிழ்ச்சங்கம்.

இச் சங்கத்தை சிறப்பாக நடத்துவதற்குத் தருமபுர ஆதினத்துப் பண்டாரசந்நிதியவர்கள் ஆயிரம் ரூபாயும் திருவாவடுதுறையாதினத்துப் பண்டாரசந்நிதியவர்கள் மூந்நூறு ரூபாயும் நன்கொடையளித்து உதவி செய்தனர்.

தமிழ்ப் பொழில்-விக்ரமஞு வைகாசிமீ

### திருவெண்காடு கும்பாபிஷேகத்தில்

### தருமபுர ஆதீன மகா சந்நிதானம் விஜயம்

திருவெண்காடு என்னும் சிவக்ஷேத்திரத்தில் சமீபத்தில் நடந்த மகா கும்பாபிஷேகத்தை தரிசிக்க, திருக்கயிலாய பரம்பரை தருமபுரவாதின கர்த்தராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் முதல்தினம் மாலையிலேயே தமது பரிவாரங்களுடன் எழுந்தருளினர்கள். இவர்களது வருகையை முன்னதாக வறிந்த திருப்பணியாளர்களான தேவ

கோட்டை ஸ்ரீமான் மு. ராம. சுப. வெங்கடாசலஞ் செட்டியாரவர்களும், திருவையாறு தேவஸ்தானத் திருப்பணிசெய்து கும்பாபிஷேகத்தையும் நடத்திய தேவகோட்டை ஸ்ரீமான் மெய்யப்ப செட்டியார் அவர்களும், ஸ்தலத்துக்குச் சிலமைல் தூரத்துக்கப்பாலேயே சென்று வரவேற்று உபசரித்து சந்நிதானத்துக்கு என்று ஏற்படுத்தியிருந்த ஜாகைக்கு அழைத்து வந்தார்கள்.

மகாசந்நிதானம் ஆதீன சம்பிரதாயப்படி சிவிகையிலாரோகணித்து அடியார்களும் அன்பர்களும் புடைசூழ பலவகை விருதுகளும் முன்செல்ல, திருவெண்காடு பிரதர்ஸ் நாதஸ்வரமும், நீடாமங்கலம் தவில்வித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளையின் தவில் வாத்தியமும் கோஷிக்கப் பட்டினப்பிரவேசமான வைபவம் நவிலும் வசமுளதன்று. சுவாமிகள் தங்கள் ஜாகையில் எழுந்தருளி கொலுவில் அமர்ந்தருள, விதிப்படியும், சம்பிரதாயப்படியும் பூஜை நடந்தபின் அனைவருக்கும் அருட்டிருநீறளித்து ஆசிர்வதித்தார்கள். ஆலயத்துக்குச்சென்று யாகசாலையில் ஆகுதியானவுடன் பஞ்ச மூர்த்திகளுக்கும் பரிவார தேவதைகளுக்கும் பட்டுப்பீதாம்பரங்கள் சாத்தி அர்ச்சனை செய்வித்து தரிசித் தின்புற்றூர்கள். மற்றையநாட்காலையிலும் கும்பாபிடேக தரிசனம் செய்துகொண்டு திருமடத்துக்கு எழுந்தருளினர்கள். செட்டியார்கள் மூவருக்கும் வேறு பல அன்பர்களுக்கும் தகுந்த மரியாதைசெய்து பீதாம்பரங்களும் சாதராக்களும் வழங்கியது குறிப்பிடத்தக்கது. ஸ்வாமிகள் பலகாலம் சிவப்பணி செய்துகொண்டு ஞானசாரிய பீடத்தமர்ந்து அருளவேணுமாய்ப் பலராலும் இறைவன் இணையடிகளிற் பிரார்த்திக்கப்பெற்றது.

நவ இந்தியா, 30—6—40.

பதிபசுபாசத் தொகையும் திருவருட்பயன் உதாரணக் கலித்துறையும்:— இவ்விருநூல்களும் அடங்கிய புத்தகமொன்று வரப்பெற்றோம். திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்

பந்த பரமாசாரிய சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி அவ் வாதீனத்து இலவச வெளியீடுகளில் இதுவும் ஒன்ருக மிளிர் கின்றது. பதிபசுபாசத் தொகையைப் பழைய உரையுடன் வெளியிட்டிருப்பது சைவ உலகிற்குப் பெரிதும் உபகாரமுடைய தாகும். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் பீடத்திலெழுந்தருளிய காலந் தொடங்கி நாளிதுவரை சிவக்ஷேத்திர குருக்ஷேத்திர பரிபா லனங்களும், குருபூசை சிவபூசையாகிய செயல்களும், சாத்திர தோத்திரநூல் வெளியீடுகளும் செய்து வருவது தமிழர்களாலும் சிறப்பாகச் சைவர்களாலும் போற்றற் குரியதாகும். இலவச வெளியீட்டுப் புத்தகங்களை அவ் ஆதீனத்துக்கெழுதிப் பெறலாம்.

சிவநேசன் 1—7—1940.

## தருமபுர ஆதீன கர்த்தர் ஏற்பாடு.

நம் தேசத்தின் க்ஷேமத்திற்கும், இப்பொழுது நடந்து வரும் மகாயுத்தத்தில் நம்முடைய சக்ரவர்த்தி ஆரும் ஜார்ஜ் மன்னர் பிரானுக்கு வெற்றியும், பெரும் வாழ்வும் அடைய வேண்டிப் பிரார்த்தித்து மாட்சிமை தங்கிய சக்ரவர்த்தியின் நக்ஷத்திர தினமாகிய 15-ந் தேதி சக்ரவர்த்தியின் பெயரால் காலசந்தி, உச்சிகாலம், சாயரக்ஷை மூன்று காலங்களிலும் பிரதி ஆலயத்திலும் சுவாமிகளுக்கு நெய்விளக்கிட்டு விசேஷ அபிஷேக நைவேத்திய அலங்காரம் செய்து சகஸ்ரநாம அர்ச் சனையும் செய்ய தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதி அவர்கள் தங்கள் ஆதீனத்திற் குட்பட்ட ஆலயங்களுக்கு உத்திரவிட்டு இருக்கிருர்கள். ஆச்சாள்புரம், சீர்காழி, வேளூர் தேவஸ்தானம் வைதீச்வரன் கோயில், திருச்சி மலைக்கோட்டை, திருவாதி, திருப்பனந்தாள், திருபுவனம், குத்தாலம், பேரளம், திருக்குவளை, மாயவரம் குமரக் கட்டளை, திருக்கடையூர், விளநகர் முதலிய அநேக தேவஸ் தானங்களுக்கும் உத்திரவிடப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானம் தமது மடாலயத்தில் தின சரி மேற்கண்டபடி திருக்காலங்களிலும் விசேஷமான பூஜை

களைத் தாமே நேரில் செய்தும் பிரார்த்தித்தும் வருகிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

சுதேசமித்திரன், 13—7—1940.

His Holiness Sri-la-Sri Shanmuka Desika Gnana Sambandha Pandarasannadhi of Dharmapuram Adhinam mutt, Mayavaram, has made elaborate arrangements to celebrate the H. M. King's "Star Day" i,e., known as "Janmanakshatra" on July 15, 1940 in the temples under the able management of His Holiness. This special celebration is for the purpose of victory to H. M. King in this great war and welfare of his reign and country. On the 15th of July, in the morning, special Pujas and offerings has been ordered and arranged in the following temples at:—Achalpuram, Shiyali, Vaithisvarankoil, Trichy Fort temple, Tiruvadi, Tiruppanandal, Tirubhuvanam, Kuttalam, Peralam, Tirukkuvalai, Mayavaram Kumara-Kattalai, Tirukkadaiyur, Vilanagar, and many other temples. His Holiness has donated a sum of Rs. 60,000 to the War Funds.

The Indian Express, 14—7—1940.

## தருமபுரம் மடத்துக்கு மாணவர்கள் விஜயம்.

மாயவரம் நாஷனல் செகண்டரி பாடசாலை மாணவர் சங்கத்தினர் சுமார் 200 பேர்களும் அப் பாடசாலை ஆசிரியர்களும் தருமபுரம் மடத்துக்கு இன்று மாலை விஜயம் செய்து மடத்தின் பலபாகங்களையும், பூஜைமடம், ஆதீனம் சிங்காரத் தோட்டம் முதலியவைகளையும் பார்வையிட்டனர். அவ்வமயம் ஸ்ரீ-லஸ்ரீ பண்டாரசந்நிதி அவர்கள் சிறார்களுக்கு தரிசனம் தந்து ஒவ்வொருவரிடமும் இன்னுரையாடி பிஸ்கோத், பழவகைகள், மிட்டாய்கள் முதலிய சிற்றுண்டிகளை, தாமே நேரில் வழங்கி அன்பாக உபசரித்தனர். இதனால் வந்திருந்த அனைவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் அன்பையும் தயாளகுணத்தையும் வியந்து மெச்சிப் புகழ்ந்து சென்றார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மடத்தின் பெரும் பாகத்தையும் நன்கு திருத்தியும் பார்ப்போர் பரவசமடையும்படியும் பக்தி யூட்டத்தக்கதுமான திருவிளையாடல், பெரியபுராணம் முதலியவற்றிலிருந்து சமய

சம்பந்தமான சித்திரங்களை அதற்கென அமைத்திருக்கும் ஆகம மண்டபத்தில் வரையச்செய்தும் மடம் கட்டிடம், பூஜைமடம் முதலியன பார்க்கவரும் வெளியூரார்களை அன்பாக அழைத்துவந்து காட்டி அனுப்பவும் ஏற்பாடு செய்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

நவ இந்தியா, 12—8—1940.

PANDARA SANNADHI'S SERVICES PRAISED

Speakers at a public meeting held here (Tiruvarur) yesterday, under the presidency of Mr. T. S. Thiagaraja Gnaniar, paid tributes to the services of the Pandarasannathi of Dharmapuarm Mutt in connexion with the car dragging festival of Sri Thiagaraja temple here last year, and welcomed the compromise decree passed by the High Court recently resulting in the restoration of the management of the Rajan Kattalai (Endowment) of the Devasthanam and supervision of the services of the temple to the trustee, the Pandarasannadhi.

* * *

The Mail, 13—8—1940

தடாகத்திருப்பணி

திருக்கயிலாய பரம்பரை தருமபுரவாதீன கர்த்தரவர்களாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதியவர்கள் தங்கள் திருமடத்து முன்னுள்ள பெருந் தடாகத்தை வெட்டிச் சுத்தம் செய்து, அடியார்கள் புறவழுக்கைப் போக்கிக் கொண்டும், உட்சென்று குருமூர்த்தி திருக்கண்ணோக்கால் அகவழுக்கைப் போக்கிக்கொண்டும், ஞானோபதேசம் பெற ஏதுவாக இருத்தற்பொருட்டு செம்மை செய்துவருவதாக அறிகிறோம். சமீபத்தில், ஆதின ஆதிகுருமூர்த்தியின் குருபூசை மகோற்சவம் வருவதால் இப்போதிப் பணிசெய்வது சாலச் சிறப்புடைத்தாகும். இதற்கு முன்னும் தங்கள் பரிபாலனத்துக்குட்பட்ட வைத்தீச்வரன் கோயில் முதலான பல க்ஷேத்திரங்களில் பல பெரிய தடாகங்களை வெட்டியும், புதுக்கியுமிருப்பது குறிப்பிடத்தக்கது. மகா சந்நிதானம் இவ்வாறே பசு

புண்ணியம், பதி புண்ணியம் இரண்டையும் செய்துகொண்டு பல்லாண்டரசு வீற்றருள நாம் அருட்பெருங்குமரனை வணங்குகின்றோம்.

நவஇந்தியா, 28—8—1940.

## திருபுவனத்தில் மகா கும்பாபிஷேகம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான திருபுவன மகாக்ஷேத்திரத்தில் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி அம்மையார் சமேத ஸ்ரீகம்பகரேஸ்வர சுவாமி கர்பக்கிரஹ விமானம், கோபுரம், உட்பிரகாரம் முதலியவை ஜீர்ணோத்தாரண திருப்பணி செய்யப்பட்டு 23-ம்வ உதயாதி 6¼ மணிக்குமேல் 7¼ மணிக்குள் சிம்ம லக்னத்தில் மகாகும்பாபிஷேகம் மிகச் சிறப்பாகச் செய்விக்கப்பட்டது. ஏராளமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தனர். சென்ற இரண்டு ஆண்டுகளாக ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசந்நிதி அவர்கள் ஆக்ஞைப்படி கோபுரம் மிகவும் அழகாக வர்ணம் தீட்டப்பட்டு வந்தது. இம் மகா கும்பாபிஷேகத்திற்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் நேரில் எழுந்தருளி பக்தி சிரத்தையுடன் தரிசனம் செய்தார்கள்.

சுதேசமித்திரன், 31—8—1940.

A picture taken during the Kumbabhishekam ceremony of the Sri Kampahareswaraswami Temple at Tirubhuvanam. The temple was built by Kulotunga Chola in the 12th century.

The Hindu, 2—9—1940.

## தருமபுரத்தில் ஆவணிமூலத் திருநாள்

தருமபுர ஆதீன மடத்தில் நேற்று ஆவணிமூலத் திருநாள் நடத்தப்பட்டது. அன்று பகலிலும் இரவிலும் மடம் ஆத்மார்த்த பூஜை ஸ்ரீ சொக்கலிங்கத்துக்கு விசேஷ அபிஷேக அலங்காரத்துடன் ஆராதனை நடத்தப்பட்டது. அக்காலங்களில் ஏராளமானவர்களுக்கு அன்னமளிக்கப்பட்டது.

மாலையில் திருநெல்வேலி ஸ்ரீ சுந்தர ஓதுவாமூர்த்திகளால் “திருநீலகண்ட நாயனர் சரித்திரம்” காலட்சேபம் செய்யப் பட்டது. சுற்றுப் பக்கங்களிலுள்ள பிரமுகர்கள் பலர் வந்து கேட்டின்புற்ருர்கள்.

சுதேசமித்திரன், 11—9—40.

### “யுவ பாரத தமிழ்ச் சங்கம்” நிருசிரபுரம் நன்றி அறிக்கை

திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனகர்த்தர் களாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எங்கள் சங்கத் தின்பால் பெருங்கருணை கூர்ந்து சைவசித்தாந்த நூல்களும் புராணங்களுமாக இருபத்தைந்து புத்தகங்கள் அனுப்பி ஆதரித் துள்ளார்கள். சைவ சமய ஞானபானுவாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்ரேம். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் நீடூழி காலம் திருவருட் செங்கோல் நடாத்தவும், ஆயுராரோக்கி யாபிவிருத்தியும் ஐசுவர்யாபி சம்பத்தும் அளித்துக் காக்க சிந்துவான் மதிதோய் வேணிச்செல்வனை வேண்டுகின்றனம். இன்னும் எங்கள்பால் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்திற்குள்ள ஆதரவு மேன்மேலும் பெருகுவதாக. திருத் தருமபுர ஆதீனம் தழைத்தோங்குக!

இந்து நேசன், 11--9—1940.

His Holiness donated a sum of Rs. 10,000 (Ten thousands) towards War Fund, besides investing about Rs. 50,000 (Fifty thousands) in Interest-Free Indian Defence bonds. Prayers have been arranged to be conducted in all his temples for our Victory in the War.

The International Times, 25—9—1940.

### கல்வி பயில்வதற்கு உபகாரம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரவாதீன கர்த்தர் அவர்கள், கோயிற்பணி, குளப்பணி, கும்பாபிஷேகம், இலவச வெளியீடுகள், முதலியன செய்துவருவதுபோல, இவ்வாண்டில் கல்விபயிலும் மாணவர்களுக்கு உபகாரமும் செய்துள்ளார்கள்.

சென்னை, சிதம்பரம், திருச்சி, மாயவரம் முதலிய இடங்களிலுள்ள பல உயர்தரக் கலாசாலை மாணவர்களுக்கு அவர்களது சம்பளம், புத்தகங்கள், கலாசாலையில் ஏற்படும் இதரச்செலவுகள் முதலியவற்றை ஆதீனகர்த்தரவர்கள் கொடுத்து உதவிவருவது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு உபகாரம் பெற்றுவரும் மாணவர்கள் பதின்மராவர். அவர்களுக்குபகரிக்கும் தொகை வருடம் ஒன்றுக்குச் சுமார் ஆயிரமாகும். இவர்களது தேசபாஷாபிமானம் பாராட்டத்தக்கது. பல்லாண்டுகள் மகாசந்நிதானம், இவ்வாறே சிவப்பணி சிவப்பணிகளைச் செய்துகொண்டு திருமேனி ஆரோக்கியமாக எழுந்தருளியிருக்குமாறு அனுக்கிரகிக்க இறைவனை இறைஞ்சுகின்றோம்

நவ இந்தியா, 11—10—1940.

### மாணவர்களுக்கு உதவி

### தருமபுரம் ஆதீனகர்த்தர் அளிக்கும் உபகாரச்சம்பளம்

தருமபுரம் ஆதீனகர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னதிகள் 1940-41ம் ஆண்டுக்கு பத்து மாணுவர்களுக்கு (ஒரு பி. ஏ. ஜூனியர் வகுப்பு மாணவர் உள்பட) உபகாரச்சம்பளம் கொடுத்துவரத் திட்டம்செய்து உத்திர விட்டுள்ளார். ஸ்காலர்ஷிப்பைப் பெறுகிற மாணவர்கள் நன்கு பரீக்ஷித்துப் பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள். அவர்கள் பெயர் பின் வருமாறு:- திருநெல்வேலி சுப்பிரமணியன், திருப்பனைங்தாள் சம்பந்தன், கருப்பூர் பாலசுப்பிரமணியன், தருமபுரம் சட்டநாதன், அச்சுதராயபுரம் தக்ஷிணாமூர்த்தி, ஆண்டிராபுரம் இராஜரெத்தினம், மணக்கால் ராமலிங்கம், திருப்பனந்தாள் இரத்தினம், சிவபுராணி கலியாணசுந்திரம், நிலக்கோட்டை மீனாட்சிசுந்திரம் ஜூனியர் பி. ஏ.

சுதேசமித்திரன், 5—11—40.

### திருபுவனம்

**தற்சமய விசேஷம்:-** ஷை கோவில் தருமபுர ஆதீனத்துக்குட்பட்டது. குருபரம்பரையின் 24-வது சந்நிதானமாக எழுந்

தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரமகாசந்நிதானத்தின் நன் முயற்சியால் திருப்பணிகள் பல நடந்தேறியது. புதுப்பிக்கப்பட்ட ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன மகாகும்பாபிஷேகம் சகல வைபவங்களுடன் விக்ரமஹு ஆவணிமீ 13௳ (28—8—40) அன்று நடந்தேறியது.

* * *

அதிலும் ஓர் விசேஷம்:- அவ்வமயம் ஸ்ரீ-ல-ஸ்ரீ பண்டார சந்நிதி அவர்களே விஜயம் செய்திருந்தார்.

விகடகேசரி, நவ. 1940.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனகர்த்தராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதி அவர்கள், தமது ஆதீன ஆதிகுருமூர்த்திக்கு வரும் குருபூசை மகோத்சவத்தை முன்னிட்டு அத்தலத்தில் தடாகத் திருப்பணி செய்து வருகிறார்கள். இவ்வாறே தமது பரிபாலனத்திற்குட்பட்ட வைத்தீசுவரன் கோயிலில் தூர்ந்துபோயிருந்த குளங்களைப் புனருத்தாரணம் செய்வித்துள்ளார்கள். மக்களுக்கு மிகவும் உபயோகமாகிய தடாகத் திருப்பணி மேலான பசு புண்ணிய மாகும். இத்தகைய புண்ணிய கைங்கரியங்களில் தங்கள் திரிகரணங்களையும் செலுத்திவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆண்டவன் அருளால் அரோக திடகாத்திரமாய் நீடு வாழ்க!

யதார்த்தவசனி, 22—4—1940.

### மாயவரம் நேஷனல் செகண்டரி பாடசாலை

மாயவரம் நாஷனல் செகண்டரி பாடசாலை மாணவ சங்கத்தினர் சுமார் 200 பேர்களும் ஷை பாடசாலை ஆசிரியர் களும் தருமபுரம் மடத்துக்கு இன்று மாலை விஜயம் செய்து மடத்தின் பல பாகங்களையும் ஆதீன சிங்காரத் தோட்டம் முதலியவைகளையும் பூஜையையும் பார்வையிட்டனர். ஸ்ரீ-ல-ஸ்ரீ பண்டாரசந்நிதி அவர்கள் சிறுவர்களுக்குத் தின்பண்டங்கள்

கொடுத்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மடத்தின் பெரும் பாகத்தையும் நன்கு திருத்தி அமைத்துள்ளார்கள்.

சுதேசமித்திரன், 7—12—1940.

The renovation of 'Pushya Mantapam', the holy bathing ghat on the banks of the Cauvery, has been undertaken by the Dharmapuram Athinam, the hereditary trustee of the Tiruvadi Devasthanam, at on estimated cost of nearly Rs. 5,000. This ancient structure used for the stay of the deity of Sri Panchanadeeswarar temple on all sacred festival days, for the Poor-feeding on the occasion of Sri Thyagayar's festival, in recent years, and as for the spacious rest-house for the pilgrims, was in real need of repairs. The renovation work, which was started, a week back, is carried under the immediate supervision of Mr. N. Rangasamy Mudaliar.

The Indian Express. 10—12—1940.

### திருவையாறு தேவஸ்தான புஷ்யமண்டபத் திருப்பணி.

காவிரிநதி ஓரத்திலுள்ள புஷ்யமண்டபம் திருவையாறு தேவஸ்தானம் டிரஸ்டி தருமபுரம் ஆதீனத்தர்களால் சுமார் ரூ. 5000 செலவில் புனருத்தாரணம் செய்யத் தீர்மானிக்கப்பட்டு சென்ற ஒரு வாரமாய் வேலை நடந்து வருகிறது. தருமபுரம் ஆதீனகர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிகஞானசம்பந்த பண்டார சன்னதி வெள்ளிக்கிழமை இங்கு விஜயம் செய்தபோது திருப்பணியை நேரில் பார்வையிட்டார்.

சுதேசமித்திரன், 12—12—1940.

### தருமபுர ஆதீன வெளியீடு 35.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத் தொகையும், தருமையாதீன 10-வது மகாசந்நிதானம் ஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய அசபா நடனப்பதிகமும் என்ற சிறு புத்தகமும் நமது பார்வைக்குக் கிடைத்தது. இதுபோன்ற வெளியீடுகளை வெளியிடக்

கட்டளையிட்டருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் அருஞ்செயல் போற்றக்கூடியது. இது திருவாரூர் இராஜாங்கக்கட்டளை சார்பாக வெளியிடப்பட்டுள்ளது.

நவ இந்தியா, விஷு ஞு சித்திரைமீ 1உ.

### தருமபுர ஆதீன இலவச வெளியீடுகள்

ஸ்ரீ சிவஞானதேசிகர் நான்மணிமாலை. (வெளியீடு 30.)

மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய கீர்த்தித் திருவகவல் (வெளியீடு 32)

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீன ஸ்தாபகர் ஸ்ரீ குரு ஞானசம்பந்த சுவாமிகளின் வரலாறும் சில பாசுரங்களும். (வெளியீடு 33.)

இம்மூன்று வெளியீடுகளும் கிடைக்கப்பெற்றோம். இந்நூல்களெல்லாம் முன்னோர் மொழிந்த முது நூலாதலின் நாம் அபிப்ராயங் கூறுவது தகாதென விடுத்தாம். இம்மாதிரி பல நூல்களை இலவசமாக வெளியிட்டு சிவஞானச் செல்வர்கள் எளிதில் உணர்ந்து அவற்றின் நுண்பொருள் தேர்ந்து அனுபவிக்குமாறு செய்துவருகின்ற திருக்கைலாய பரம்பரை தருமபுர ஆதீன மகா சந்நிதானத்தின் பெருங்கருணை போற்றற்குரியது.

நவ இந்தியா, 12—1—41.

### பிரிட்டிஷ் வெற்றிக்காகப் பிரார்த்தனை.

இப்போது நடக்கும் மகாயுத்தத்தில் நம்முடைய பிரிட்டிஷ் கக்ஷி வெற்றிபெற வேண்டுமென்று இவ்விடம் ஆதீன மடத்திலும் அதற்குட்பட்ட கோயில்களிலும் புதுவருஷப் பிறப்பன்று (1—1—41) ஒரு விசேஷப் பிரார்த்தனை நடந்தேறியது. அன்று சுவாமிகளுக்கு ஏறுபடியான அபிஷேக நைவேத்தியங்கள் செய்வித்து ஏழை பரதேசிகளுக் களிக்கப்பட்டது. மடத்திலும் பல ஏழைகளுக் கன்னமளிக்கப்பட்டது.

நவ இந்தியா, 12—1—1941.

## தருமபுரம் தர்மம்

என்ன வெல்லாமோ கதைகளைக் கேட்டும், படித்தும், நமக்கு மடங்கள்—மடாதிபதிகள் என்றாலே அருவருப்பு உண்டாவது இயற்கையாயிருந்து வருகிறது. ஆனால், அந்த அருவருப்பைப் போக்கி மடங்களின்மேல் நமக்கு மரியாதை உண்டாகும்படியான காரியங்களைச் சில மடாதிபதிகள் செய்து வருகிறார்கள். ஏற்கெனவே இம்மாதிரி பல நல்ல காரியங்களைச் செய்து புகழ் பெற்றிருக்கும் தருமபுரம் பண்டாரசந்நிதி, ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் கைங்கரியத்திற்கு ஒரு விசேஷ உதவி செய்ய முன் வந்த விஷயம் நமக்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தது. சுவாமிகளின் உற்சவம் நடக்கும் நாட்களில்,

"செவிக்குண வில்லாதபோது சிறிது வயிற்றுக்கு மீயப்படும்"

என்னும் பெரியார் வாக்கையொட்டி, பக்த கோடிகளுக்கு உணவளிக்கப்படுகிறது. காவிரி நதிக்கரையில் புஷ்ய மண்டபப் படித்துறையிலுள்ள மண்டபங்களில் இந்தப் புண்ணிய காரியம் நடைபெறுவது வழக்கம். ஆனால், இந்த மண்டபங்கள் ரொம்பவும் சிதில மடைந்து பாழடைந்த மண்டபங்களாகவே தோற்றமளித்தன. இங்கே உணவருந்த உட்காரும் அடியார்களும், சுவாமிகளின்மேல் பாரத்தைப் போட்டு விட்டுத்தான் உட்காருவது வழக்கம். தருமபுரம் பண்டாரசந்நிதி அவர்கள் ரூ. 3000 செலவுசெய்து இந்த மண்டபங்களைச் செப்பனிட்டுப் புதுப்பித்திருப்பதாக அறிந்து மகிழ்ச்சி யடைகிறோம். இப்படிப்பட்ட நிலையான தர்மத்தைச் செய்த தருமபுரம் மடாதிபதி இந்த மாகாணமெங்குமுள்ள சங்கீத ரஸிகர்களின் நன்றியைக் கொள்ளை கொண்டு விட்டார் என்றே சொல்ல வேண்டும்.

ஆனந்த விகடன், 12-1-1941.

## LIBERAL DONATION

Yesterday His Holiness Sri-La-Sri Shanmuka Desika Gnana Sambanda Pandara Sannidhi Avergal of Dharmapuram Adheenam Mutt, gave dharsan to Mr. C. K. Vijayaragavan, Collector, Mr. T.

S. Avadayappa Pillai, Deputy Collector, Mr. Narasinga Rao Nayudu Tahsildar of Mayavaram, Dewan Bahadhur T. M. Narayanaswami Pillai, President, H. R. E. Board, Madras, Rao Saheb L. N. Paramasivam Pillai and Mr. Doraiswami Reddiar, President of the Lalgudi Temple Committee.

**His Holiness has been pleased to sanction Rs. 10,001 for the Madras Governor's War Fund.**

The Mail, 17—2—'41.

### தஞ்சை ஜில்லாவில் சைவசித்தாந்த பிரசாரம்

### தருமபுரம் ஆதீனகர்த்தரின் ஏற்பாடு

திருக்கைலாய பரம்பரைத் தருமபுரம் ஆதீனகர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதிகள், அவ்வாதீனத்துக்குச் சொந்தமான தேவாலய உற்சவகாலங்களில் தெய்வபக்தி, மதபக்தி வளரச்செய்ய விசேஷ ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். அதற்கேற்ப இவ்வருடமும் ஆதீனத்துக்குச் சொந்தமான வேளூர் தேவஸ்தானம் வைத்தீச்வரன் கோயில் தட்டிச் சுத்தி மண்டபங்களில் ஸ்ரீசெல்வமுத்துக் குமாரசாமி உற்சவம் 10-நாள் 11—2—41ல் ஷை ஆதீன சைவப் பிரசாரகர்களான ஸ்ரீமான்கள் பாலசுந்தரநயினார், சுந்தரம் பிள்ளை முறையே "புள்ளிருக்கு வேளூரும் செல்வமுத்துக் குமரனும்" "திருநீறும் திருஞானசம்பந்தரும்" என்னும் விஷயங்களைப்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

திருவெண்காடு ஸ்ரீ சுவேதாரண்யஸ்வாமி தேவஸ்தானத்தில் நடந்து வரும் இந்திர மகோற்சவத்திலும் ஷையார்கள் முறையே "வெள்ளானை பூசித்தது" "மாணிக்கவாசகரும் கோவையாரும்" என்ற விஷயங்களை உபந்நியசித்தார்கள்.

வைத்தீச்வரன் கோயிலிலும், குத்தாலத்திலும் ஷை பிரசாரகர்கள் 6, 7—2—41 'நாம் வழிபடும் தெய்வம்' 'சைவத்தின்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

# மடாலயத்திற்கு விஜயம் செய்த பெரியமனிதர்கள்



யுத்தநிதி அளித்தபோது தஞ்சை ஜில்லா கலெக்டர்
ஸ்ரீ C. K. விஜயராகவன், I. C. S., அவர்கள் விஜயம்



சென்னை இந்து சமய அறநிலைக் கழகத்தலைவர் திரு. A. கோண்டப்பாகாரு, B.A.B.L.

மேன்மை' 'அம்பிகையின் பிரபாவம்' 'குத்தாலமும் சுந்தரரும்' என்பனதைப்பற்றி முறையே பிரசங்கம் செய்தனர்.

சுதேசமித்திரன், 24—2—1941.

### தருமபுரம் ஆதீன கர்த்தர் நன்கொடை.
### கவர்னர் யுத்த நிதிக்கு ரூ. 10001 உதவி.

தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பண்டார சன்னதிகள் சென்னை மே. த. கவர்னர் யுத்த நிதிக்காக இரண்டாவது தடவையாக ரூ. 10001 (பதினுயிரத்து ஒரு ரூபாய்) நன்கொடை 11—2—41ல் அளித்தார்கள். ஏற்கனவே ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் ரூபாய் 10,000 நன்கொடையும், ரூபாய் 50,000 வட்டி இல்லாத யுத்தக் கடன் பத்திரத்துக்கும் கொடுத்திருப்பது நேயர்களறிவார்கள்.

இரண்டாவதுதடவையாக நன்கொடை கொடுத்தபொழுது தஞ்சை கலெக்டர் ஸ்ரீமான் ஸி. கே. விஜயராகவன் ஐ. ஸி. எஸ். மாயவரம் டிப்டி கலெக்டர் ஸ்ரீமான் ஆவுடையப்ப பிள்ளை, தாசில்தார் நரசிங்கராவ் நாயுடு, சென்னை இந்துமதஸ்தாபன போர்டு தலைவர் திவான் பகதூர் டி. எம். நாராயணசாமிபிள்ளை, இராவ்சாகிப் எல். என். பரமசிவம் பிள்ளை, இராவ்பகதூர் துரைசாமி ரெட்டியார் (லால்குடி) விஜயம் செய்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானத்தை தரிசனம் செய்தனர். நீண்டநேரம் மத சம்பந்தமான விஷயங்களைப்பற்றி சம்பாஷணை நடந்தது. பிறகு வந்தவர்களுக்கு ஓர் தேனீர் விருந்து நடத்தி வைக்கப்பட்டது.

சுதேசமித்திரன், 25—2—41.

### தருமபுரத்தில் தேவார பாடசாலைத் திறப்பு விழா
### மாணவர்களின் உற்சாகம்.

தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பண்டார சன்னதிகள் திருவுளம்பற்றியபடிக்குத் தரும புரத்தில் தேவார பாடசாலை நேற்று முதல் ஆரம்பிக்கப்பட்டு

நடந்து வருகிறது. ஏற்கனவே "மித்திரனில்" வெளியான விளம்பரத்திற்கேற்பப் பல சைவமாணவர்கள் நூற்றுக்கணக்காக மனுச்செய்துகொண்டனர். அவர்களில் சிறந்தவர்களைப் பொறுக்கி எடுத்துப் பாடசாலையில் சேர்த்தாகி விட்டது. இன்னும் மாணவர்கள் நேரிலும் வந்து சேர்ந்து வருகிறார்கள்.

சுதேசமித்திரன், 2—3—1941.

## குரு ஞானசம்பந்தர்.

திருஞானசம்பந்தர், அச்சுப்பிழை காரணமாக குருஞானசம்பந்தராக மாறிவிட்டாரோ என்றுதான் நாமும் நினைத்தோம் முதலில். உங்களுக்கும் அப்படியேதான் தோன்றும் இத் தலைப்பைப் பார்த்ததும். ஆனால் சைவசமயாசாரியாரில் ஒருவரான திருஞானசம்பந்தருக்கும், இந்த குருஞானசம்பந்தருக்கும் சிவசம்பந்தம் இருந்தது என்பதைத் தவிர, பரஸ்பர சம்பந்தங்கள் ஏதும் கிடையாது. இருவரும் சிவனை நினைந்து, அவனையே புகழ்ந்து பாடி, அவனது அருளுக்குப் பாத்திரமாகி, அவனடி சேர்ந்தனர். திருஞானசம்பந்தரது வாழ்க்கைச் சரிதத்தைப் போலவே இந்த குருஞானசம்பந்தருடைய வாழ்க்கைச் சரிதமும் ரசமிகுந்ததாக இருக்கிறது.

அது சரி, இவர் யார் என்ற கேள்விக்கு, சட்டென அறிந்து கொள்ளும்படியாகப் பதில் சொல்ல வேண்டுமென்றால், இவர் தமிழபிவிருத்திக்காகத் தன்னாலான சேவையனைத்தும் செய்துவரும் தருமபுர ஆதீனத்தின் ஆதி ஸ்தாபகர் என்று கூறிவிடலாம். தமது ஆதி மடாதிபதியின் வாழ்க்கை வரலாறுகளையும் அவர் இயற்றிய பாடல்களில் ஒரு சிலவற்றையும் சேர்த்து, சிறு புத்தக ரூபத்தில் அச்சிட்டு, இனமாக வழங்குகிறார்கள். அந்த புத்தகத்திலுள்ள ஸ்வாரஸ்யமான பகுதிகள் சிலவற்றை எடுத்து இங்கே பிரசுரித்திருக்கிறோம்.

குருஞானசம்பந்தர் மதுரைச் சொக்கநாதர் மீதும் மக்களுக்கு அறிவையூட்டும் விதத்திலும் பல பாட்டுக்களைப் பாடி இருக்கிறார். அவற்றில் கொஞ்சம் ருசி பாருங்கள்.

கெடுங்காலம் வந்தாற் கெடுப்பை கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை...கொடுந்தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினு மாரேனு
மண்ணலே சொக்கநாதா.

பரபரக்க வேண்டாம் பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே...யொருவருக்குந்
திங்கு நினையாதே செய்ந்நன்றி குன்றுதே
யேங்கி யிளையா திரு.

என்ன எளிய வார்த்தைகள்! என்ன தெளிவான கருத்து கள்! அவரது தமிழன்பை தற்போதுள்ள மடாதிபதியும் விருத்தி செய்ய முயன்று வருவது பாராட்டத்தக்கதே.

நாரதர், 26—3—1941.

## தருமபுரத்தில் குருபூசை.

திருக்கைலாய பரம்பரை தருமபுரம் ஆதீனம் ஆதி குரு மூர்த்திகளின் குருபூசை, 16, 17-ந் தேதிகளில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண் முக தேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னதிகளால் சிறப்பாகச் செய்யப்பட்டது. விசேஷ பிராம்மண போஜனமும் நடந்தது. பிரஞ்சு காரைக்கால் அட்மினிஸ்டிரேட்டர் டாக்டர் புக்கனன், டிரஷரி ஆபீசர் மான்கீ, அட்மினிஸ்டிரேட்டர் பிரதம காரிய தரிசி பிலாடிரெயின், போலீஸ் கமிஷனர் கேயில்லர் முதலி யோர்களும் வந்து சிறப்பித்தனர். இவ்வருடம் சமய வளர்ச்சிக் கான இனிய வசனங்களை அச்சிட்டு பந்தலில் கட்டிவைக்கப் பட்டிருந்ததும், தெற்கு வீதியில் மனதைக் கவரும் பந்தலும் குறிப்பிடத்தக்கவையாகும்.

சுதேசமித்திரன், 19—5—41.

## தருமபுர வாதீனத்துக் கோயிற்றிருவிழாவும், குருபூசைப் பெருவிழாவும்.

இந்தத் திவ்ய க்ஷேத்திரத்தில் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீஞானம்பிகா சமேத ஸ்ரீஞானபுரீசு வரர் மகோற்சவம் 7—5—41 முதல் ஆரம்பமாகிப் பத்து நாட்

களும் மிக்க குதூகலத்துடன் நடைபெற்றது. இவ்வாதீன மடாலயத்தின் ஆதிகுருமூர்த்தியின் குருபூசைப் பெருவிழா 16–5–41-ல் மிக்க நியமமாகவும் விபவமாகவும் நடந்தேறியது. உற்சவ தினங்களில் திருக்கோவிலில் நடைபெற்ற சைவசமய விளக்க விரிவுரைகளும், தேவார திருவாசகமாகிய திருமுறைகளும் வந்து குழுமிய அன்பர்களின் கருத்துக்கும் காதுக்கும் இன்பமளித்தன. இவ்வாதீன கர்த்தரவர்கள் பட்டத்திற்கு வந்த சென்ற எட்டு வருடங்களில், பிரதி வருடமும் திருவிழாவும் குருபூசையும் மிக்க சிரத்தாபக்தியுடனும் நியமமாகவும் செய்யப்பட்டு வருகின்றன என்பது உலகறிந்த உண்மையேயன்றி உபசாரமல்ல. கருணைநிறைந்த இக்கர்த்தரவர்கள் தமது ஆதீனத்திற்குட்பட்ட தேவஸ்தானங்களெல்லாவற்றையும் பழுதுபார்த்தும், வௌவால் கோவிலில் அடையாதபடி நூதன முறையில் வலைகள் அடைக்கும்படி செய்தும், திருக்கோபுரம் திருமதில்கள் கண்டவர் கருத்தையும் கண்ணையும் கவரத்தக்கவாறு சிவச்சின்னங்களமைப்பித்தும், புதிய வர்ணங்கள் கட்டுவித்தும், கோபுரங்கள் குளங்கள் புதுப்பித்தும், நந்தவனங்கள் வைக்கும்படி செய்தும், தென்னை, வாழை, மூங்கில், சவுக்கு, பலன்தரு மரங்கள் பல வைத்துப் பயிர் செய்வித்தும், நிலங்கள் நன்ருய் விளைவதற்கு கொத்து வெட்டு வாய்க்கால் முதலிய மராமத்து செய்வித்தும், தேவாரப் பாடசாலை அமைத்து அதிற் பயிலும் மாணவர்களை திருவிழா நடக்குமிடங்கள் முதலியவற்றிற்குத் தங்கள் ஆதீனச் செலவில் அனுப்புவித்தும், தருமபுரம் வீதிகள்தோறும் பழுதுபட்ட வீடுகளைச் சீர்படுத்திப் புதிய வீடுகள் பல கட்டுவித்து அவற்றுட் குடிகளிருக்கச் செய்தும், தினந்தோறும் கணக்குகளைப் பரிசிலித்தும், காரியஸ்தர்களை மகவைப்போல் பரிபாலித்தும், இன்னன நன்மைகள் பலவும் செய்துவருவதா லல்லவோ எட்டுத் திசையும் இவர்கள் புகழ் கொண்டாடப்பட்டு வருகிறது. பெருங்குணமமைந்த மானேஜர், ஹெட்கிளார்க் ரத்தினம்பிள்ளை, முத்துக்குமரசாமி முதலியார், மற்றுமமைந்துள்ள ஒவ்வொரு காரியஸ்தரும் யாவரும் கண்டு வியக்கும்படியான முறையில் உழைத்துவருவதால், எந்தக் காரியத்தை யாரம்பித்தாலும் செவ்வனே முற்றுப்பெற்று வருகிறது. இவ்வாண்டுக் குருபூசைத்

தருமபுரம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் உத்ஸவம்



காலை விழா



திருக்கல்யாண உத்ஸவம்.

தினத்திலும், மகேசுவரபூசை, பட்டினப்பிரவேசத்திலும் நடந்த ஒவ்வொரு காட்சியும் கண்கொள்ளாக் காட்சியேயாம். கொலுக் காட்சியைக்காண பல விடங்களிலிருந்தும் உத்தியோகஸ்தர்களும், தனவந்தர்களும், உள்ளன்புள்ளவர்களும் வந்து நிறைந்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் மனதிற்கு மகிழ்வூட்டின பெருமையே பெருமை; பட்டணப்பிரவேசத்திற்காக அந்தத் தலத்தின் திருவீதிகள் சிங்காரமாக அலங்கரிக்கப்பட்டிருந்த துடன், ஓதுவார்களும், வாத்தியகோஷம் முழக்குவோர்களும் வந்திருந்த அனைவர்க்கும் பேரின்பத்தைப் பெறும்படியும், மனமுருகும்படியும் செய்துள்ளார்கள். இந்த ஆதீனத்திற்கு மேன்மை பொருந்திய ஆதீனகர்த்தரவர்கள் அமைந்ததற் கொப்ப; திருநள்ளாறு, திருக்கடவூர், மலைக்கோட்டை, வைத்தீசுவரன்கோவில், இராஜாங்கக்கட்டளை முதலிய தேவஸ்தானங்களுக்கும் கல்வி கேள்விகளிற்றேறிய தம்பிரான் மார்களும் பொருத்தமாக அமைந்திருப்பது போற்றிப் புகழத் தக்கது.

*யதார்த்தவசனீ*, 21—5—1941.

## தருமபுர ஆதீனத்துள் கண்டதும் கேட்டதும்

தருமபுரம் என்ற பெயரைக் கேட்டாலே தமிழர்களுக்கு ஒரு பெரிய இன்பமாக இருக்கவேண்டும் என்ற நிலையில், அவ் வாதீனத்து அதிபராகிய 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பல மான தமிழ்த் தொண்டு செய்திருக்கின்றார்களென்ற விஷயம் நாம் 22—7—41-ல் அங்கு சென்றிருந்தபோது வெளியாயிற்று. தமிழ்ப் பிரசுரங்களும், இன்னும் பல சேவைகளும், சைவசமய வளர்ச்சிக்கருதிச் செய்யப்பட்டிருக்கிற தென்றால் யார்தான் சந்தோஷப் படாமலிருக்க முடியும்! இம்மாதிரியே தருமபுர ஆதீன அதிபர், இன்னும் பல சேவைகளைத் தமிழுக்கும் சைவ சமயத்திற்கும் செய்தும் இனியும் செய்ய விருப்பதையும், சைவ சமயப் பத்திரிகையான நம் 'தமிழ்க்கொடி' க்கு வாழ்த்தும்

வளர்ச்சிக்குரிய உதவிகளும் அண்மையில் அளிப்பதாயும் வாக்களித்ததைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி யடைந்துளோம்.

தமிழ்க் கொடி, விஷு௵ ஆடி௴ 9௳

## ஸ்ரீ ஜெயமாருதி வாசகசாலை கும்பகோணம்
## 1940—41 வருஷாந்திர அறிக்கை

* * *

எங்கள் வாசகசாலையின் உபயோகத்திற்காக மதிப்பிடற்கரிய பெருமை பொருந்திய 27 புத்தகங்களை இனாமாகக் கொடுத்துதவிய தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ தருமபுரத்துப் பெரியார் ஸ்ரீபண்டாரசந்நிதி அவர்கட்கு எங்கள் வணக்கமான நன்றி உரித்தாகுக. அப் பெரியார் அவர்களின் இப்பேருதவி தமிழ் நாட்டிற்கே ஓர் அரிய சேவையென்பதில் சந்தேகமில்லை.

### ஆவணி மூலத் திருநாளும், தருமபுர ஆதீனமும்

இது மதுரையில் நடந்த திருவிளையாடல்களி லொன்று. தென்னவன் பிரமராயன் பொருட்டு சிவபெருமான் வைகையைப் பெருகச்செய்ததும், அவ்வெள்ளத்தை அடைத்தற்பொருட்டு, அனைவரையும் அடிமைகொண்டான் பிட்டுவாணிச்சியின் அடிமையாகி, வைகைக்கரையில் கூலியாளனாகி, கூடை மண் சுமந்து வாணிச்சியின் பங்கை யடைப்பதும், அது, இறைவனது இன்ப வெள்ளப் பெருக்கால் அடைபடாது, கரைபுரண்டோடுவதும், இதனைக்கண்ட பாண்டியன், தன் கைப்பிரம்பால் கூலியாளை ஒச்சவும், அது, பாண்டியன் முதல், எல்லோர் முதுகிலும் பட்டதும், பின் எல்லாமுந் தாமாகவே கலந்துநின்ற பெருமான், பாண்டியனுக் குண்மை யுணர்த்தியருளியதுமாகிய திருவிளையாடலாகும். இதனை, ஆவணி௴ மூல நட்சத்திரத்திற் கொண்டாடுவது தொன்றுதொட்டுள்ள ஏற்பாடு.

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில், அங்கு எழுந்தருளியிருக்கும்; ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானுக்கு, இவ் விழாவை மிகச்சிறப்பாய் நடத்துவது வழக்கம். சென்ற ஆண்டு

வரை இது ஒவ்வோர் முறையில் கொண்டாடப்பட்டது. அன்று இத்திருவிளையாடற் சரித்திரத்தை உபன்யசிக்கச் செய்வது; இதனைப் புராணப்படனம் செய்விப்பது; கதாகால க்ஷேபமாக இலக்கியச் சுவையுடன் இசைச்சுவையையும் சேர்த்து அனுப விக்கச் செய்வது, முதலியவைகளில் நடத்தி, மகா சந்நிதானம் இன்புற்று வந்தார்கள்.

இவ்வாண்டு ஓர் புதிய முறையைக்கையாள ஏற்பாடாகி யிருக்கிறது. மகா சந்நிதானம் கால்லப்போக்கை நன்குணர்ந்து எவ்வெவ்வகையில், மக்களுக்கு சமய—பாஷா உண்மைகளை யுணர்த்தக்கூடுமோ, அவ்வவ்வகையில் உணர்த்திவரும் பெரியார், ஆகலின், இவ்வாண்டிலோர் புது முறையில் இவ்விழாவைக் கொண்டாடச் செய்திருப்பது, இவர்களது அறிவுப் பெருக்கத் தையும் ஆற்றல் மிகுந்த நிர்வாகத்தையும், நன்கு விளக்கு கின்றது.

அன்று, சமய உண்மைகளை, மக்கள் உணர்ந்து பயன்படத் தக்க வகையில், "மெய்கண்ட சாத்திர மகாநாடொன்றைக்" கூட்டுவித்து, உபன்யஸிக்கச் செய்து, தகுதிக்குத்தக்க சன் மானங்களளித்துத் தமிழ்—சமய சாத்திர வித்வான்களை யாத ரிப்பது என்பதாகும். இம்முறை மிகமிகப் பாராட்டத்தக்கது என்பதை அறிவுடையுலகம் ஒப்புக்கொண்டே தீரும். இது குறித்து முன்னொரு முறை நாம் விரிவாக எழுதியிருப்பதால் மீண்டும் அதை எழுதாது வாசகர்களுக்கு ஞாபகத்துக்கு மட்டில் கொண்டுவருகிறோம்.

இம்மகாநாட்டுத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக் கும், ராவ்பகதூர் ஸ்ரீ ராமச்சந்திரன் செட்டியாரவர்களைப் பற்றி, நாமதிகம் எழுதித் தமிழுலகத்துக்கு அறிமுகப்படுத்த வேண்டுவதில்லை. இவர்களைத் தமிழுலகம் நன்கறிந்தே யிருக் கிறது. சிறந்த சிவபக்தர்; நிறைந்த கல்வி, யறிவு, ஒழுக்கம் முதலிய நற்குணங்களுடையார்; தற்காலத்துக்கேற்ற ஆராய்ச்சித்

துறையில், அதிகந் தேர்ச்சியுடையார்; பல பாஷாஞான முடையார்; தூய மனத்தினர்; பரந்த நோக்குடையார்; சிறந்த நியாயவாதி. இவர் தலைமை தாங்கும் இம்மகாநாட்டில் சமய நியாயவாதியாய்க் கடனாற்றுவார் என்றெதிர் பார்ப்பது மிகை யல்லவே.

இம் மகாநாட்டை நடத்துவதற்கு முன்வந்துள்ள தரும புரவாதீன மகா சந்நிதானம், சிறப்பாக நடைபெற வேண்டிய ஏற்பாடுகள் பலவற்றையும் செய்துவருகிறார்கள். இது இவர் களுக்கன்றி ஏனையோர்க்கு இயலாதென்பதை முன்னரே எடுத்துக் காட்டியுள்ளோம். ஒருவருக்குப் பொருள்மட்டிலிருந் தால் போதாது. அதைப் பிறருக்குப் பயன்படச் செய்யவும், அதையும் நல்லவழியிலேயே செய்யவும் ஆற்றலும், அவ்வத் துறையில் ஆர்வமும் அதிகம் வேண்டுமன்றோ? இவைகளை யெல்லாம் ஒருங்கே பெற்றுள்ள **ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளது** செயற்கரிய செயலை வியந்து பாராட்டி, இவர்கள், பன்னெடுங்காலந் துறவரசு வீற்றிருந்து, செங்கோலோச்ச வேண்டுமாய்ப் பன்னகாபரணன் பாதமலர்களை இறைஞ்சுகின்றோம்.

நவ இந்தியா, 17—8—41.

### மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
### ஸ்ரீ-ல-ஸ்ரீ சன்னிதானத்தின் திறப்புரை

தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞான சம்பந்த பண்டார சன்னதிகள் மெய்கண்டான் சித்தாந்த மகா நாட்டை இன்று திறந்து வைத்தார்கள்.

"இந்த ஆதீன பிரதிஷ்டாபகர்களாகிய பிரதம பரமா சாரிய ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளது திருவுளப் பிரசாத மகிமையினாலே இந்த மகாநாடு நடைபெறுகின்றது. இன்று முதல் இங்கே நடைபெறும் சிவஞானபோத உபந்நியாசங்

களைக் கேட்டும் ஆவணிமூலத் திருநாளில் நிகழும் திருநெறிச் சைவத் திருவிழாப் பொலிவைத் தரிசித்தும் சகல சம்பத்தும் பெற்றும், இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பெரு வாழ்வும் பெறுவீர்களாக எனத் திருவருளைச் சிந்திக்கின்றோம்'' என்று அவர் குறிப்பிட்டார்.

தென் இந்தியாவில் முதன் முதலாக ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு எல்லாம்வல்ல சித்தராகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருவருளாலும் தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னதி திருவுளப்படியும் இன்று காலை 8-மணி முதல் ஆரம்பமாகி நடந்து வருகிறது.

ஹிந்துமத தேவஸ்தானபோர்டு கமிஷனர் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், மகாநாட்டின் தலைவர் காசி வாசி-சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார், மற்றும் பல முக்கியஸ்தர்கள் இன்று வந்து சேர்ந்தார்கள். வரவேற்புக் கழகத்தலைவர் ஸ்ரீ இராமலிங்கத் தம்பிரான், உபசரணைச் சங்கத்தலைவர் ஸ்ரீ அருணந்தித் தம்பிரான், பொதுக்காரியதரிசி ஸ்ரீ மௌன-சோம சுந்தரத் தம்பிரான் மற்றும் ஸ்ரீ மடத்தின் உத்தியோகஸ்தர்கள் பிரதிநிதிகளை மிகவும் உபசரித்து வருகிறார்கள்.

மகாநாடு நாளையதினம் காலை 8-மணிக்கு மறுபடி ஆரம்பமாகிறது. மகாநாட்டின் வெற்றிக்குப் பிரார்த்தனை செய்து அநேகர் செய்திகள் அனுப்பியுள்ளார்கள்.

*சுதேசமித்திரன்*, 31—8—41.

## SAIVA SIDDHANTA CONFERENCE

The Maikandan Saiva Siddhanta Conference organised under the auspices of the Dharmapuram Adhinam, began to-day. There was a large gathering from all Tamil District.

Kasivasi Siva Sri Esana Sivachariar of Palni, President of the Conference, and Rao Bahadur C. M. Ramachandra Chettiar, Commissioner, Hindu Religious Endowments Board, were accorded a reception and taken in a procession to the conference pandal. His Holiness the Maha Sannidhanam of Dharmapuram Adhinam received the President and the Commissioner and blessed them.

Sri Arulnandhi Thambiran, President of the Reception Committee, welcomed the gathering.

Mr. C. M. Ramachandra Chettiar and Mr. K. Rangaswami Mudaliar spoke on the need for and usefulness of the conference.

The President then gave a long and learned discourse on Saiva Siddhantam (a system of Hindu philosophy).

Messrs Vajiravelu Mudaliar of Conjeevaram, Kannappa Mudaliar of Madras and Manikkavachaga Mudaliar of Arni spoke.

Later, there was a poor feeding on a large scale.

The Mail, 31—8—1941.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
## தருமபுரத்தில் கூட்டம்

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு நேற்று முன் தினம் காலை 8-மணி முதல் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானம் மகாநாட்டில் பிரசன்னமாகி அமர்ந்த பிறகு திருமுறை ஓதல் நடந்தது. அதன்பின் மகாநாடு துவங்கியது. தென்னிந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பல பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். மகாநாடு ஆரம்பித்ததும் ஸ்ரீமகா சன்னிதானத்தின் பிரசங்கம் படிக்கப்பட்டன. மகாநாட்டின் தலைவருக்கு ஓர் வரவேற்புப் பத்திரமும் படித்துக்கொடுக்கப் பட்டது.

மகாநாட்டின் நோக்கங்களை விளக்கிக் காரியதரிசி ஸ்ரீ மௌனசோமசுந்தரத்தம்பிரான் பேசினார். இன்றுமகாநாட்டுக்கு வந்திருந்த செய்திகள் படிக்கப்பட்டன. ஹிந்து மத பரி

பாலன போர்டு கமிஷனர் இராவ்பகதூர் C. M. ராமச்சந்திரன் செட்டியார் முதலில் பேசினர். இதுபோன்ற மகாநாடுகளால் ஏற்படக்கூடிய அனுகூலங்களை அவர் எடுத்துரைத்து விரிவாகப் பேசினர். பிறகு ஸ்ரீமான் கே. அரங்கசாமி முதலியார் (Deputy Inspector of Local Boards) சமய மகாநாட்டின் அவசியத்தை வற்புறுத்திப் பேசினர்.

## தலைவர் பிரசங்கம்

மகாநாட்டின் தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் தமது அக்கிராசனப் பிரசங்கத்தைச் செய்தார். மகாநாட்டின் விசேஷம், ஆராய்ச்சியினல் விளையும் பயன் இவற்றை அவர் விரிவாக எடுத்துக்கூறினர். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானத்தின் முயற்சிக் காரணமாக சமய நூல்கள் வெளியிடப்பட்டு வருகின்றனவென்றும் அவர் தெரிவித்தார்.

சிவஞானபோத சூத்திரத்தின் முதற் பகுதியைப்பற்றி ஸ்ரீமான்கள் முத்து சு. மாணிக்கவாசக முதலியாரும், வச்சிரவேல் முதலியாரும் பிரசங்கம் செய்தனர்.

பிற்பகலில் மகாநாடு கூடியதும் ஸ்ரீமான்கள் கண்ணப்ப முதலியார், சமரபுரி முதலியார், A. முத்தையாபிள்ளை முதலியோர் சிவஞானபோத சூத்திரங்கள்பற்றிப் பேசினர்.

மூன்றும் நாள் நடவடிக்கைக்கு இராவ் பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் தலைமை வகித்தார்.

சமய உண்மைகளை நன்கு விளக்குவதற்கு இந்த முதல் மகாநாட்டைக் கூட்டியதற்காக ஸ்ரீ மகா சன்னிதானத்துக்கு நன்றி தெரிவிப்பதாயும், சமய உண்மைகளுக்குப் பலமளிப்பது ஆலயங்களும், மடாலயங்களுமே யென்றும், இத்துறையில் இங்கு மடாதிபதிகள் செய்துவரும் தொண்டு அரியதாகுமென்றும்,

சமய நூல்கள் கிடைக்குமிடத்தை நாடிச்சென்று அவற்றைப் பெறவேண்டு மென்றும், ஆகம, தேவாரப் பாடசாலைகள் ஏற்படவேண்டுமென்றும் அவர் விரிவாகப் பேசினர்.

சூத்திரங்களின் முக்கிய அம்சங்களைக் குறித்துப் பலர் பேசினர். தலைவர் முடிவுரைக்குப்பின் ஸ்ரீ மகா சன்னிதானத்தின் ஆசியுரை படிக்கப்பட்டது.

மகாநாடு இரவுடன் கலைந்தது. இன்று மகாநாட்டின் கடைசி நாள். இதற்குக் கோவை ஸ்ரீ சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் தலைமை வகித்தார். தலைவர் பேசிய பின் ஸ்ரீமான்கள் எம். பாலசுப்பிரமணிய முதலியார், டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலிய பல அறிஞர்கள் பிரசங்கங்கள் புரிந்தனர். தலைவர் முடிவுரைக்குப்பின் ஆசிச்செய்தி படிக்கப்பட்டது. இத்துடன் மகாநாடு முடிவடைந்தது.

சுதேசமித்திரன், 3—9—1941.

## தருமபுரத்தில் திருமுறை விழா

### ஆவணிமூலத் திருநாள்

மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டு நான்காம் தினத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதிகள் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானுக்கு 1—8—41ல் காலை 10-45 மணிமுதல், சுமார் 3 மணி நேரம் சைவாசரணைப்படிக்கு விசேஷ அபிஷேக ஆராதனை முதலியவைகளைச் செய்தார்கள். பூஜா மண்டபத்தில் பக்தர்கள் ஏராளமாகக்கூடி தரிசனம் செய்தார்கள். மகாநாட்டிற்கு வந்த ஆயிரக்கணக்கான பக்தகோடிகளுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் விபூதிபிரசாதங்களைத் தானே நேரில்வழங்கி ஆசிர்வதித்தார்கள். பிறகு சந்தர்ப்பணை நடந்தது.

இரவு 11மணிக்கு ஸ்ரீ சுந்தர ஓதுவாமூர்த்தி (திருநெல்வேலி), வேதாரண்யம் அருணசல தேசிகர், நடராஜ தேசிகர், இராமலிங்க தேசிகர், கந்தசாமி தேசிகர் ஆகியவர்கள் இனிமையாகத் திருமுறைப் பாராயணம் செய்தனர்.

பிறகு சமயாசாரியத் திருவுருவப் படங்களை வெள்ளி இரதத்தில் எழுந்தருளச் செய்து உயர்தர நாதசுர வாத்திய கோஷங்களுடனும், திருமுறை ஓதுவார் கூட்டங்களுடனும், விருதுகளோடும் வீதிவலம் வந்தார்கள்.

சுதேசமித்திரன், 4—9—1941.

## MAIKANDAN SAIVA SIDDAṆDHA CONFERENCE

The Maikandan Saiva Siddandha Conference was held here on Augest 28, 29, 30 and 31 under the presidency of Sri Esana Sivachariar of Palni, The Conference was convened by His Holiness the Mahasannidanam of Dharmapuram Adhinam.

Sri-La-Sri Arulnandhi Thambiran President of the Reception Committee, welcomed the gathering and spoke on "Saiva Siddandha".

Rao Bahadur C. M. Ramachandran Chettiar and Mr. K. Rengaswami Mudaliar spoke about the necessity and the usefulness of the Conference which was bound to give an impetus to the Saiva Siddandham and its philosophy.

Siva Sri Esana Sivachariar delivered his presidential address on Saiva Siddandham.

On all the four days many lectures were delivered by learned Pandits, prominent among whom was Sri Chamundi Sankaracharya of Mysore.

The Hindu. 4—9—1941.

இம் மகாநாடு 28, 29, 30-ம் தேதிகளில் திருத் தருமையம்பதியிற் கூடித் தன் கடனைச் செவ்வனே ஆற்றியுள்ளது. இம் மகாநாடு கூடவேண்டிய அவசியத்தைப்பற்றி, சென்னை H. R. E. போர்டு கமிஷனர், இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் 'மகாநாட்டின் அவசியம்' என்ற தமது பிரசங்கத்தில், மிகத்தெளிவாக எடுத்துக்காட்டி யிருப்பதை வாசகர்கள் கவனிக்க விரும்புகிறோம். அம்மட்டோடன்றி, போர்டாருக்கும் மத விஷயத்திலுங்கூடக் கவனஞ் செலுத்தக் கடமையுண்டென்பதை விளக்கியிருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

சில காலமாக, மக்களுணர்ச்சியில், சைவ சமய வளர்ச்சிக்கும், மொழி வளர்ச்சிக்கும், அதற்கென்றேற்பட்ட ஸ்தாபனங்களும், சிறப்பாக மடங்களும் ஒன்றுங் கவனம் செலுத்தவில்லையென்ற எண்ணமேற்பட்டு, எங்குமதுவே பேச்சாக இருந்தது. இதைத் தவறு என்றும், அந்தந்த ஸ்தாபனங்களுந் தங்கள் தங்களாலியன்ற வரையில், அந்தத் துறைகளில் வேலைசெய்து வருகின்றன என்றும், அதற்கெடுத்துக் காட்டாக, தருமபுர ஆதீன கர்த்தரவர்கள் செய்துவரும், பல அரிய செயல்களையும் குறிப்பிட்டு நாம் எழுதிவந்தது, வாசகர்கள் ஞாபகத்திலிருக்கலாம். சமய சம்பந்தமான பல நூல்களை வெளியிட்டு இனமாக வழங்கி வந்ததையும்—வருவதையும், ஆலயங்கள்தோறும் தக்க வித்துவான்களைக் கொண்டு சமயப் பிரசாரம் செய்துவந்ததையும்—வருவதையும், தேவார பாடசாலை யமைத்து சற்றேறக்குறைய இருபது பையன்களுக்கு உண்டியும் உறைவிடமும் கொடுத்தாதரித்துப் பயிற்சிபெற்று வருவதையும் மீண்டுமொரு முறை எடுத்துக்காட்டுவது மிகையாகாது. அம்மாணவர்கள் திருமுறை வீதியுலாக்காட்சியில் தேவாரம் ஓதியதைக் கேட்டவர்கள் பாடசாலையினாலுண்டான நன்மையை உணர்ந்திருப்பார்களென்றே எண்ணுகிறோம். சந்நிதானம் அவர்களே முன்வந்து, இப்பெரும் மகாநாட்டைக் கூட்டி, மிகுந்த பொருட்செலவில்

பலவித்துவான்களது பிரசங்கத்தை நடத்திவைத்ததும், அவைகளை அச்சிட்டு வழங்கியதும், நாம் முன்னரறிவித்தபடி, சந்நிதானத்திற்கு மொழி வளர்ச்சியிலுஞ் சமய வளர்ச்சியிலுமுள்ள ஆர்வத்தை அன்றோ காட்டுகிறது? இவர்களை யன்றி வேறெவர்களாலும் இதனை நடத்த முடியாதென்று நாம் முன்னரறிவித்தது உண்மை யென்பதையும், மக்களுணர்வார்க ளென்பதிலும் ஐயமில்லை.

மகாநாட்டிற்கு உபந்நியாசகர்களையும் தலைவர்களையும் தேர்ந்தெடுத்திருப்பதொன்றே, மகாசந்நிதானத்தின் அருஞ் செயலைக்காட்டுகிறது. தலைவர்களும் உபந்நியாசகர்களுந் தங்கள் தங்கள் விஷயங்களை மிகவுந் தெளிவாகப்பேசியது போற்றத் தக்கது. பொதுவாக இம்மகாநாடு, நல்ல தருணத்தில், நல்ல முறையில், நல்ல இடத்தில், நல்லாரொருவரால் கூட்டப்பட்டு இனிது நிறைவேறி சைவ உலகத்துக்குப் பல நன்மைகள் உண்டாகி யிருக்கிறது என்பதே நமதபிப்பிராயம். மகாசந்நிதானம், இதுபோன்ற செயற்கரிய காரியங்கள் பலவற்றையுஞ் சிறப்புடன் செய்துகொண்டு, சிவப்பணி—சீவப்பணி ஆற்றிவரக் கருணைக்கடலாம் கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.

நவ இந்தியா, 7—9—1941.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
## ஆவணிமூலத் திருமுறை மகோத்ஸவம்

தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்த மகா சந்நிதானத்தின் ஆதரவில் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு ஆகஸ்டு 28உ முதல் 31உ யீறாக வெகு விமரிசையாக நடந்தது.

மகாநாட்டின் தலைவர் பழனி காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார், இந்துமததருமபரிபாலனபோர்டு கமிஷனர் இராவ் பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் இருவரும் மகாநாட்டுப்பந்தலுக்கு ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

தருமபுர ஆதின ஸ்ரீ-ல-ஸ்ரீ பண்டார சன்னதி விருந்தினரை வரவேற்று, அவர்களை ஆசிர்வதித்தார்.

பல பிரமுகர்கள் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்ததுடன், ராஜா சர் அண்ணாமலை செட்டியார், இந்து மத தர்ம பரிபாலன போர்டு தலைவர் திவான்பகதூர் டி. எம். நாராயணசுவாமி பிள்ளை, ஸ்ரீமான்கள் எஸ். சத்தியமூர்த்தி, டாக்டர் பி. சுப்பராயன், சி. என். முத்துரங்க முதலியார் ஆகியவர்கள் வாழ்த்துச்செய்தி யனுப்பியிருந்தனர்.

வரவேற்புக் கமிட்டி தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணந்தித் தம்பிரான், சைவசித்தாந்தத்தைப் பற்றி சாரமாக இரண்டொரு வார்த்தைகள் கூறி தலைவரை வரவேற்றார்.

இராவ்பகதூர் வி. எம். இராமச்சந்திரஞ்செட்டியார் சைவ சித்தாந்தத்திற்கு, இம்மகாநாட்டால் நேரிடும் பிரயோஜனத்தை விளக்கிவிட்டு, அதற்காகத் தருமபுர ஆதீனம் செய்துவரும் முயற்சியைப் பாராட்டிப் பேசினர்.

மகாநாட்டுத்தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் மெய்கண்டான் சித்தாந்தத்தைப்பற்றிச் சுமார் 1½-மணி நேரம் சொற்பொழிவாற்றினர். சைவ சித்தாந்தத்தைப் பற்றி சிறு புத்தகமும் இனமாக எல்லோருக்கும் வழங்கப்பட்டது.

இரண்டாம் தினத்தன்று இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் தலைமையில் மகாநாடு கூடியது. பல அறிஞர்கள் சைவ சமயத்தின் அரிய சித்தாந்தத்தைப் பற்றிப் பேசினர்கள். சென்னை வக்கில் திரு. எம். பாலசுப்பிரமணிய முதலியார், திருவையாறு வித்துவான் கு. சோமசுந்தர தேசிகர், சென்னை மேரி ராணி கல்லூரி, பௌதிக சாஸ்திர ஆசிரியை ஸ்ரீமதி, ஈ. டி. ராஜேச்வரி அம்மாள் முதலியோர் பேசினர்.

சிவஞான போதத்தைஅப்படியே ஒப்புவித்த குமாரி மீனாட்சி என்கிற 8 வயது பெண்ணின் ஞாபகசக்தி போற்றத்தக்கது. அன்று மாலையில் திருப்புகழ்மணி T. M. கிருஷ்ணசாமி அய்யர் இசையுடன், சிவகருணை என்பதுபற்றிப் பேசினர்.

தருமபுர மடத்தின் ஆத்மார்த்த பூஜாமூர்த்தியான ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு மிக உகந்த தினமான ஆவணி மூலத் திருநாள் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. பன்னிரு திருமுறையைப்பற்றி ஸ்ரீமான்கள் டி. கே. சிதம்பரநாத முதலியார், திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை, ஆக்டிங் உதவிகல்வி டைரக்டரான சச்சிதானந்தம் பிள்ளை முதலியோர் பேசினர்கள்.

மகாநாடு நடந்த தினங்களெல்லாம் ஸ்ரீ சுந்தர ஓதுவா மூர்த்திகள் தலைமையில் தேவாரப் பாடசாலை கோஷ்டி நடை பெற்று வந்தது. திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை நாதசுரம் வாசித்தார்.

கடைசி தினத்தன்று நால்வரும், திருமுறையுடன் மடத் துக்கு எழுந்தருளப்பட்டனர். அன்று பண்டார சன்னதிகள் பிரமுகர்களுக்கெல்லாம் திருநீறு பிரசாதம் வழங்கினர்.

மகாநாட்டுக்காகச் செய்யப்பட்டிருந்த வசதிகளைப்பற்றி எல்லாரும் அகமகிழ்ந்தனரென்பது குறிப்பிடத்தக்கது. சைவ சமயம் என்பது என்னவென்று தெரியாதவர்களுக்கெல்லாம், அதைப்பற்றிக் கண்ணைத்திறந்துவிட்ட பெருமை ஆதீனத்தைச் சார்ந்ததாகும்.

பாரததேவி, 9—9—41.

### சைவசித்தாந்த மகாநாடு

சொற்பொழிவு மண்டபம் அழகாக அலங்கரிக்கப்பட்டு இருந்தது. முன்பக்கம் அழகிய வளைவுகளும் மாடியமைக்கப்

பெற்ற பந்தல்களும் விளங்கிற்று. எங்கு பார்த்தாலும் கொடிகளும் விதானங்களும் பொலிந்தன. நல்லுணர்ச்சியை எழுப்பக்கூடிய சொற்றொடர்கள் அமைந்த கடிதங்கள் ஒவ்வொரு தூணையும் காத்துக்கொண்டிருந்தன. பேர்பெற்ற ஓதுவாமூர்த்திகள் இசையுடன் தேவாரகானங்கள் செய்தனர். தமிழ் ஆங்கிலப் புலவர்களும், தனித் தமிழ்ப் புலவர்களும், சென்னை மாகாணத்தில் யார் யார் சொற்பொழிவு செய்பவர்களோ, அவர்கள் எல்லோரும் ஒருங்கே கூடியிருந்தனர். ஈசான சிவாசாரியார், ராவ் பகதூர் இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் B. A., B. L., கோயமுத்தூர் C. K. சுப்பிரமணிய முதலியார் B. A. இம்மூவரும் முறையே தலைமை வகித்தனர். இவர்களைப் பார்க்கிலும் இம் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்கத் தகுதியுடையார் வேறு காண்பதரிது என்பதை அறிஞர்கள் அறிவார்கள்.

மகாநாடு சொற்பொழிவு மண்டபத்தில் ஏறக்குறைய இரண்டாயிரம் பேருக்குமேல் குழுமியிருந்தார்கள்.

தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மகாநாட்டைத் திறந்து வைத்தது. இந்தச் சைவசித்தாந்த மகாநாட்டைத்திறந்து வைப்பதற்கு அதிகாரியாவார் மகாசந்நிதானமேயாகும். திறந்து வைத்தது என்றால் என்ன? சைவசித்தாந்த நூல்களில் (அதாவது மெய்கண்ட நூல்களில்) மறைந்து உள்ளே வதிந்திருக்கின்ற பொருள்களை நமக்குத் திறந்து வெளியாக்குவதேயாகும். குரு என்ற சொல்லின் பொருள் அஞ்ஞானத்தைப்போக்கி ஞானத்தை விளக்கச் செய்வதே என்பதாகும். தேசிகர் என்கிற பொருள் ஆன்மாக்களை மலத்தினின்றும் பிரித்து சிவத்தோடு அணமயதாகும்படிச் செய்வதே ஆகும். ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள் நாம் மேலே முன்னர்க் குறித்த பொருள்களால் இந்த மகாநாட்டைத் திறப்பதற்கும், நடத்துவதற்கும், உரியார் என்பது மறுக்கப்படாத உண்மையாகும். சைவஉலகம் தூக்கத்தினின்றும் விழித்துக்கொண்டது.

தமிழ் நன்மக்கள் பழமை பாராட்டி மகிழ்ந்து வருகின்ற னர். இவ்வாறு மகா சந்நிதானம் மகாநாட்டைத் திறந்தவுடன் தேவாரம் முழங்கிற்று. தலைவர்களும் சொற்பொழிவாளர்களும் மெய்கண்ட நூலை வடித்தெடுத்த சாறு ஆக சொற்பொழிவு சாற்றினர். சொற்பொழிவைக் கேட்பதற்குக் கூடியிருந்த நன் மக்கள் அனைவரும் சித்திரப்பாவையின் அத்தகவடங்கிக் கேள்வி இன்பத்தில் ஈடுபட்டிருந்தனர். கூச்சல் ஒரு சிறிதும் இல்லை. ஆதீனப்பணியாளர்கள் வந்தவர்களுக்கு எது தேவை என்பதை உபசரிப்பதில் கண்காணிப்பாய் இருந்தனர். ஒவ் வொருவருக்கும் விசிறி கொடுக்கப்பட்டிருந்தது. வென்னீர் பறை ஒன்று அமைத்து நீராடுவதற்கும் பல் துலக்குவதற்கும் வேண் டிய கருவிகளுடன் பணியாட்களும் எதிர்நோக்கி நின்றனர். உணவுச்சாலை ஏறக்குறைய ஈராயிரவர் இருந்து உண்ணும்படி யாக அமைக்கப்பட்டிருந்தது. அதன் பிற்பக்கத்தில் சமையல் செய்வதற்கான இடமும் அமைக்கப்பட்டிருந்தது. சைவர்கள் சமையல் செய்யும் வன்மை வாய்ந்த புலவர்களாக அமைந்திருந்த னர். காலைச் சிற்றுண்டி இவைகள் ஏராளமாக வழங்கப்பட் டன. வந்தவர்கள் தங்குவதற்குத் தனி இடங்களும் பொது இடங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அங்கங்கே தனித்தனியே வந்தவர்களுக்கு உண்டி, சிற்றுண்டி தனித்தனியே கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டன. இவைகளைப்பற்றிஎல்லாம் நாம் மகிழ்ச்சி யடையவில்லை. கேட்ட அளவில் சொற்பொழிவுகளைப் புத்தகவடிவில் அச்சிட்டு வெளியிட்டது மிக மிகப் பயனுள்ள தாகும். இது மட்டுமன்று. சந்நிதானம் கருணைகூர்ந்து சைவ நூல்களையும், தமிழ் நூல்களையும் அச்சிட்டு இலவசமாக வழங்கி வருகின்றனர். இவை தமிழ் நாட்டுக்குப் பெரிதும் உபகார மாகும். தமிழ்நன்மக்கள் சந்நிதானத்துக்கு இவ்வண் நன்மைக்கு கடைப்படுகின்றனர். இவைகளை எல்லாம் பார்க்கிலும் நாம் ஆச்சரியப்படும் பெரும் காரியம் ஒன்று இருக்கிறது. அது என்னவென்றால்? சொற்பொழிவுகள் ஒவ்வொருநாளும் எட்டு மணி நேரத்துக்குக் குறைவில்லாமல் நடந்தது. ஒவ்வொருநாளும் அவ்வெட்டுமணிநேரமும் மகாசந்நிதானம் தனி ஆசனத்தில்சொற் பொழிவு மண்டபத்தில் வீற்றிருந்து உடல் நிலையை சிறிதும்

பொருட்படுத்ாது அடியார்களுக்கு உணர்வை அளிப்பதில் சனகாதிகளுக்கு நம் முழுமுதற் கடவுள் இருந்து காட்டிய காட்சியைப் போல், சந்நிதானம் இருந்து காட்டிய கருணைத்திறத்தைச் சைவ நன்மக்களும், தமிழ் மக்களும் மறக்கவே மாட்டார்கள். மகாநாட்டின் வரவேற்பு, உபசரணை, அமைச்சர் பொருப்பு இவைகளுக்கு ஆதீனத்துத் தம்பிரான் மூர்த்திகளே அமைந்தது திருக்கூட்டத்தின் சிறப்பையும் திறமையையும் தெளித்துக் காட்டுகின்றது. இவ்விழாவை அணிபெற நடத்திய திறமை மகாநாட்டின் பொது அமைச்சர் மௌனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளைச் சார்ந்தது என்பதை வாய் கூசாமல் சொல்லுகிறோம்.

நவ இந்தியா, விஷு௵ புரட்டாசி௴ 5௳.

* * *

தவிர தற்காலமும் அநேக மடாதிபதிகள் தங்கள் பணியையும் பொருளையும், நற்காரியத்திற் செலவழிப்பதைக் காணலாம். உவமானமாக நமது தமிழ் மாகாணத்தில் செல்வத்திலும் கீர்த்தியிலும் மிகுந்து விளங்கும் தருமபுர ஆதீன பண்டார சந்நிதி அவர்கள் அநேக தமிழ் நூல்களை அச்சாக்கித் தமிழையும், தமிழ்க்கவிராயரையும் ஆதரித்து வருகின்றனர்.

விகடாத்தினம், 11—10—1941.

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு.

மாயவரத்திற்கு சமீபமாயுள்ள தருமபுரம் ஆதீன மடாலயத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ தருமபுரம் மகா சந்நிதானத்தின் ஆதரணையின்கீழ் தமிழ் நாட்டில் இதுகாறும் நடைபெறாத ஓர் மகாநாடு சென்ற 28—8—41 முதல் 31—8—41 முடிய நான்கு நாளைக்கு வெகு விமரிசையாக நடந்தேறியது. அம்மகாநாட்டிற்கு சுமார் ஆயிரம்பேர்களுக்கு மேல் வந்திருந்தார்கள்.

அம்மகா நாட்டில் முக்கியமாக மெய்கண்ட சித்தாந்தத்தைப்பற்றியுள்ள சிவஞான போதத்திலுள்ள 12 சூத்திரங்களை

பல ஊர்களிலிருந்து பிரபல வித்வான்களைக்கொண்டு தெளிவாக எடுத்துரைத்து ஜனங்களுக்கு மெய்கண்டான் அல்லது அத்வைத சித்தாந்தத்தின் தத்துவத்தைப்பற்றி உபன்னியாசம் நடத்தப் பெற்றது. 29-8-41 பழனியிலுள்ள வேதாகமபாடசாலைத் தலைமை ஆசிரியர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியாரவர்கள் மகாநாட்டின் தலைமையின் கீழ் சிவஞான போதத்தின் முதல் ஆறு சூத்திரங்களையும் அன்று பல வித்வான்களைக்கொண்டு விவரமாக எடுத்துரைக்கப்பட்டது. இந்துமத எண்டோமெண்டு போர்டு கமிஷனர் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியாரவர்களும் அன்று மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்தார்கள். ஒவ்வொரு சூத்திரமும் குறிப்பிட்ட பல வித்வான்களால் கட்டுரைகள் ரூபமாகவோ அல்லது உபன்னியாசமாகவோ தெளிவாகச் சொல்லப்பட்டது. 30-8-41வ யன்று எண்டோமெண்டு போர்டு கமிஷனர் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் சிவஞான போதத்தில் 7 முதல் 12-ம் சூத்திரம் முடிய முதல் நாள் நடந்தது போல் பல வித்வான்களால் உபன்னியாசம் நடந்தது.

நமது இந்து மதத்தின் முதன்மையாயுள்ள அத்வைத சித்தாந்தத்தின் தத்துவங்களை எடுத்துரைத்து ஜனங்களுக்கு அவைகளின் தாத்பரியங்களைத் தெளிவாகச்சொல்லி அவர்களுக்கு விவேகமும், பரலோக சாதகத்திற்குண்டான வழியும் காட்டக்கூடிய இத்தகைய மகாநாட்டைக்கூட்டிப் பல விடங்களிலுள்ள அறிஞர்களை ஒன்று சேரும்படிச் செய்து அவர்களின் அரிய போதனைகளைப் பல பொதுஜனங்கள் கேட்டுத் தங்கள் அஞ்ஞான இருளிலிருந்து வெளிவரச் செய்யும்படி ஏற்படுத்தியுள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ தருமபுரம் ஆதீனகர்த்தர் அவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம்.

இம் மகாநாடானது ஒவ்வொரு வருஷமும் நடைபெறுமென நம்புகிறோம். முதல் முதலாக ஏற்பட்டுள்ள இம்மகாநாட்டின் விமரிசையானது முக்கியமாய் ஆதீனத்தின் ஏகதேச

முயற்சியின் பயனே யொழிய வேறொருவருடைய யத்தனமும் இல்லை. இனிக் கூட்டப்படும் மகாநாடுகளில் பிறரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு இன்னும் விமரிசையாகச் செய்ய எத்தனிப்பார்களென்பதில் சந்தேகமில்லை. தற்காலம் தருமபுரத்தின் மடாலயத்துப் பீடத்தை வகித்து வரும் ஆதீனகர்த்தர் தாம் வந்தது முதல் சைவசித்தாந்தத்தைப் பரவச்செய்ய பல விதமான முயற்சிகள் எடுத்துக்கொண்டிருப்பது பலரும் அறிந்த விஷயமே. சைவசித்தாந்தத்தைச் சார்ந்த பல நூல்களைத் தாமே புத்தகரூபமாக அச்சிட்டு ஜனங்களுக்கு விலையில்லாமல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பொதுஜனங்கள் இதையுணர்ந்து அப்பெரியார் செய்துவரும் பேருதவியினால் தங்கள் ஞானத்தை விருத்தி செய்துகொண்டு அஞ்ஞான இருளைப் போக்கிக்கொள்ள மார்க்கம்தேடுவார்களேயானால் அதுவே அவர்கள் ஆதீனகர்த்தரவர்களுக்குச் செய்யும் பிரதியுபகாரமாகும்.

பாரத மணி, 17—10—1941.

## SIDDHANTA SAIVA VINA VIDAI

No. 40 Sri Dharmapuram Adheenam Series: 1941. (Manager Saiva Siddhanta Maha Samajam, Dharmapurm Adheenam, Dharmapurm. Price Rs. 0—3—6.)

This catechism on Saiva Siddhanta was prepared and published about 40 years ago by Sri K. Tirugnanasambanda Pillai of Trichy; and we owe this second edition to the zeal of His Holiness the present head of the Dharmapuram Math who has included it, with the permission of the nephew of the late author, in the series of the Saiva Siddhanta publications of the Adheenam which commenced in 1924. The book sets out in detail the basic doctrines of Pati, Pasu, and Pasa of the Saiva Siddhanta and enlarges upon several rules governing Saivite practices and observances and the stories or episodes evidencing their efficacy. Mukti according to the Siddhanta is explained and distinguished from other conceptions of Mukti in the concluding chapter; the intervening chapters are devoted to the elucidation of the singnificances of Murti, Sthala, Tirtha, and Acharya as well as of Sakti and Siva Kumaras in Saivite theology.

The Hindu, 23—11—'41

## சுன்னுகம் குமாரசாமிப்புலவர் வாசகசாலைக்குப் புத்தகங்கள் வரவு

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் மகா சந்நிதானம் பரமாசாரியர் அவர்களின் நன்கொடையாக, அவரால் எழுதப்பெற்று வெளியான (சைவசித்தாந்த நூல்கள்) 41 வெளியீடுகளுள் 26 பிரசுரங்கள் கிடைக்கப்பெற்றன என்றும், மேலும் புத்தகங்களின் வரவை எதிர்பார்க்கிறோம் என்றும் வாசகசாலைச் செயலாளர்கள் தெரிவித்து ஆக்கியோனுக்கு நன்றி கூறுகின்றார்கள். மேற்படி ஆதீனம் அவர்களின் கொடை மகிழ்ச்சிக்குரியதேயாகும்.

*சுதேசநாட்டியம்*, 29—11—1941.

## சித்தாந்த சைவ வினுவிடை

இது திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனத்து 40-வது வெளியீடாகும். இது திரிசிரபுரம் காலஞ்சென்ற திரு. கு. திருஞானசம்பந்தம் பிள்ளையால் எழுதப்பட்டு, ஷை ஊர் ஆசிரியர் K. பஞ்சநதம் பிள்ளை அவர்களால் பார்வையிடப் பெற்றது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவருளின்படி அச்சிடப்பெற்றது. உலகவியல், சித்தி இயல், வேதசிவாகம இயல், பதியியல், சக்தி இயல் முதலிய 12 இயல்களைக்கொண்டது. சைவமாணவர்கட்கும் முதியோர்கட்கும் உபயோகமானது. ஸ்ரீமத் மௌன சோமசுந்தரத்தம்பிரான் அவர்கள் முன்னுரையுடன் கூடியது.

## நால்வர் சரித்திரமும், தோத்திரத்திரட்டும்

இது திருத்தருமபுர ஆதீனத்து 41-வது வெளியீடு. ஆவணிமூலத் திருநாளில் வெளியிடப்பட்டது. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சரிதமும் குறிப்பும் எழுதியவர் சென்னை திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல்., அவர்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம் எழுதியவர் சென்னை மாகாண உதவிக் கல்விப்பகுதித் தலைவர் திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை பி. ஏ., எல். டி., அவர்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்

எழுதியவர் திருக்குறள் விளக்கம் ஆசிரியர் திரு. கி. குப்புசாமி முதலியார் அவர்கள். மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் எழுதியவர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல், அவர்கள். தேவாராதி தோத்திரத்திரட்டும் சேர்த்திருப்பது பாராயணம் செய்வோர்க்குப் பெரும் பயன் தருவதாகும்.

### சுப்பிரமணியர் திருவவதாரமும், கந்தர் கலிவெண்பாவும்

இது தருமபுரம் ஆதீனத்தைச் சார்ந்த மாயவரம் ஸ்ரீ குமரக்கட்டளை ஸ்கந்தஷஷ்டி உற்சவதினம் வெளியிடப் பெற்றது. இச் சிறுநூல் கந்தஷஷ்டி விரதமகிமை, வரலாறு, அதனை அனுட்டிக்கும் முறை முதலியவற்றை ஒரு பகுதியாக வுடையது. ஸ்ரீமத் குமரகுருபரசுவாமிகள் பாடியருளிய கந்தர் கலிவெண்பா என்னும் நூல் மற்றொரு பகுதியாகவுடையது. இக் கலிவெண்பாவை நித்தலும் பாராயணம் செய்வோர் வேண்டியபேறுகளைப் பெற்று நீடுவாழ்வர்.

### சித்தாந்த நிச்சயம்

இந்நூல் ஏகான்மவாதம், சிவசமவாதம், ஈசுரஅவிகார வாதம், பரிணமவாதம், சிவாத்துவிதம் என்னும் மதங்களை மறுத்து, சைவசித்தாந்தப் பரஞானத்தை உணரப் போதித்த லின் சித்தாந்தநிச்சயம் எனப்பெயர்பெற்றது. இந்நூலை அருளிச் செய்த பெரியார் ஸ்ரீ தருமபுர ஆதீனத்து 9-வது சந்நிதானம் திருநாவுக்கரசுதேசிகசுவாமிகள். மகாசந்நிதானம் கட்டளையிட் டருளியபடி அவ்வாதீனத்து மாதவமுனிவர் ஸ்ரீமத் சட்டைநாதத் தம்பிரான் அவர்கள் பரிசோதித்துதவ, சீகாழி வித்துவான் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்களால் பதிப்பிக்கப் பட்டது.

### சிவபூஜாவிதி

சிவபூஜை செய்யும் விதி சிவாகமங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அதனை வகுத்துப் பதினெட்டுச் சிவா

சாரியர்கள் பத்ததிகள் இயற்றினர். அவற்றுள் அகோரசிவா சாரியர் பத்ததியே பெரும்பாலும் பிரமாணமாகக்கொண்டு அநுட்டிக்கப்பட்டு வருகின்றது. அப்பத்ததியை அநுசரித்து, இச் சிவபூஜாவிதி என்னும் சிறந்த நூல் இயற்றப்பட்டிருக்கிறது. இதனை இயற்றியவர் சிதம்பரம் பெரியமடம் ஸ்ரீ சா. முத்துவேல்தேசிகர் அவர்களாவர். இவர்கள் பரம்பரைத் தேசிகர் மரபிலே வந்து உரிய தீக்ஷைகளெல்லாம் பெற்றவர். இவர் இயற்றிய இச் சிவபூஜாவிதி தருமையாதீனத்து 16-வது வெளியீடாகும். சைவசமயமும் ஆசிரியமும் செந்தமிழும் சைவ உலகிற் பரவவேண்டும் என்னும் பெருங்கருணையினலே பலநூல்களையும் அச்சிட்டு வழங்கிவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆக்ஞைப்படி இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது. அவர்கட்குச் சைவசமயிகள் ஒவ்வொருவரும் கடமைப்பட்டுள்ளார்கள். இந் நூலாசிரியர் இதுபோன்ற பல நூல்களை எழுதிச் சைவஉலகுக்கு உதவுமாறு எல்லாம் வல்ல சிவபெருமானைப் பிரார்த்திக்கின்றேன்.

சைவசாத்திர பரிபாலனம், தொகுதி 3 பகுதி 3—4 நவம்பர்–டிசம்பர் 41.

## DONATIONS TO THE POOR BOY'S FUND

### DONOR

His Holiness the Pandarasannadhi of Dharmapuram.

GOVERNMENT COLLEGE, KUMBAKONAM, 5—12—1941.

## SIVA PUJA VIDHI

By S. Muthuvel Desikar (Dharmapuram Adheenam Publications No. 46.)

This little book seeks to give in Tamil the instructions pertaining to the worship of Siva which are in Sanskrit. The text is printed in both Grantha and Tamil scripts and a description of the procedure to be followed is given in Tamil. The arrangement of the various icons for purposes of oblation and worship are explained by means of diagrams. The rituals described, we are informed, are based on the Paddhati of Sri Agora Sivachariar

of Chidambaram, one of the 18 Paddhaties, which are said to epitomise the Agamaik instructions

The Hindu, 7—12—'41.

## மதிப்புரை

ஞானசம்பந்தம்

இவ்வரிய திருநாமத்துடன் திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தினின்றும் வெளிவரும் ஓர் உயரிய திங்கள் வெளியீடு வரப்பெற்றோம். அவ்வாதீன கர்த்தரவர்களாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் சமயத்தையும் மொழியையும் வளர்ப்பதற்குச் செய்துவரும் பல்வகைச் செயல்களில் இதுவுமொன்றாகும். சமய வளர்ச்சிக்கு அவசியமான பலகட்டுரைகள் காணப்படுகின்றன. "அப்பர் தேவார அரும் பொருட் குறிப்பு", "சுந்தரமூர்த்தி நாயனர் தேவார உரை", "திருவாசகத்துள்மிளிரும் அம்மையப்பர் தொன்மைக் கோலம்" முதலியன மக்களுக்கு இன்றியமையாத தேவாராதி நுட்பங்களை எடுத்துக்காட்டுவதாக யிருக்கின்றன. இவற்றை எழுதியோர் பலரும் தங்கள் மதிநுட்ப நூலாராய்ச்சித் திறனுடனே எழுதியுள்ளார்கள். புறச்சமய இருளையோட்டி மெய்ச் சமய ஒளியை நிலைநாட்டிய ஞானசம்பந்தத்தின் பெயர் பத்திரிகைக்குச் சூட்டியிருப்பது சாலச் சிறப்புடைத்தாம். முதற் பக்கத்தில் மெய்கண்டார் திருவுருவப்படமும் இரண்டாம் பக்கத்தில் மகாசந்நிதானத்தின் திருவுருவப்படமும் புத்தகத்தை அலங்கரிக்கிறது. புத்தகம் கண்கவர் வனப்புடையதாய் நல்ல உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் மாயூரம் சந்திரா அச்சுக்கூடத்தாரால் அச்சிடப்பெற்றிருப்பது பாராட்டற்குரியது. எல்லோரும் எளிதில் வாங்கிப் படித்துப் பயன்பெறுதற்பொருட்டு ஆண்டுக்கட்டணம் மிகச் சொற்பமாக ரூ. 1—8—0 என்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

நவ இந்தியா, 21—12—1941.

## மதிப்புரை

ஞானசம்பந்தம்

[ஆசிரியர்:- மாயவரம், தருமபுர ஆதீனம் ஒடுக்கம் ஸ்ரீ சிவகுருநாதத் தம்பிரான் அவர்கள்].

இத் திங்கள் வெளியீட்டின் முதல் மலர் முதலிதழ் கிடைக்கப்பெற்றோம். அழகிய உயரிய கடிதத்தில் பல அறிஞர்களின் ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தாங்கிய இவ்விதழ், மக்களை ஞான மென்னும் ஒளியுடன் சம்பந்தம்பெறச் செய்கின்ற லட்சியத்துடன் மிளிர்கின்றது. சுருங்கக் கூறின் சைவ நெறியாளர்களுக்கு இது தெவிட்டாத ஞான விருந்தாக விருக்கின்றதெனின் மிகையன்று.

செட்டிநாடு, 25—12—1941.

ஞானசம்பந்தம்:- இது தருமபுர ஆதீனத்திலிருந்து விஷு ஹு கார்த்திகைமீ தொடங்கி இயங்கி வரும் ஒரு திங்கள் வெளியீடாகும். **தருமபுர ஆதீனத்து ஒடுக்கம் ஸ்ரீ சிவகுருநாதத் தம்பிரானவர்கள் இதன் ஆசிரியராவர்.** இதன் ஐந்தாவது இதழ் நமது பார்வைக்கு வந்தது. அதில் அறிஞர் பலர் வரைந்த தமிழ்ப் பொருளுரைகளும், ஆங்கிலக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. அவை தமிழறிவும் சைவசமயவுணர்வும் வளர உதவுவன. இது மேன்மேலும் வளர்ந்து தமிழ்த்தொண்டும் சைவ சமயப்பிரசாரமும் தக்கவாறு புரிந்துவருமென்று நம்புகிறோம். தருமபுர ஆதீனத்தார் தங்கள் ஆதீனத்துக்குச் சொந்தமான ஆலயங்களில் திருவிழா நிகழுங்காலத்துத் தக்க புலவர்களால் தமிழுணர்வும் சமய அறிவும் மிகுமாறு பிரசாரம் புரிந்து வருவதுடன் இத்திங்கள் வெளியீட்டினாலும் அதனைத் திறம்பட நடத்த முற்பட்டிருப்பது பாராட்டத்தக்கது.

செந்தமிழ் தொகுதி ௩௯ பக்கம் ௩௯அ.

## மதிப்புரை

ஞானசம்பந்தம்

மேற்படி திங்கள் வெளியீட்டின் முதலாவது மலர் முதலாவது இதழ் வரப்பெற்றோம். இஃது, திருக்கயிலாய பரம்பரைத்

திருத்தருமபுர ஆதீனம், 24-வது மகா சந்நிதானம் ஸ்ரீ சண்முகதேசிக பரமாசாரிய சுவாமிகளின் 35-வது ஆண்டின் நிறைவுவிழா நினைவுமலராக வெளிவரும் ஓர் சிறந்த சைவப் பத்திரிகையாகும். கலிமுற்றிய இக்காலத்தில், இத்தகைய சைவப் பத்திரிகைகள் வெளிவருவது மகிழ்ச்சிக்குரிய செயலேயாகும். ஆலயங்களும் மடங்களும் சைவத்தொண்டு செய்யாது வாளா கிடக்கின்றன எனக் குறைகூறப்படும் இக்காலத்தில் தருமபுர ஆதீனத்தார் இத்தகைய சைவத்தொண்டில் ஈடுபட்டு முனைந்து நிற்பது சைவ வளர்ச்சிக்கு ஓர் சிறந்த அறிகுறியாம் என்பதில் எட்டுணையேனும் ஐயம் இல்லை என்று கூறுவது மிகையாகமாட்டாது. மனம்போனவாறு சைவசமய நூல்களுக்கெல்லாம் புதுமைக் கருத்துக்கள் கற்பித்துக்காட்டும் இக்காலத்தில், இத்தகைய வெளியீடுகள் வெளிவருவது பெரும் பயன் தருவதாகும். சமய குரவர்களில் ஒருவராகிய சீகாழிப் பெருமானாராம் திருஞான சம்பந்த சுவாமிகளதும், தருமபுர ஆதீனத்து 24-வது சந்நிதானம் பரமாசாரிய சுவாமிகளதும் நாமசம்பந்தம்பெற்று, வெளிவரும் இத்திங்கள் வெளியீட்டினால், சைவநன்மக்களாகிய நாமெல்லாம் ஞானசம்பந்தம் பெற்று உய்ந்திடேறுவோமென்பது திண்ணம்.

தருமபுர ஆதீன ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், நமது நால்வர் பெருமான்போன்று, சைவத்தை வளர்ப்பதற்கென்றே கங்கணங்கட்டி நிற்பவர் என்பது தமிழ் நாடறிந்த விஷயமேயாகும். வேதசிவாகம பாடசாலை, சைவ சித்தாந்தசாத்திர பாடசாலை முதலியன தாபித்தல் இப்பரமாசாரிய சுவாமிகளது சைவத்தொண்டுகளிற் சிறந்தனவாம். இத்தொண்டுகளே நமது நாவலர் பெருமான் அக்காலத்திற் செய்யத் தொடங்கியவை.

நாவலர் அவர்கள் இன்று இருப்பரேல், பரமாசாரிய சுவாமிகளது தொண்டுகளைக் கண்டு மனமகிழ்வெய்துவ ரன்றோ?

இத்திங்கள் வெளியீட்டின்கண்ணே ஆழ்ந்த கருத்துள்ள சிறந்த கட்டுரைகள் பல மிளிர்கின்றன. அவை படிக்கப் படிக்கத் தெவிட்டா இன்பம் பயப்பவை. திரிபுணர்ச்சிகளை அறவேநீக்கி அஞ்ஞான இருளை அகற்றுவன. வெளியீட்டின் முகப்பில் மெய்கண்டதேவரின் திருவுருவம் நமக்குக் காட்சி தருகின்றது. பரமாசாரிய சுவாமிகளது திருவுருவப்படம் நமது கட்புலனுக்கு நல்விருந்து நல்குகின்றது. அவரது சிவவேடப் பொலிவு போற்றும்தரத்ததாய் விளங்குகின்றது. தோற்றுவாய் ஞானசம்பந்தத் திருநாமத்தின் அர்த்தம் காரண காரியமுறையே விளக்கப்பெற்றிருக்கின்றது. "அப்பர் தேவார அரும்பொருட் குறிப்பு" என்ற விஷயத்தில் வித்வான் K. M. வேங்கடராமையா M. A., B. O. L., அவர்கள் அப்பர் சுவாமிகளது வரலாற்றினை யும், அவர்க்குச் சூலைநோய்வந்த காலவரையறையையும், "கூற்றா யினவா" வென்றதற்றொடக்கத்துத் தேவாரத்திருப்பதிகத்தின்மூலம் நன்கு தெருட்டுகின்றார். சிதம்பரம் சிவஞானத்திருத்தளி ஸ்ரீ செப்பறைச்சுவாமிகள், "சுந்தரமூர்த்திநாயனர் தேவாரம்உரை", என்ற தலையங்கத்தில் தம்பிரான்றோழரோடு நம்மையும் தோழ ராக்குகின்றார். தருமபுரம் திரு. K. ஞானசம்பந்தம் பிள்ளை அவர் கள், "திருவாசகத்தில் மிளிரும் அம்மையப்பர் தொன்மைக் கோலம்" என்ற கட்டுரையில், அக்கோலத்தை நமக்கு அப்படியே திறந்துகாட்டுகின்றார். வித்துவான் திரு. ச. தண்டபாணிதேசிகர் அவர்கள், "சித்திரச்சொக்கர் திருமுகப்பாசுரம்" என்பதை வாசகர்களுக்கும் ஒரு பாசுரமாக்குகின்றார். தோரமங்கலம் ஆசிரியர் திரு. அ. வரதநஞ்சையபிள்ளை அவர்கள், "சைவத்தின் இருகண்கள்" தந்து எம்மை மகிழ்விக்கச்செய்கின்றார். வித்து வான் திரு. ந. சிவப்பிரகாசதேசிகர் "விநாயகர் தத்துவத்தின்" உண்மைகளை அள்ளிச்சொரிகிறார். இப்பால், பரமாசாரிய "சொக்கநாத வெண்பா", நமக்குப் பேரின்பம் தருகின்றது. அதற்குத் திரு. மீ. சுந்தரம் பிள்ளை இயற்றிய விளக்கவுரை அவ் வெண்பாவின் பொருளை நன்கு விளக்கிச் செல்கின்றது. பண்டித திரு. சி. நாராயணசாமி அடிகளது "தருக்கசங்கிரகம்", தருக்கசாத்திர நுண்பொருள்களின் ஐயமறுத்து மெய்ப் பொருளைக் காண்பிக்கின்றது. திருநந்தி தேவர்பெற்ற பதினறு

பேறுகளை நாமும் பெறுமாறு, ஈற்றில் அவை விளங்குகின்றன. சூரியனார்கோயில் ஆதினத்து ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் அவர்கள், சிதம்பரம் வித்துவான் சைவத்திருவாளர் ந. சிவப்பிரகாசதேசிகர் அவர்கள், கனம் டாக்டர் T. S. S. ராஜன் அவர்கள், சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் B. A., அவர்கள், சைவத்திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L., அவர்கள், தருமபுர ஆதின வித்துவான் திருவாளர் காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B. A., அவர்கள், டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், ராவ்சாகிப் S. வையாபுரிப் பிள்ளை B. A., B. L., அவர்கள் ஆகியோர் இவ்வெளியீட்டுக்கு வாழ்த்துரைகள் வழங்கியுள்ளார்கள்.

இச் சைவசித்தாந்த வெளியீட்டின் வரவுகண்டு நாம் மிகவும் மகிழ்ச்சிபூக்கின்றோம். வரவேற்கின்றோம். நல்லாசி கூறுகின்றோம். இதன் வரவால் மாயாவாதம் முதலிய புறச் சமயவிருள்நீங்கிச் சைவநாடு சிவஞான ஒளிகொண்டு திகழு மென்பதொருதலை. இதனை வெளியிட்ட தருமபுர ஆதீனத் தாருக்கு நாம் மனமுவந்த நன்றி கூறுகின்றோம். ஞானசம்பந்தம் வாழ்க. பரமாசாரிய சுவாமிகள் திருவடி வாழ்க.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்"

வாழ்த்து வெண்பா

சித்தாந்த ஞானமெனும் தேனமிர்தத் தின்சுவையைப்
பத்தரெலா முண்டு பயனடைய—வைத்த
தருமபுர வாதீன ஞானசம் பந்தஒரு
வெளியிட்டைத் துதிப்போம் ஓர்ந்து.

விருத்தம்.

நற்றவத் துயர் ஞானசம் பந்தமாம்
பத்தி ரம்பரி பாலிக்க வின்னருள்
முற்றும் நல்க முழுமதி யைச்சடை
வைத்த ஈசன் மலரடி போற்றுவாம்.

மாநி லத்திற் சிவமதம் மாண்புறத்
தானு தித்திடு சண்முக தேசிக
ஞான சம்பந்த நற்குரு வாழிய
ஞான சம்பந்த முங்கனி வாழியே.

சுதேசாபிமானி, 14—1—1942.

மதிப்புரை

ஞானசம்பந்தம்

தருமபுர ஆதீனம் ஒடுக்கம் சிவகுருநாதத் தம்பிரான் அவர்களை ஆசிரியராகக்கொண்டு ஒவ்வொரு இங்கிலீஷ் மாதமும் 10உ வெளிவரும் ஞானசம்பந்தம் என்னும் மாதாந்தர சஞ்சிகையின் 1-வது மலர் 2-வது இதழ் வரப்பெற்ரேம். தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ் மக்களின் மதம் ஆசாரம் அனுஷ்டானம் ஒழுக்கம் கல்வி ஆகிய இவற்றின் மேன்மைக்கும் இப்பத்திரிகை சேவை புரிவதற்கு ஏற்றதாய்க் காணப்படுகிறது. தமிழிலும் சைவ சித்தாந்த சாத்திரத்திலும் நுண்மாண் நுழைபுலமுடைய பெரியோர்களால் எழுதப்பெறும் கட்டுரைகள்கொண்டதாய், கற்ரேர்களுக்கு இன்பம் பயக்கும் அரிய பத்திரிகை.

அகஸ்தியன், 1—2—1942.

## Siddhanta Saiva Vina Vidai and Nalvar Charitram:

Dharmapuram Adheenam Series: Nos. 40 and 41: PP 160 and 76:

Price 3 annas 6 pies and two annas respectively.

No part of India excels the Tamil land in the recent output of cheap editions of classical devotional literature in the Indian languages. The Dharmapuram Adheenam has enlisted the services of eminent Tamil Saivite scholars to compile, edit or write these and has published them in neat editions for nominal prices. The catechism was first prepared 40 years ago based on the classics and has 576 questions in 12 sections. Popular religion including worship, rituals, priest-hood is explained in brief forms. The questions raised are searching.

The second of these books is life story of the four famous Tamil Saints, Appar, Sundarar, Tirugnana Sambandar and Manikka-Vasagar. The writers are modern educated scholars who have reduced legends to a minimum and written forceful Tamil.

The Guardian, 12—3—'42.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ வைத்தீசுவரன் கோயில் தேவஸ்தானத்தில் ஸ்ரீ நாயர் சன்னதிக்கு நகாஸ்வேலை செய்த வெள்ளி அலங்காராசனம் சுமார் ரூ. 2500 கிரயத்தில் செய்யப்பெற்று, அதில் அவ்வாதீனம் 24-வது குரு மூர்த்தியாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் திருவருட் செங்கோல் செலுத்துங் காலத்தில் [1942] செய்துவைக்கப் பெற்றதென்பதுடன், ஸ்ரீ ஐம்பெருங் கடவுளர், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம், அத்தேவஸ்தான கட்டளை ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் ஆகியவர்களுடைய திருவுருவங்களும் அமைக்கப் பெற்றுள்ளன. இவ்வாசனத்தால் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருப்பெயர் என்றும் பொன்றுதலின்றி விளங்கத்தக்கதாகும்.

யதார்த்தவசனீ, 15—3—1942.

வேதசிவாகம பாடசாலை

தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த வேதசிவாகமபாடசாலை நன்கு நடத்தப்பட்டு வருகிறது. இதில் 12 மாணவர்கள் வேத ஆகமக் கல்வியை கற்றுவருகிறார்கள். இதற்கு ஆசிரியராக சிவபுரம் ஸ்ரீ சுவாமிநாதசிவாசாரியார் நியமிக்கப்பட்டிருக்கிறார். மாணவர்களுக்கு இருக்க இடமும், உணவும், உடையும் அளிக்கத்தக்கவசதிகளை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் ஏற்கனவே ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

தருமபுர ஆதீனம் நிர்வாகத்தில் இவ்வருடம் 14 மாணாக்கர்களுக்கு (வெளியூர்) ஸ்காலர்ஷிப்பு கொடுக்க ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் உத்திரவிட்டிருக்கிறார்கள்.

சுதேசமித்திரன், 21—3—1942.



தருமையாதீன 24-வது மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளும்**

ஆதீன ஆதிபரமாசாரிய சுவாமிகள் குருபூசையை ஒட்டி மடாலயத்தில் நடந்த சித்தியார் வகுப்பு மாணவர்களும்

சித்தாந்தம்

சென்னை சைவ சித்தாந்த மகாசமாஜம் 37-வது சைவர் மகாநாடு வரவேற்புரை

*　　*　　*

(திரு. S. சுப்பராயமுதலியார் அவர்கள், சீர்காழி.)

சமயப் பணியையே தம் பணியெனக்கொண்டு, கடந்த ஆண்டு மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டைத் திறம்பட நடத்தியும், சிவாலயத் திருப்பணி பல செய்தும், பல புலவர்களால் சமயச் சொற்பொழிவாற்றுவித்தும், சமயவுண்மையை நிலைநாட்டிவரா நின்ற தருமபுரம் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதீனகர்த்தரவர்கள் இம் மகாநாட்டைத் திறந்தருள எழுந்தருளியுள்ள பெருமை எம்மனோரால் பெரிதும் பாராட்டற்பாலது.

*　　*　　*

சித்தாந்தம், 1943ம் வருடம் மார்ச்சுமீ இதழ் ங.

தருமபுரத்தில் குருபூசை வைபவம்

இந்துமத ஸ்தாபன போர்டு தலைவர் பிரசங்கம்

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் குருபூசை விழா 25, 26ம் தேதிகளில் சிறப்பாக நடந்தது. ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதியால் பக்தி சிரத்தையோடு குருபூசை, மாகேசுவரபூசை முறையே இருதினங்களிலும் செய்யப்பட்டது. தென் இந்தியாவின் பல பக்கங்களிலிருந்தும் வந்திருந்த பக்தகோடிகளுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானம் பிரசாதங்கள் கொடுத்து ஆசிர்வதித்தார். சைவாசரணைப்படிக்கு இரு தினங்களிலும் சகலகாரியங்களும் செவ்வனே நடைபெற்றது. குருபூசை சமயத்தில் பல வித்வான்கள் சமயப் பிரசங்கங்களை நிகழ்த்தினர்கள். குருபூசைப் புனிதநாளைக் கொண்டாடும் சந்தர்ப்பத்தில் தமிழ் வித்வான்களுக்காக சிவஞானசித்தி உபந்நியாசப்பாட வகுப்பை 24—5—43 முதலாக

(பிரதிதினம் மாலை 6-மணிக்குத்) துவக்கி ஒரு வாரம் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதைப் பழனி வேதாகம பாடசாலை ஸ்ரீ ஈசான சிவாசாரியார் உபந்நியசித்து வருகிறார். இவ்வாதீனத்துக்குச் சொந்தமான ஸ்ரீ ஞானபுரீஸ்வரசுவாமி எட்டாம் திருநாளன்று ஆஸ்தான மண்டபத்தில் இசையரசு, தேவாரமணி ஸ்ரீமான் எம். எம். தண்டபாணி தேசிகரால் இன்னிசைக் கச்சேரி 25—5—43 இரவு 7-மணிக்கு நடத்தப்பட்டது. குருபூசைத் திருநாளில் பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு அறுசுவை அன்னமிடப்பெற்றது. இரவில் பட்டணப் பிரவேசம், உயர்தர நாதசுர வித்வான்களின் கானத்துடனும், பரதநாட்டியங்களுடனும் நடைபெற்றது. சென்னை இந்துமத ஸ்தாபன போர்டு கமிஷனர் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் இங்கு விஜயம் செய்தார். மாலை நடந்த உபந்நியாச முடிவில் இது போன்ற உயர்ந்த சித்தாந்த லக்ஷியங்களை வியாபிக்கச் செய்ய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானம் திருவுளங்கொண்டு நடத்தி வரும் சித்தாந்தப் பிரசாரங்கள் என்றென்றும் பாராட்டத்தக்கதென்றும், இதைப்போல ஒவ்வொரு மடாலயங்களில் சைவ சித்தாந்தப் பிரசாரங்களைச் செய்தால் நாடு செழித்து மக்களும் நல்வழிப்பட ஹேதுவாகும் என்றும் அவர் குறிப்பிட்டார். தமிழ்நாடு சாரணப்படை ஆறுபாதி கிராமத்தில் முகாம் செய்திருப்பதால் அவர்கள் பட்டணப் பிரவேசத்திற்கு வந்து தொண்டாற்றினர்கள்.

## தருமபுரத்தில் டுனிஷியா தினம்

## நாலாயிரம் ஏழைகளுக்கு அன்னதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானம் அவர்கள் ஆக்ஞைக்கிணங்கத் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான சகல தேவாலயங்களிலும் டுனிஷியா வெற்றிக் கொண்டாடப்பட்டு மேன்மேலும் வெற்றிகிடைக்கப் பிரார்த்தனைகள் நடந்தன. 4000 ஏழைகளுக்குத் தருமபுரத்தில் அன்னமிடப்பட்டது. 2500 குழந்தைகளுக்கு இனிய தின்பண்டங்கள் வழங்கப்பட்டது.

சுதேசமித்திரன், 31—5—43.




மன்னம்பந்தலில் நடைபெற்ற

தருமபுர ஆதீனம் சாரணக் குருளைய ஆசிரியப் பயிற்சி முகாம். 7—6—43

* * *

His Holiness Sri-La-Sri Shanmuka Desika Gnanasambanda Paramacharya Swamigal, 24th Mahasannithanam, took special interest in this course, and financed it to a very large extent. We are most grateful to His Holiness for the munificent help. A Tamil account of the camp appears in this issue.

* * *

தருமபுரம் ஆதீன 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அன்பு மேலீட்டால் மேற்கண்ட பயிற்சியில் அதிக அக்கரை கொண்டு வேண்டிய அளவு பொருளுதவி செய்தார்கள்.

30—5—43 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-மணிக்கு ஷை பயிற்சியின் பார்வையாளர் தினம் கொண்டாடப்பெற்றது. தேனீர் அருந்திய பிறகு விருந்தினர் யாவருக்கும் முகாமின் பல வித அம்சங்களும் காட்டப்பட்டன. அன்றைய விழாவிற்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் அவர்கள் தலைமை வகித்துக் குருளையர்கள் ஒவ்வொருவரும் பொதுஜனசேவை செய்யும் பொழுது அவரவர் சமயத்திற்கும் தொண்டாற்றவேண்டும் என்னும் பொருள்பட திருக்குறள், தேவாரம் முதலியவற்றி லிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டி உபதேசித்தருளினார் கள்.

31—5—43 திங்களன்று விசேஷ அழைப்பின் பேரில் பயிற்சிபெற்ற குருளைய ஆசிரியர்கள் யாவரும் தருமபுரம் மடா லயத்திற்குச்சென்று அங்கே மடத்தின் பல பாகங்களையும் அதைச்சேர்ந்த நந்தவனம், நூல் நிலையம் முதலியவற்றையும் கண்ணுற்று மகிழ்ந்தார்கள். பிறகு அவர்களை மகாசந்நிதானம் அன்புடன் வரவேற்றுத் தரிசனம் அளித்து இந்துமத பால பாடம் என்ற புத்தகம்ஒன்று ஈந்தருளினார்கள். ஆசிரியர்கள்

யாவரும் மகாசந்நிதானம் தங்களுடைய பயிற்சிக்காக மன முவந்து அளித்த பெருதவிக்குத் தங்களுடைய நன்றியறிதலையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டு திரும்பினார்கள்.

South India Boys Scout, Vol. No. 10 July 1943.

## மதிப்புரை

நீதிநெறி விளக்கம் (மூலமும் உரைவளமும்) பதிப்பாசிரியர், தருமபுர ஆதீன வித்துவான் திரு. காழி. சிவ. கண்ணுசாமிபிள்ளை B.A., அவர்கள். வெளியிட்டோர், தருமபுர ஆதீனத்தார்.

ஆசிரியர் குமரகுருபர அடிகள் அருளிச்செய்த அரிய நூல் நீதிநெறிவிளக்கம் என்பது. அதற்குப் பன்னிருவர்க்கு மேல் உரையாசிரியர் உளர். நூலின் மூலமும், அவ்வவ் வுரை யாசிரியர் கண்ட உரைவளமும், ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் சிலவும் இந்நூலில் ஒருங்கு தொகுக்கப்பெற்றுள்ளன. அன்றி யும் பதிப்பாசிரியருடைய பதவுரை, உரைநடை, கருத்துரை, மேற்கோள், விளக்கக் குறிப்புகள் என்பனவும், நூற்பதிப்பின் பகுதிகளாக நூலின்முன் ஒரு நல்ல முகவுரையும், நூலின்பின் பொருள் அட்டவணை, செய்யுள் முதற்குறிப்பு, சொல்லகராதி என்பனவும் அமைந்துள்ளன.

இதுகாறும் நீதிநெறி விளக்கத்துக்கு இங்ஙனமொரு சிறந்த தொகுப்புப் பதிப்பு வெளிவரவில்லை. தருமபுர ஆதீனத் தின் அருட்குரவர் ஸ்ரீவத்திரு சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய அடிகள் இவ்வரிய பதிப்புக்கு ஆதரவாயிருந்து வெளியிட்டருளிய பெருமை மறப்பதரிது. இவர்கள் திருவுருவப்படமும், நூலாசிரியர் திருவுருவப்படமும், தக்கோர் அணிந்துரைகளும் இணைந்து ஏறக் குறைய 400 பக்கங்கள் உள்ளன. பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் இப்பதிப்பு மிக்க உதவியாயிருக்கும்.

திருவாரூர் நான்மணிமாலை (மூலமும் வசனமும்): வெளியிட்டோர்: தருமபுர ஆதீனத்தார். விலை: அணா 2.

இந்நூலின் ஆசிரியர் குமரகுருபர அடிகள். அடிகள் இயற்றியருளிய நூல்கள் யாவும் சொற்சுவை பொருட்சுவை நிரம்பி, அவர்களுக்கென்றே தனியாக அமைந்த அழகிய கொழுவிய தமிழோசை அமைந்தவை. சைவ சித்தாந்த நுண் பொருள்கள் ததும்பி நிற்பவை. இத்தகைய அரிய நூல்களுள் ஒன்றான திருவாரூர் நான்மணிமாலை என்பது, இப்போது திருத்தமான பதிப்பாக இவ்வாதீனத்தின் திருவாரூர், கட்டளை விசாரணை ஸ்ரீலஸ்ரீ. முத்துக்குமாரசுவாமி தம்பிரான் அவர்களால் வெளியிடப்பெற்றுள்ளது. இப்பதிப்பின் சிறந்த அணிகலன் இதற்கு அமைந்திருக்கும் வசனப்பகுதியாகும். இது செய்யுள் தொடர்களை விடாது தழுவி நல்ல நடையில் திறம்படத் தெளிவாக அமைந்துள்ளது. சைவசித்தாந்த ஞானமும் செந்தமிழறிவும் ஒருங்கு வாய்ந்துள்ள சிவநேயச் செல்வர் திருவாளர் ரா. சண்முக சுந்தரஞ் செட்டியாரவர்கள் கைவளமே இவ்வசனம்.

நூலாசிரியர் வரலாறும், செந்தமிழ்ப் புரவலர் கோவை கிழார் அவர்கள் இந்நூலையும் உரைநடையையும் நுகர்ந்து வியந்தெழுதிய அழகிய மதிப்புரையும் நூலின் முகப்பில் உள்ளன.

செந்தமிழ்ச்செல்வி, சுபானு ஆனி மீ பால் அ.

திருவாரூர் நான்மணிமாலை (மூலமும் வசனமும்)

இந்நூல் ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகளால் அருளப் பட்டது. மூலத்தின் சுவையையும், கருத்தையும் எல்லோரும் படித்து இன்புறத்தக்கமுறையில் 'திருவாரூர் நான்மணிமாலை' க்கு திரு. ரா. ஷண்முகசுந்தரஞ் செட்டியார் வசனமெழுதியிருக்கிறார். இவ்வரிய நூலின் விலை 0-2-0.

நீதிநெறி விளக்கம் (மூலமும் உரைவளமும்)

ஸ்ரீமத் குமாரகுருபர சுவாமிகள் அருளியது. 'நீதிநெறி விளக்கம்' திருக்குறள் முதலிய பழைய தமிழ் நீதிநூல்களின் சாரமாகும். இந்நூலுக்கு திரு. சிவ. கண்ணுசாமிபிள்ளை எழுதியுள்ள தொகுப்புரை நல்ல முறையில் அமைந்திருக்கிறது. ஒவ்வொரு பாட்டிற்குரிய பொருளையும், விசேஷ உரைகளையும், லட்சணங்களையும் இத்தொகுப்புரை தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறதெனலாம். பாடல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பும் அடியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தின் விலை 0-8-0 (பிரஸ்தாப இரு நூல்களும் தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் திருவுளப்பாங்கின்படிப் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. இவை நல்ல முறையில் குறைந்த விலைக்குக் கிடைக்கும்படி வெளியிட்டிருப்பது போற்றத்தக்கதாகும்.)

வீரகேசரி, 4—6—1943.



23-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் காலத்தில் வெளியிடப்பட்டவை.

| நெ. | விபரம். | வெளியிடப்பட்ட வருஷம். |
|---|---|---|
| 1 | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு | 1924 |
| 2 | நித்திய கன்மநெறி | 1927 |
| 3 | திருமுல்லைவாயிற் புராணம் | 1927 |
| 4 | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | 1927 |
| 5 | சித்தாந்த நிச்சயம் | 1928 |
| 6 | சம்பிரதாய தீபம் | 1928 |
| 7 | வருணாசிரம சந்திரிகை | 1930 |
| 8 | சிகாரத்தின மாலை | 1930 |
| 9 | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | 1930 |
| 10 | தசமணி மாலை | 1930 |
| 11 | ஞானசம்பந்த குருராய வட்டகமும், சந்திரகலா மாலையும் | 1930 |
| 12 | திருவையாற்றுப் புராணம் | 1930 |
| 13 | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14 | சோடச கலாப்பிராசாத சட்கம் | 1931 |
| 15 | சைவசன்யாச பத்ததி | 1932 |
| 16 | சிவபோகசாரம் | 1932 |
| 17 | சிவப்பிரகாசக் கட்டளை | 1932 |
| 18 | 23-வது மகாசந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடற்றிரட்டு | 1933 |

24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் காலத்தில் வெளியிடப்பட்டவை.

| | | |
|---|---|---|
| 19 | திருத்துருத்திப் புராணம் | 1933 |
| 20 | ஞானசரிதை | 1934 |
| 21 | முத்தி நிச்சயம் | 1934 |
| 22 | அறிவானந்த சமுத்திரம் | 1935 |
| 16 | சிவபோகசாரம் இரண்டாம் பதிப்பு | 1936 |

| | | |
|---|---|---|
| 23 | பண்டாரமும்மணிக்கோவை | 1937 |
| 24 | இந்துமத பாலபாடம் | 1937 |
| 25 | சிதம்பரச் செய்யுட்கோவை | 1937 |
| 26 | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | 1937 |
| 27 | கிளிவிடு தூது | 1938 |
| 28 | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| 17 | சிவப்பிரகாசக் கட்டளை இரண்டாம் பதிப்பு | 1939 |
| 29 | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30 | சிவஞானதேசிகர் நான்மணிமாலை | 1940 |
| 31 | திருபுவனத்தலமகிமைச் சுருக்கம் | 1940 |
| 28 | திருமுலைப்பால் சிறப்பு | 1941 |
| 32 | கீர்த்தித்திருவகவல் | 1941 |
| 33 | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளின் வரலாறும் சில பாசுரங்களும் | 1941 |
| 34 | வைத்தீஸ்வரன் கோயில் தேவாரம் திருப்புகழ் | 1941 |
| 35 | திருத்தொண்டத் தொகையும் அசபாநடன பதிகமும் | 1941 |
| 36 | குங்கிலியக்கலய நாயனர் அன்பின்திறம் | 1941 |
| 37 | திருக்கடவூர் தேவாரம் திருப்புகழ் | 1941 |
| 38 | திருவையாற்றுத் தேவாரங்கள் | 1941 |
| 39 | புள்ளிருக்கு வேளூர்ப் புராணம் | 1941 |
| 40 | சித்தாந்த சைவ வினவிடை | 1941 |
| 41 | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |
| 42 | ஆச்சாள்புரம் கோயில் வரலாறு | 1941 |
| | ஷை ஷை இரண்டாம் பதிப்பு | 1943 |
| 43 | திருவையாற்றுக் கோயில் வரலாறு | 1941 |
| | ஷை ஷை இரண்டாம் பதிப்பு | 1943 |
| 44 | ஸ்ரீசுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலி வெண்பாவும் | 1941 |
| 45 | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்தமகாநாடு திருமுறைத் திருநாள் | 1941 |
| 46 | சிவபூஜாவிதி | 1941 |
| 47 | சைவாநுஷ்டானவிதி | 1941 |
| 48 | திருக்கடவூர் உலா | 1941 |
| 49 | திருப்பாடல்கள் | 1942 |
| 50 | விநாயகர் அகவல்கள் | 1942 |
| 51 | சீகாழித் தலவரலாறு | 1942 |
| 52 | மெய்கண்ட சாத்திரம் | 1942 |

| | | |
|---|---|---|
| 53 | கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54 | நீதிநெறி விளக்கம் | 1943 |
| 55 | திருவாரூர் நான்மணிமாலை | 1943 |
| 56 | சகல கலா வல்லிமாலை | 1943 |
| 57 | கந்தரனுபூதி | 1943 |
| 58 | குத்தாலம் தலவரலாறு | 1943 |
| 59 | குறுக்கைத் தலவரலாறு | 1943 |
| 60 | திருப்புவனம் தலவரலாறு | 1943 |
| 61 | திருக்கடவூர்த் தலவரலாறு | 1943 |
| 62 | வேளூர்த் தலவரலாறு | 1943 |
| 63 | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64 | பத்தாண்டு ஆட்சி மலர் | 1943 |